SvAmi Desikan's

# abhayapradAna sAram





Meaning and Commentary By

" SrI DeSika DarSana durantarar "

VaikuNThavAsi u.vE. SrI PudukkOTTai

A.Srinivasa Raghavachar svAmi

ஸ்ரீ:

ஸ்ரீ நிகமாந்த மஹாதேசிகன்
அருளிச்செய்த ரஹஸ்யங்களில் ஒன்றான

# அபயப்ரதான ஸாரம்.

புதுக்கோட்டை, மஹாராஜா காலேஜ்
ஸ்ரீநிவாஸராகவாச்சாரியார் M.A.,
அவர்களால்
முகவுரை, குறிப்புரை முதலியவற்றுடன் எழுதப்பட்டு

கும்பகோணம்
ஸ்ரீ விசிஷ்டாத்வைதஸபையின் சார்பாக

திவான்பகதூர்
S. ராகவய்யங்கார் அவர்களால்
பிரசுரிக்கப்பட்டது.

கும்பகோணம்
ஸ்ரீ ஜனார்த்தன பிரிண்டிங் ஒர்க்ஸ் லிமிடெட்டில்,
பதிப்பிக்கப்பட்டது.



விலை] 1935. [அணா 8.



**Sri A Srinivasa Raghavan Swamy and Smt Padmasini Ammal**

## Publishers' Note.

We have very great pleasure in publishing the ABHAYA PRADANA SARA of Sri Nigamanta Maha Desika as the second of the series of works published by the Sri Visishtadvaita Siddhanta Sabha, Kumbakonam. It is our object to place the principles of Visishtadvaita in general and the works of Sri Nigamanta Maha Desika in particular within easy reach of the lessSanskrit-knowing Tamil public; and we should feel rewarded if this is achieved. We are highly indebted to Mr Desikachariar, Superintendent of Post Offices (Retd) for suggesting the idea of publishing this work and also for liberally contributing towards the cost of the publication. Our thanks are due to Mr A. Srinivasa Raghavan M. A. of the Maharaja's College, Pudukkottah for editing this valuable book with translitertion and translation of the Slokas and verses quoted and with explanatory foot-notes and for preparing very valuable indexes of the authorities quoted, of names, and of verses in Sanskrit and Tamil, and a summary of quotations. We are also much obliged to him for the introduction which gives a concise and clear idea of the "Saranagati Sastra."

*25th September 1935.* **The Publishers.**

ஸ்ரீ:

# முன்னுரை

ஸ்ரீ நிகமாந்தமஹாதேசிகன் அருளிச்செய்த ரஹஸ்யங்களில் ஒன்ருன ஸ்ரீ அபயப்ரதாநஸாரம் ராமாயணத்தில் "விபீஷணசரணாகதி" என்பதைப் பற்றியது என்பது யாவருக்கும் தெரிந்ததே. ராமாயணத்திலும், சரணாகதி ஶாஸ்த்ரத்திலும், தேசிகன் ஸ்ரீஸூக்திகளிலும் ருசியுள்ளவர்கள் இந்த க்ரந்தத்தை ஆமோதிப்பார்கள் என்று நினைக்கிறேம். இதை பிரசுரப்படுத்துவதில், ஸம்ஸ்க்ருதத்தில் அதிக பரிசயமில்லாதவர்களுடைய ஸௌகர்யத்திற்காக சில நூதன முறைகள் கையாளப்பட்டிருக்கின்றன. ஸம்ஸ்க்ருத சப்தங்களையெல்லாம் தமிழிலேயே யெழுதி, அவைகளுக்கு எண்கள் கொடுத்து, அந்த எண்கள்படி ஸம்ஸ்க்ருதத்தில் அவற்றை எழுதி தமிழர்த்தம் அதே பக்கத்தில் கீழே எழுதப்பட்டிருக்கிறது. தவிர ஸ்ரீதேசிகனுல் 'ராமாயணம் சரணாகதிவேதம்' என்பதையும், 'ஸ்ரீராமனே பரதத்வம்' என்பதையும் இதுபோன்ற முக்யமான விஷயங்களை நிரூபிக்கும்போது ப்ரமாணமாக உதாஹரிக்கப்பட்டிருக்கும் ஶ்லோகங்கள் மூலத்திலேயே தமிழ் எழுத்துக்களாலே எழுதப்பட்டிருக்கின்றன. அதே பக்கத்தில் அந்த ஶ்லோகங்களை தேவநாகரலிபியில் எழுதி, அர்த்தமும் எழுதியிருக்கிறேம். தெரிந்தவரையில் ஶ்லோகங்களுக்கும் பாசுரங்களுக்கும் இருக்குமிடமும் (ஆகரமும்) அங்கேயே குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதிக விவாதமில்லாத விஷயங்களை நிரூபிக்கும் ப்ரகரணத்தில் மேற்கோளாக எடுக்கப்பட்டிருக்கும் ஶ்லோகங்களை மூலத்திலிருந்து விலக்கி,

அந்த இடத்தில் ஒரு அடையாளத்தைக் காட்டி, கீழே அந்த அடையாளமுள்ள இடத்தில் எடுத்துவிட்ட பாகங்களை எழுதியிருக்கிறோம். இதனால் ஸம்ஸ்க்ருதத்தில் திறமையில்லாதவர்களுக்கு க்ரந்தத்தை ஸேவிக்கும்போது தடையில்லாமலிருப்பதோடு, கீழே இருப்பதை சேர்த்துப் படித்தால் ஸ்ரீதேசிகனின் ஸ்ரீஸூக்தி அணுவளவும் குறையாமல் கிடைக்கிறது. அந்த ச்லோகங்களும் மறுபடியும் தமிழில் எழுதப்பட்டும், அர்த்தம் எழுதப்பட்டுமிருக்கின்றன. ஆகையால் அபயப்ரதான ஸாரத்தின் இந்தப் புதிய பதிப்பு வித்வான், அவித்வான் என்கிற வித்தியாசமன்றி யில் யாவருக்கும் உபயோகமுள்ளதாயிருக்கும். ப்ரமாணமாக உதாஹரிக்கப்பட்டுள்ள ஶ்லோகங்கள், பாசுரங்கள் இவைகளின் அகாராதியும், ஸ்ரீதேசிகன் அருளிச்செய்த ஶ்லோகங்கள், பாசுரங்கள் இவைகளின் அகாராதியும் ப்ரமாணங்களின் ஸங்க்ரஹம் ஒன்றும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. மேலும் இந்த க்ரந்தத்தை அறிந்துகொள்வதற்கு அவச்யாபேக்ஷிதமான ப்ரபத்தியைப் பற்றி ஒரு சிறிய முகவுரையும் சேர்க்கப்பட்டிருக்கிறது.

இந்த புஸ்தகத்தைத் தயாரிப்பதில் திருக்கோட்டியூர் ஸ்ரீ. உ. வே. ஸௌம்யநாராயணாச்சார்யஸ்வாமியின் திருமாளிகையிலுள்ள தாளபத்ர ஸ்ரீகோசமும், அந்த ஸ்வாமி ப்ராதாவான ஸ்ரீ. உ. வே ஸ்ரீராமதேசிகாச்சார்ஸ்வாமி திருமாளிகையிலுள்ள தாளபத்ரஸ்ரீகோசம் ஒன்றும், அச்சிடப்பட்ட ப்ரதிகளில் இரண்டும் ஒத்துப்பார்க்கப்பட்டிருக்கின்றன. இதில் ஆதரிக்கப்பட்டிருக்கும் பாடங்களெல்லாம் ஸ்ரீ. உ. வே. ஸௌம்யநாராயணச்சார்யஸ்வாமி அங்கீகரித்ததே. இதை ஸ்ரீஸ்வாமியிடத்தில் அடியேன் காலக்ஷேபம் செய்தபோது அங்கே ஸாதித்த அர்த்தங்களை ஞாபகமுள்ள வரையில் எழுதப்பட்டிருக்

லின்றன. இதிலுள்ள பிழைகளெல்லாம் அடியேனுடைய சிற்றறிவால் ஏற்பட்டதானதால், குற்றம் கழித்துக் குணம் கைக்கொள்ளுமாறு ப்ரார்த்திக்கிறேன். சில ச்லோகங்களுக்கு ஆகாம் தெரியவில்லை. ரகுராக்ஷஸ ஸம்வாதம் இருக்குமிடமும் பல வித்வான்களை விசாரித்தும் தெரியவில்லை. அவற்றைத் தெரிவிப்போர்க்கும் உள்ள குறைகளை செவ்வைப்படுத்தும் பொருட்டு தெரிவிக்கும் பெரியோர்களுக்கும் அடியேனுடைய மனமார்ந்த வந்தனத்தை ஸமர்ப்பிக்கிறேன்.

புதுக்கோட்டை,
22—9—1935.

ஸ்ரீநிவாஸராகவன்.



# முகவுரை.

ஸ்ரிய: பதியான ஸர்வேஶ்வரனே ஸர்வஜகத்காரணமான பரதத்வம். அவனுக்கு சரீரமாகயிருக்கும் இந்த சேதநாசேதநாத்மகமான ஸர்வஜகத்தினுடைய ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் எல்லாம் அவனதீநம். இப்படி ஸர்வசேஷியான ஸர்வேச்வரன் தனக்கு கௌஸ்துபம் போன்றவரான ஜீவாத்மாக்கள் அநாதியான கர்மப்ரவாஹத்தாலே ஸம்ஸாரமாகிற ஸமுத்ரத்தில் விழுந்து உழல்வதைக்கண்டு தன் காருண்யம், வாத்ஸல்யம் முதலிய குணங்களால் ஶாஸ்த்ரங்களை ப்ரவர்த்திப்பித்து, அதை உபதேசிக்கும் ஆசார்யர்களையும் ஏற்படுத்தி, தானும் அவ்வப்போது தோன்றி, துஷ்டநிக்ரஹம், ஶிஷ்டபரிபாலநம், தர்மஸம்ரக்ஷணம் முதலியவைகளைச் செய்து உலகை ரக்ஷித்து வருகிறான்.

இந்த ஜீவாத்மாக்கள் கர்மப்ரவாஹத்திலிருந்து விடுபட்டு, மோக்ஷமாகிற பரமபுருஷார்த்தத்தை அடைவதற்கு உபாயம் பக்தியோகம் என்றும் அது கர்மயோக ஞானயோக ஸாத்யம் என்றும் அவைகளை அநுஷ்டிக்கும் ப்ரகாரங்களும் எல்லாம் விஸ்தாரமாக பகவத்கீதை முதலிய க்ரந்தங்களில் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன. இதை அநுஷ்டிப்பதற்கு பல நிர்ப்பந்தங்கள் உண்டு. இதை முதல் மூன்றுவர்ணத்தாரே அநுஷ்டிக்கலாம்; அதற்கு வேண்டிய ஞானசக்தியுள்ளவர்களாயிருக்க வேண்டும். இது, நம்மால் பூர்வபூர்வ ஜந்மங்களில் செய்யப்பட்டு, பலம்கொடுக்கக் காத்துக்கொண்டிருக்கும் புண்ய பாபரூபமான கர்ம ஸமூஹங்களில் பலத்தைக் கொடுக்க ஆரம்பித்திருக்கும் (ப்ராரப்த) கர்மங்களைத் தவிர மற்ற பாபங்களையே போக்கடிக்க சக்தியுள்ளது.

ப்ராரப்த கர்மத்தை அநுபவித்தே தீர்க்க வேண்டும். அதை அநுபவிப்பதற்கு வேண்டிய ஜந்மங்களையெடுத்து, இடையில் நேரும் பாபங்களுக்கு அவ்வப்போது ப்ராயச்சித்தாதிகளால் பரிஹாரம் செய்துகொண்டு எல்லா ஜந்மங்களிலும் இந்த பக்தியோகத்தையும் இடைவிடாமல் அநுஷ்டிக்கவேண்டும். இவ்வித அப்யாஸத்தால் பகவானை ஸாக்ஷாத்கரிக்க சக்தியுள்ளவனாய், கடைசி க்ஷணத்திலும் அந்திமஸ்ம்ருதியைச் செய்து, இந்த சரீரத்தை விட்டு ப்ரக்ருதி மண்டலத்தைக் கடந்து, சுத்த ஸத்வமயமான நித்யவிபூதியை யடைந்து, பொங்கோதம் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் தனிக்கோல் செல்ல அநந்தன் கருடன் விஷ்வக்ஸேநர் முதலான நித்யர்களும் முக்தர்களும் சூழ வீற்றிருக்கிற ஸ்ரீயோடு கூடிய நாராயணனுக்கு ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தோசித ஸர்வவித கைங்கர்யங்களையும் செய்துகொண்டு புநராவ்ருத்தியில்லாமல் வாழ்வதே இந்த பக்தியோகத்திற்கு பரமபுருஷார்த்தம்.

இந்த பக்தியோகத்திற்கு வேண்டிய அதிகாரமில்லாதவர்களுக்கு ப்ரபத்தி என்று வேறொரு மார்க்கமிருக்கிறது. ஞானசக்தியில்லாதவர்களும், இவையிருந்தும் ஸம்ஸாரத்தின் தோஷம் மனதில் பட்டு மோக்ஷத்தை சீக்கிரம் அடையவேண்டுமென்கிற த்வரையுள்ளவர்களும் இந்த ப்ரபத்திக்கு அதிகாரிகள். இது ஶ்ருதியில் ஸங்க்ரஹமாயும் பாஞ்சராத்ரஸம்ஹிதாதிகளில் விஸ்தாரமாயும் உபதேசிக்கப்பட்டும், இதிஹாஸபுராணாதிகளில் பலரால் அனுஷ்டிக்கப்பட்டதாக சொல்லப்பட்டும் நம் ஆசார்யர்களால் அநுஷ்டிக்கப்பட்டும் வந்திருக்கிறது. பக்தியோகம் போலில்லாமல் இது ப்ராரப்தகர்மாவையும் அநுஷ்டிக்கிறவனுடைய விருப்பத்திற்கு ஏற்றவாறு

போக்கடிக்க சக்தியுள்ளதாய், அவன் கோலின காலத்தில் கோலின பலத்தைத் தவறாமல் கொடுக்கக்கூடியது. இந்த உபாயத்தைத் தான் அநுஷ்டிக்கவுமாம், அதற்கு யோக்யதை யில்லாவிடில் பிறர் அநுஷ்டிக்கவுமாம். இது பக்தியோகத்தைப்போல் ஸகலவித ஐஹிக புருஷார்த்தங்களையும், ஸ்வர்க்கத்தையும் மோக்ஷத்தையும் ஸாதிக்கவல்லது.

இந்த ப்ரபத்திதான் சாஸ்த்ரங்களில் 'ஶரணாகதி' என்றும், 'ஆத்மநிக்ஷேபம்' என்றும் 'ப்ரந்யாஸம்' என்றும் கூறப்படுகிறது. இது ஆநுகூல்ய ஸங்கல்பம் முதலான ஐந்து அங்கங்களோடு கூடிய ஒரு அங்கி.

आनुकूल्यस्य संकल्पः प्रातिकूल्यस्य वर्जनम् ।
रक्षिष्यतीति विश्वासः गोप्तृत्ववरणं तथा ।
आत्मनिक्षेपकार्पण्ये षड्विधा शरणागतिः ॥
.....................न्यासः पञ्चाङ्गसंयुतः ॥

(1) ஆநுகூல்ய ஸங்கல்பமாவது—நான் பகவானுக்கு அநுகூலனாகவேயிருப்பேன் என்கிற எண்ணம்; அதாவது அவன் மனதிற்கு ஒத்தபடியே நடப்பேன் என்பதே.

(2) ப்ராதிகூல்யவர்ஜனமாவது-ப்ரதிகூலனாயிருப்பதைத் தவிர்ந்திருக்கை; அதாவது ஸர்வேச்வரனால் சாஸ்திரங்களில் செய்யக்கூடாது என்று நிஷேதித்தவற்றை செய்யாமலிருக்க வேண்டுமென்று எண்ணி அவ்விதமே செய்யாமையும், விஹிதங்களை செய்யாமலிராமையும்.

(3) மஹாவிஸ்வாஸமாவது-நாம் ப்ரார்த்தித்தால் ஈஸ்வரன் நம்மை நிச்சயம் ரக்ஷிப்பான் என்கிற த்ருடமான நம்பிக்கை.

(4) கோப்த்ருத்வ — வரணமாவது — நீ க்ருபை செய்து என்னை ரக்ஷிக்கவேண்டும் என்று வேண்டுவது.

(5) கார்ப்பண்யமாவது—தன்னை ரக்ஷித்துக் கொள்ள முடியாத தன் அசக்தியை அநுஸந்திப்பது அல்லது தன் எளிய தன்மையைக் காட்டுவது.

இவ்வைந்து அங்கங்களோடு கூடின அங்கியான ஆத்மநிக்ஷேபமே ப்ரபத்தி. ஆத்மநிக்ஷேபமாவது—ஆத்மாவை ஸர்வேஶ்வரனிடம் ஸமர்ப்பித்தல். 'இந்த ஜீவாத்மாவும் அதைச் சேர்ந்த எல்லாவஸ்துக்களும் உன்னுடையதே; இதை ரக்ஷிக்கவேண்டிய பாரம் உன்னுடையதே; நான் என்னை ரக்ஷித்துக்கொள்ள முடியாதவன்; ஆகையால் என் உதவியை எதிர்பாராமல், நீயே உன்னுடைய ப்ரயோஜனத்திற்காக இந்த ஆத்மாவையும் இதைச் சேர்ந்தவற்றையும் ரக்ஷிக்கவேண்டும்' என்பதே.

இந்த ப்ரபத்தி அநுஷ்டிக்கப்படுமிடங்களிலெல்லாம் சாஸ்த்ரங்களில் போல உலகத்திலும் இந்த ஐந்து அங்கங்களோடு கூடியதாகவேயிருக்கும். "தான் ரக்ஷிக்க மாட்டாததொரு வஸ்துவை ரக்ஷிக்கவல்லவனொருவன் பக்கலிலே ஸமர்ப்பிக்கும்போது, தான் அவன்திறத்தில் அநுகூலாபிஸந்தியையுடையவனாய், ப்ரதிகூலாபிஸந்தியைத் தவிர்ந்து, 'இவன் ரக்ஷிக்கவல்லன், அபேக்ஷித்தால் ரக்ஷிப்பதும் செய்யும்,' என்று தேறி, தான் ரக்ஷித்துக்கொள்ளமாட்டாமையை யறிவித்து, 'நீ ரக்ஷிக்கவேண்டும்' என்று அபேக்ஷித்து, ரக்ஷ்யவஸ்துவை அவன் பக்கலிலே ஸமர்ப்பித்து, தான் நிர்ப்பரனாய், நிர்ப்பயமாய் பயம்கெட்டு மார்பிலே கைவைத்துக்கொண்டு கிடந்துறங்கக் காணாநின்றோமிறே" என்று லௌகிக விஷயங்களில் இந்தப்ரபத்தியின் ஸ்வரூபம் ஸ்ரீநிகமாந்த மஹாதேசிகனால் ஸ்ரீமத்ரஹஸ்யத்ரய ஸாரத்தில் அருளிச்செய்யப்பட்டது. மோக்ஷார்த்தமான ப்ரபத்தியின் ஸ்வரூபம் கொஞ்சம் மாறுபட்டிருப்பதையும் அதன் ப்ரகாரங்களையும் அத்யாத்மக்ரந்தங்களில் ஆசார்யோபதேசத்தினால் கண்டுகொள்வது.

ஸ்ரீநிவாஸராகவன்

## விஷய ஸூசிகை.



### அகராதி ஸூசிகை (Indexes).

॥ श्रीः ॥

॥ श्रियै नमः ॥

श्रीमते रामानुजाय नमः ॥

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः ॥

# ஸ்ரீ நிகமாந்த மஹாதேசிகன் அருளிச்செய்த ரஹஸ்யங்களில் 20வது ரஹஸ்யமான

# அபய-ப்ரதாந-ஸார:



रामानुजदयापात्रं ज्ञानवैराग्यभूषणम् ।

श्रीमद्वेङ्कटनाथार्यं वन्दे वेदान्तदेशिकम् ॥

சீரொன்று தூப்புல் திருவேங்கடமுடையான்
பாரொன்றச் சொன்ன பழமொழியுள்—ஓரொன்று
தானே யமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு
வானேறப் போமளவும் வாழ்வு.

# 1. ப்ரபந்தாவதார:

---

1 जयत्याश्रितसन्त्रासध्वान्तविध्वंसनोदयः ।
प्रभावान् सीतया देव्या परमव्योमभास्करः ॥

2 प्रायः प्रपदने पुंसां पौनःपुन्यं निवारयन् ।
हस्तः श्रीरङ्गभर्तुर्मामव्यादभयमुद्रितः ॥

---

1 ஜயத்யாஶ்ரித-ஸந்த்ராஸ-த்வாந்த வித்வம்ஸநோதய: |
ப்ரபாவாந் ஸீதயா தேவ்யா பரம-வ்யோம-பாஸ்கர: ||

தன்னை ஆச்ரயித்தவர்களுடைய பயமாகிற இருளைப் போக்குவதற்காகவே உதித்தவரும், ஸீதாப்பிராட்டியாலே ப்ரபையோடு கூடியவராயிருப்பவரும், பரமாகாசமென்கிற ஸ்ரீவைகுண்டத்திற்கு ஸூர்யன் போன்றவருமான (ராமன்) ஜயசீலராய் விளங்குகிறார்.

2 ப்ராய: ப்ரபதநே பும்ஸாம் பௌந:-புந்யம் நிவாரயந் |
ஹஸ்த: ஸ்ரீரங்க-பர்த்துர் மாமவ்யாத் அபய-முத்ரித: ||

ப்ரபத்தி விஷயத்தில் மனிதர்களுடைய மறுபடியும் மறுபடியும் அநுஷ்டானத்தைத் தவிர்ப்பதுபோலிருக்கிறதும், அபயமுத்ரையோடு கூடியதுமான ஸ்ரீரங்கநாதனுடைய திருக்கையானது என்னை ரக்ஷிக்கட்டும் (வலது திருக்கையைப் பார்த்தால், 'போதும், மேலே வேண்டாம்' என்று சைகை செய்வது போலிருப்பதால், 'ரக்ஷிக்கவேணும் என்று ஒரு தடவை ப்ரார்த்தித்ததே போதும், மறுபடி வேண்டாம்' என்று நம்பெருமாளின் திருவுள்ளம் என்று தாத்பர்யம்.)

1 नमस्तस्मै कस्मैचन भवतु निष्किञ्चनजन-
स्वयंरक्षादीक्षासमधिकसमिन्धानयशसे ।
सुराधीशस्वैरक्षणकुपितशापायुधवधू-
दृषत्तादुर्जातप्रशमनपदाम्भोजरजसे ॥

[கின்றேன்

2 சோகந்தவிர்க்கும் சுருதிப் பொருளொன்று சொல்லு
நாகந்தனக்கும் இராக்கதற்கும் நமக்கும் சாலும்
ஆகண்டலன் மகனுகிய ஆவலிப் பேறியதோர்
காகம் பிழைத்திடக் கண்ணழிவே செய்த காகுத்தனே.

---

1 நமஸ்-தஸ்மை கஸ்மைசந
பவது நிஷ்கிஞ்சந-ஜந-
ஸ்வயம்-ரக்ஷா-தீக்ஷா-
ஸமதிக-ஸமிந்தாந-யஶஸே |
ஸுராதீஶ-ஸ்வைர-க்ஷண-குபித
ஶாபாயுத-வதூ-
த்ருஷத்தா-துர்ஜாத-ப்ரஶமந-
பதாம்போஜ-ரஜஸே ||

'அகதிகளாய் என்னை யாச்ரயிக்கிறவர்களை நானே ரக்ஷிக்கிறேன்' என்கிற வ்ரதத்தால் மிகவும் அதிகமாக வ்ருத்தியடைகிற கீர்த்தியை யுடையவனும், தேவேந்த்ரன் மனம்போனபடி செய்த கார்யத்தால் கோபத்தை யடைந்த சாபத்தையே ஆயுதமாகவுடைய (ரிஷியான கௌதமரின்) மனைவியான (அஹல்யையினுடைய)கல்லாயிருக்கும் தன்மை என்கிற கெட்ட தசையைப் போக்கடிக்கும் திருவடித்தாமரைகளின் தூசியை யுடையவனுமான ப்ரஸித்தனை அவன் (ராமன்) பொருட்டு என்னுடைய நமஸ்காரங்கள் இருக்கட்டும்.

2 ஸகல துக்கங்களையும் போக்கடிக்கக்கூடிய வேதங்களுடைய மிகவும் ச்ரேஷ்டமான தாத்பர்யத்தைச்

1 ஒருக்காலே சரணுக வடைகின்றூர்க்கும்
உனக்கடிமை யாகின்றேன் என்கின்றூர்க்கும்
அருக்காதே அனைவர்க்கும் அனைவராலும்
அஞ்சே லென்றருள்கொடுப்பன் இதுதாஞேதும்
இருக்காலும் எழில்முனிவர் நினைவிஞலும்
இவை யறிவார் செயலுடன் என்னிசைவிஞலும்
நெருக்காத நீள் விரதமெனக் கொன்றென்று
நெறியுரைத்தார் நிலையுணர்ந்து நிலைபெற்றேமே.

---

சொல்லுகிறேன். தான் இந்த்ரனுடைய புத்ரன் என் பதிஞல் அதிக கர்வம்கொண்ட ஒரு காகமானது (மிகவும் பெரிய ஒரு அபராதத்தைச் செய்ய, அது) உயிரோடே போம்படி ஒரு கண்ணை மாத்ரிரம் தன் அம்புக்கு இலக்காக்கின ராமன் ஸ்வர்க்கவாஸிகளான தேவர்களுக்கும், ராக்ஷஸர்களுக்கும், மனிதர்களான நமக்கும், ரக்ஷகஞவான்.

1 ‘ ஒரு தடவைமாத்ரமே சரணம் என்று என்னை அடைபவர்களுக்கும், உனக்கு தாஸஞக ஆகின்றேன் என்பார்க்கும், இவ்விதமே ஒருவித வரையில்லாமல் எல்லாருக்கும் எல்லாரிடமிருந்தும் ‘ பயப்படவேண்டாம் ’ என்று சொல்லி கிருபைசெய்கிறேன். இதுதான் (எல்லாராலும்) ஓதப்படுகிற வேதத்தாலும், ஒளிபெற்ற ரிஷிகளுடைய ஸ்மிருதியாலும், அவைகளை யறிந்த ஸத்துக்களின் அநுஷ்டானத்தாலும், என்னுடைய அங்கீகாரத்தாலும் ஏற்பட்டதும், ஒன்றிஞலழிக்கமுடியாததுமான என்னுடைய (சரணுகதரக்ஷணம் என்கிற) தீர்க்கவ்ரதம் ’ என்று (சரணுகதி என்கிற) மார்க்கத்தை யுபதேசித்த ஸர்வேச்வரனுடைய வ்ரதத்தை யறிந்து ஸ்திரமான நிலையை யடைந்தோம்.

* ஸர்வேச்வரன் ஒரு த்ரேதாயுகத்திலே சக்ரவர்த்தித் திருமகனாய் அவதரித்த காலத்திலே, ஸ்ரீ வால்மீகிபகவான் ப்ரஹ்ம-புத்ரனான ஸ்ரீ நாரத-பகவான் பக்கலிலே இவ்வவதார-வ்ருத்தாந்தத்தை [2]ஸங்க்ஷேபேண ச்ரவணம் பண்ணி, † ஸரஸ்வதீ-வல்லபனான ப்ரஹ்மாவினுடைய [3]ப்ரஸாதத்தாலே ப்ரவ்ருத்தமான

---

* परित्राणाय साधूनां विनाशाय च दुष्कृताम् ।
धर्मसंस्थापनार्थाय संभवामि युगे युगे ॥[4]

என்கிறபடியே

† मच्छन्दादेव ते ब्रह्मन् प्रवृत्तेयं सरस्वती [5] என்கிறபடியே

---

[1] ஸ்ரீ வைஷ்ணவஸம்ப்ரதாயத்தில் வ்யவஹரிக்கப்படும் ஸ்ரீராமனுடைய பெயர்.

[2] சுருக்கமாகக் கேட்டு [3] அநுக்ரஹத்தாலே

[4] பரித்ராணாய ஸாதூநாம்
விநாஶாய ச துஷ்க்ருதாம் |
தர்ம-ஸம்ஸ்தாபநார்த்தாய
ஸம்பவாமி யுகே யுகே. || (கீதை-4-8)

ஸாதுக்களின் ரக்ஷணத்திற்காகவும், துஷ்டர்களின் நாசத்திற்காகவும், தர்மத்தை நிலைநிறுத்தும்பொருட்டும் அந்தந்த யுகத்தில் அவதாரம் செய்கிறேன்.

[5] மச்சந்தாதேவ தே ப்ரஹ்மந்
ப்ரவ்ருத்தேயம் ஸரஸ்வதீ. (பா. 2—31)

மாமுநியே! இந்த (ஶ்லோகரூபமான) ஸரஸ்வதி என்னுடைய ஸங்கல்பத்தாலேயே உன்னிடமிருந்து வெளியாயிற்று.

[1] திவ்ய-ஸாரஸ்வதத்தை யுடையவனு மாய், † ப்ரஹ்மாவாலே [2] தத்த-வரனுமாய்,

---

† रहस्यं च प्रकाशं च यदवृत्तं तस्य धीमतः ।
रामस्य सह सौमित्रे राक्षसानां च सर्वशः ॥
वैदेह्याश्चापि यद्वृत्तं प्रकाशं यदि वा रहः ।
तच्चाप्यविदितं सर्वं विदितं ते भविष्यति ॥
न ते वागनृता काव्ये काचिदत्र भविष्यति ॥ [3] என்று

---

[1] தைவீகமான வாக்கை யுடையவனாய்

[2] கொடுக்கப்பட்ட வரத்தை யுடையவனாய்

[3] ரஹஸ்யம் ச ப்ரகாஶம் ச
யத்-வ்ருத்தம் தஸ்ய தீமத: |
ராமஸ்ய ஸஹ ஸௌமித்ரே
ராக்ஷஸாநாம் ச ஸர்வஶ: ||
வைதேஹ்யாஸ்சாபி யத்-வ்ருத்தம்
ப்ரகாஶம் யதி வா ரஹ: |
தச்சாப்யவிதிதம் ஸர்வம்
விதிதம் தே பவிஷ்யதி ||
ந தே வாகந்ருதா காவ்யே
காசிதத்ர பவிஷ்யதி | [பா.2:33—35.]

புத்திமானான ராமனுடையவும், லக்ஷ்மணனுடையவும், ராக்ஷஸர்களுடையவும், ஸீதையினுடையவும் ரஹஸ்யமாகவும், ப்ரகாசமாகவுமுள்ள வ்ருத்தாந்தங்களெல்லாம் உனக்குத் தெரியவரும். (நாரதரிடம் கேட்காமையால்) உனக்குத் தெரியாதவை முற்றும் தெரியப்போகின்றன. (நீ செய்யப்போகிற) இந்த காவ்யத்தில் உன்னுடைய வார்த்தை ஒன்றேனும் பொய்யாகமாட்டாது.

[1]தர்ம-வீர்ய-ப்ரஸூதமான * திவ்ய-சக்ஷுஸ்
ஸாலே இவ்வவதார-வ்ருத்தாந்தத்தை † நிரவ
ஶேஷமாக ஸாக்ஷாத்கரித்து, ‡ முமுக்ஷுவுக்

---

* हसितं भाषितं चैव गतिर्या यच्च चेष्टितम् ।
तत्सर्वं धर्मवीर्येण यथावत्संप्रपश्यति ॥ [2] என்கிறபடியே

† पाणावामलकं यथा என்னும்படி [3]

‡ दशेन्द्रियाननं घोरं यो मनोरजनीचरम् ।
विवेकशरजालेन शमं नयति योगिनाम् ॥[4] என்கிறபடியே

---

[1]வரத்தின் மஹிமையால் உண்டான திவ்ய த்ருஷ்டியாலே

[2] ஹஸிதம் பாஷிதம் சைவ
கதிர்-யா யச்ச சேஷ்டிதம் |
தத் ஸர்வம் தர்ம-வீர்யேண
யதாவத் ஸம்ப்ரபஶ்யதி || (பா. 3—4.)

(ராமன் முதலானோர்) சிரித்ததும், மொழிந்ததும், நடந்ததும் மற்றும் செய்த செயல்கள் எவை எவையுண்டோ அவை எல்லாவற்றையும் (ப்ரஹ்மா கொடுத்த) வரத்தின் மஹிமையால் உள்ளபடி நன்கறிந்தனன்.

[3] பாணாவாமலகம் யதா (பா. 3–6.)
உள்ளங்கையில் நெல்லிக்கனிபோல.

[4] தஶேந்த்ரியாநநம் கோரம் யோ மநோ-ரஜநீ-சரம் |
விவேக-ஶர-ஜாலேந ஶமம் நயதி யோகிநாம் ||

குப் பரமோபகாரகமான இவ்வவதார-ரஹஸ்ய யத்தை வெளியிட்டு லோகத்தை உஜ்ஜீவிப் பிக்கைக்காகத் தன் கருணையாலே ப்ரவ்ருத்த ஞய், * வேதோபப்ருஹ்மண-ஸாபேக்ஷரான அல்ப-ச்ருதர் பக்கல் இரக்கத்தாலும் அவர் களைப் பற்ற வேதங்களுக்குண்டான

---

* इतिहासपुराणाभ्यां वेदं समुपबृंहयेत् ।
बिभेत्यल्पश्रुताद्वेदो मामयं प्रतरिष्यति ॥ 1

என்கிற சாஸ்த்ரார்த்தத்தை அநுஸந்தித்துக்கொண்டு

---

பத்து இந்த்ரியங்களாகிற முகத்தை யுடையவனும் க்ரூரமானவனுமான யோகிகளின் மனது என்கிற ராக்ஷஸனை எவன் விவேகம் என்கிற அம்புக்கூட்டங்களால் அடக்குகிருனே.

[1] இதிஹாஸ-புராணுப்யாம் வேதம் ஸமுபப்ருஹ்மயேத் |
பிபேத்-யல்ப-ச்ருதாத் வேதோ மாமயம் ப்ரதரிஷ்யதி ||
(பார. ஆதி. 1-293).

(ராமாயணம், பாரதம் முதலான) இதிஹாஸங்களாலும் (பாகவதம் விஷ்ணுபுராணம் முதலான) புராணங்களாலும் (ஸூக்ஷ்மமான) வேதத்தினுடைய அர்த்தத்தைத் தெளிவாக ப்ரகாசிப்பிக்கவேண்டும். (இவைகளால் வேதார்த்தத்தை செவ்வனே யறியாமல்) அரைப் படிப்புள்ளவனிடமிருந்து 'இவன் நம்மைத் தவருக அர்த்தம்பண்ணி நம்மை ஏமாற்றிவிடுவானே' என்று வேதம் பயப்படுகிறது.

[1]ப்ரதாரண-பயத்தை [2] ஸமிப்பிக்கைக்காகவும், * நாலு வேதங்களும் ஒரு தட்டிலும் தாளுெரு தட்டிலுமாக நிற்கிற ஸ்ரீ ராமாயணமாகிற ப்ரபந்தத்தை அருளிச்செய்து; † யாரைக்கொண்டு இப் ப்ரபந்தத்தை [3] ப்ரவர்த்திக்கக் கடவோம் என்று சிந்தித்த ஸமயத்திலே, குச-லவர்கள் வந்து [4] பாதோப-ஸங்க்ரஹ

---

* पुण्यं वेदैश्च संमितं என்கிறபடியே [5]

† चिन्तयामास को न्वेतत्प्रयुञ्जीयादिति प्रभुः என்கிறபடியே [6]

---

1 प्रतारणभय— ஏமாற்றுவனே என்கிறபயம்.
2 போக்குகை. 3 பரவச் செய்ய.

4 पादोपसङ्ग्रहणं— திருவடிகளைத் தொட்டு [நமஸ்கரிப்பது.

5 புண்யம் வேதைஶ்ச ஸம்மிதம் (பா. 1—97) புண்யத்தைக் கொடுப்பதும் வேதங்களுக்கு ஸமானமானதும்.

6 சிந்தயாமாஸ கோந்-வேதத் ப்ரயுஞ்ஜீயாதிதி ப்ரபு: | (பா. 4—3)

இதைக் கற்று ஜனங்களுக்கு வெளிப்படுத்தக்கூடியவன் எவனே என்று சிந்தித்துக்கொண்டிருந்தான்.

ணம் பண்ண, ‡ [1] உசிதாதிகாரி-முகத்தாலே [2] உபப்ருஹ்மண-ரூபமான இப் ப்ரபந்தத்தை ப்ரவர்த்திப்பித்தான்.

இதி ப்ரபந்தாவதார: ப்ரதமோதிகார:

## 2. பரதத்வோப-ப்ருஹ்மணாதிகார:

இப்படி இப் ப்ரபந்தத்தில் பண்ணுகிற பஹு-விதங்களான வேதோப-ப்ருஹ்மணங்களில் ப்ரதாநமான உபப்ருஹ்மணம் ச்வேதாச்வதராதிகளில் சொல்லுகிற [3] ஸர்வ-சரண்ய-பர- தத்வ-விஷயமாயும் [4] ஸர்வாதிகார

---

‡ तौ तु मेधाविनौ दृष्ट्वा वेदेषु परिनिष्ठितौ ।
वेदोपबृंहणार्थाय तावग्राहयत प्रभुः ॥ என்கிறபடியே [5]

---

1 उचिताधिकारि— தகுந்த யோக்யதையை யுடையவர் (மூலமாக) (அதிகாரம்— யோக்யதை)

2 उपबृंहण— வ்யாக்யானம்.

3 सर्वशरण्यपरतत्त्वविषय— எல்லோருக்கும் ரக்ஷகனை உயர்ந்த தத்வத்தைப் பற்றியது.

4 सर्वाधिकारशरणागतिरूपपरमहितविषय— எல்லாரும் அநுஷ்டிக்கக் கூடிய சரணாகதி என்கிற உயர்ந்த [உபாயத்தைப் பற்றியது.

5 தௌ து மேதாவிநௌ த்ருஷ்ட்வா வேதேஷு பரிநிஷ்டிதௌ | வேதோப-ப்ருஹ்மணார்த்தாய தாவக்ராஹயத ப்ரபு: || (டீ-6)

ஸமர்த்தனை வால்மீகி அதிக புத்திசாலிகளும், வேதங்களையெல்லாம் ஓதி அதில் தேர்ந்திருக்கிற குச-

மான சரணாகதி-ரூப-பரம-ஹித-விஷயமாயும் இரண்டு வகையாயிருக்கும்.

அதில் ஸர்வ-சரண்யமான பர-தத்வத்தை [1] நிஷ்கர்ஷிக்குமிடத்தில், ஸர்வேச்வரனைப் பற்ற [2] ஸமரென்றும், ஏகரென்றும், அதிகரென்றும் [3] சங்கிதராயிருப்பார் இருவருண்டு. அவர்கள் யாரென்னில்-ஸர்வேச்வரனுடைய மகனும் பேரனும். அவர்களில் பேரனை ருத்ரனிற்காட்டில் ஸர்வேச்வரன் அதிகன் என்னுமிடத்தை,

> [4] ஜ்ரும்பிதம் தத்-தநுர் த்ருஷ்ட்வா
> ஶைவம் விஷ்ணு-பராக்ரமை: |
> அதிகம் மேநிரே விஷ்ணும்
> தேவாஸ்-ஸர்ஷி-கணாஸ்-ததா || என்று

லவர்களைக் கண்டு, வேதத்தின் உட்கருத்தை வெளியிடும் (ராமாயணம் என்ற தன்) ப்ரபந்தத்தைப் பாடுவிக்கும்பொருட்டு அவர்களை அங்கீகரித்தான்.

[1] நிச்சயிக்குமிடத்தில். [2] सम:— ஸமானமாயிருப்பவர்

एक:— (மூவரும்) ஒருவரே अधिक:—மேற்பட்டவர்.

[3] शङ्कित:— ஸந்தேஹிக்கப்பட்டவர்.

[4] जृंभितं तद्धनुर्दृष्ट्वा शैवं विष्णुपराक्रमैः।
अधिकं मेनिरे विष्णुं देवास्सर्षिगणास्तदा ॥

(ரா. பா. 75-19)

அப்பொழுது தேவதைகளும், ரிஷிகணங்களும் விஷ்ணுவின் பராக்ரமத்தினால் சக்தியற்றுப்போன சிவனுடைய வில்லைப் பார்த்து, 'விஷ்ணுவே பலாதிகன்,' என்று நினைத்தனர்.

ஸ்ரீ பரசுராம-வாக்யத்தாலே வெளியிட்டான். ராவண- [1]வதாநந்தரம் தேவர்கள் பெருமாளை ஸ்தோத்ரம் பண்ணுகிறபோது, ப்ரஹ்மாதி-ஸர்வ-தேவர்களுடைய

[2] *கர்த்தா ஸர்வஸ்ய லோகஸ்ய*
*ஶ்ரேஷ்டோ ஜ்ஞானவதாம் வர: |*
*உபேக்ஷஸே கதம் ஸீதாம்*
*பதந்தீம் ஹவ்ய-வாஹநே ||*

*கதம் தேவ-கண-ஶ்ரேஷ்டம்*
*ஆத்மாநம் நாவபுத்த்யஸே |*
*உபேக்ஷஸே வா வைதேஹீம்*
*மாநுஷ: ப்ராக்ருதோ யதா ||* என்கிற

---

1 वधानन्तरं — *வதத்திற்குப் பிறகு*

2 कर्ता सर्वस्य लोकस्य श्रेष्ठो ज्ञानवतां वरः ।
उपेक्षसे कथं सीतां पतन्तीं हव्यवाहने ॥
कथं देवगणश्रेष्ठमात्मानं नावबुद्ध्यसे ।
उपेक्षसे वा वैदेहीं मानुषः प्राकृतो यथा ॥ (யு. 120-6,7)

*நீ எல்லா லோகங்களுக்கும் கர்த்தா; ஸர்வோத்தமன்; ஞானமுடையவர்களைவரிலும் மேலாயிருப்பவன். (இப்படி ஸர்வஜ்ஞனாயிருந்தும்) நீ ஸீதை அக்னியில் விழுகையில் உபேக்ஷித்திருப்பதேனோ? தேவகணங்களெல்லாரிலும் ஶ்ரேஷ்டனான உன்னை நீ ஏன் அறியாதிருக்கின்றனை?..............................ஒன்றுமறியாத ஒரு ஸாமான்ய மனிதனைப்போல ஸீதையை(அக்னியில் விழக்கண்டு) ஏன் உபேக்ஷிக்கிறாய்?*

ஊக்யத்தாலேபெருமாளுடைய [1]ஸர்வஸ்மாத் பரத்வத்தை ஸ்தாபித்தான். அநந்தரம் தேவர்கள் தவிர ப்ரஹ்மா தனித்து ஸ்தோத்ரம் பண்ணுகிறவிடத்திலும், எதிரிகையாலே [2]விடுதீட்டான கணக்கிலே, [3]"அக்ஷரம் ப்ரஹ்ம ஸத்யம் த்வம்" என்று ஸர்வ- [4]விலக்ஷணமான பர-ப்ரஹ்மம் பெருமாள் என்னுமிடத்தையும், [5]"த்வம் த்ரயாணாம் ஹி லோகாநாம் ஆதிகர்தா ஸ்வயம் ப்ரபு:" என்று ப்ரஹ்ம-லக்ஷணமான ஜகத்-காரணத்வத்தையும், [6]"ஜகத் ஸர்வம் ஶரீரம் தே" என்று ஸர்வ-சரீரத்

---

[1] सर्वस्मात्परत्वं— எல்லாரைக் காட்டிலும் உயர்வு

[2] எதிரிகையாலே விடுதி இடுதல்—பிரதிவாதி தன் கையாலேயே விடுதலைப் பத்திரம் எழுதிக்கொடுத்தல்.

[3] अक्षरं ब्रह्म सत्यं त्वं (யு. 120-14)

நீ நாசமற்றவன்; பரப்ரஹ்மம் நீயே; ஒருவித விகாரமுமில்லாமல் எப்போதும் ஏகரூபமாயிருப்பவனும் நீயே.

[4] விலக்ஷணமான—வேறுபட்ட

[5] त्वं त्रयाणां हि लोकानामादिकर्ता स्वयं प्रभुः (ஷை-19)

நீ யன்றோ மூவுலகங்களுக்கும் முதலாவதான கர்த்தா: உன்னை நியமிக்கிறவன் ஒருவனும் இல்லை.

[6] जगत्सर्वं शरीरं ते । (யு. 120—26)

உலகமெல்லாம் உனக்குச் சரீரம்.

வத்தையும், [1] 'அஹம் தே ஹ்ருதயம் ராம ஜிஹ்வா தேவீ ஸரஸ்வதீ' இத்யாதிகளாலே [2] ச்ரௌத-ப்ரயோகத்தில் புத்ர-பரமான ஹ்ருதய-சப்தத்தாலே ப்ரஹ்மாவினுடைய [3] கார்யத்வத்தையும், மற்றுமுள்ள தேவதைகளெல்லாம் [4] விபூத்யேக-தேசமானபடியையும், [5] "ஶரண்யம் ஶரணம் ச த்வாமாஹுர்-திவ்யா மஹர்ஷய:" என்று ஸர்வ-சரண்யத்வத்தையும் பேசினான். "யாவனொருவன் ப்ரஹ்மாவை முற்பட ஸ்ருஷ்டிக்கிறான்" என்று ச்வேதாச்வதரோபநிஷத்திலே [6] அதீதமான வர்த்தத்தை உத்தர ஸ்ரீராமாயணத்திலே ப்ரஹ்மா தன்னுடைய வாக்யத்தாலே பேசினான்.

---

1 अहं ते हृदयं राम जिह्वा देवी सरस्वती (யு. 120—24)
நான் உனக்குப் புத்ரன்; ஸரஸ்வதீதேவீ உனக்கு நாக்கு.

2 ச்ருதியில் உபயோகிக்கப்பட்டிருப்பதில்

3 कार्यत्व—ஸ்ருஷ்டிக்கப்படும் தன்மை.

4 विभूत्येकदेश—ஐச்வர்யத்தில் ஒரு பாகமாயிருப்பது

5 शरण्यं शरणं च त्वामाहुर्दिव्या महर्षयः (டை—18)
திவ்யஞானமுடைய மஹரிஷிகள் உன்னை ரக்ஷிப்பதில் வல்லவனாகவும், ரக்ஷிப்பதற்குறிய உபாயமாகவும் சொல்லுகின்றனர்.

6 अधीत—ஓதப்பட்ட

அங்ஙனே என்னில்:

1 ஸமயஸ்தே மஹாபாஹோ
ஸ்வாந் லோகாந் பரிரக்ஷிதும் |
ஸங்க்ஷிப்ய ச புரா லோகாந்
மாயயா ஸ்வயமேவ ஹி ||

மஹார்ணவே ஶயாநோப்ஸு
மாம் த்வம் பூர்வமஜீஜந: | என்று தொடங்கி
பத்மே திவ்யேர்க்க-ஸங்காஶே
நாப்யாம் உத்பாத்ய மாமபி |
ப்ராஜாபத்யம் த்வயா கர்ம
ஸர்வம் மயி நிவேஶிதம் ||

---

1 समयस्ते महाबाहो स्वान् लोकान् परिरक्षितुम् ।
संक्षिप्य च पुरा लोकान् मायया स्वयमेव हि ॥
महार्णवे शयानोऽप्सु मां त्वं पूर्वमजीजनः ॥

(உத்-104: 3,4).

पद्मे दिव्येऽर्कसंकाशे नाभ्यामुत्पाद्य मामपि ।
प्राजापत्यं त्वया कर्म सर्वं मयि निवेशितम् ॥

நீண்ட புஜங்களை யுடையவரே! (ராவணாதிகளிடமிருந்து) இவ்வுலகங்களை ரக்ஷிப்பதாக முன்னமேயே வாக்களித்திருக்கிறீர். இந்த ப்ரபஞ்சத்தை ஸ்ருஷ்டிப்பதற்குமுன் உம்முடைய ஸங்கல்பத்தாலேயே இவ்வுலகங்களை ஸம்ஹரித்து, மஹாப்ரளய ஜலத்தில் (ஆலிலைமேல்) சயனித்துக்கொண்டீர். பிறகு முதலில் என்னை ஸ்ருஷ்டித்தீர்..........................................உம்முடைய நாபியிலிருந்து ஸூர்யன்போல் ப்ரகாசிக்கிற ஒரு தாமரை மலர் உண்டாயிற்று. என்னை அதிலிருந்து உண்

1 ஸோஹம் ஸந்யஸ்த-பாரோ ஹி
த்வாமுபாஸே ஜகத்பதிம் |
ரக்ஷாம் விதத்ஸ்வ பூதேஷு
மம தேஜஸ்கரோ பவாந் |
ததஸ்-த்வமபி துர்த்தர்ஷ:
தஸ்மாத் பாவாத் ஸநாதநாத் ||
ரக்ஷார்த்தம் ஸர்வ-பூதாநாம்
விஷ்ணுத்வம் உபஜக்மிவாந் |
அதித்யா வீர்யவாந் புத்ர:
ப்ராத்ரூணாம் ஹர்ஷ-வர்த்தந: ||

---

1 सोऽहं संन्यस्तभारो हि त्वामुपासे जगत्पतिम् ।
रक्षां विधत्स्व भूतेषु मम तेजस्करो भवान् ॥
ततस्त्वमपि दुर्धर्षस्तस्माद्भावात्सनातनात् ॥
रक्षार्थं सर्वभूतानां विष्णुत्वमुपजग्मिवान् ॥
अदित्या वीर्यवान्पुत्रो भ्रातॄणां हर्षवर्धनः ॥

(உத். 104: 7—10)

டாக்கி, லோகங்களை ஸ்ருஷ்டிக்கும் அதிகாரத்தை எனக்குக் கொடுத்தீர். நான் உம்மிடத்திலேயே ஸர்வ பாரத்தையும் போட்டு உம்மையே சரணமடைந்து 'முன் ஞான சக்திகளைக் கொடுத்ததுபோல இப்போதும் ரக்ஷிக்க வேண்டும்' என்று ப்ரார்த்தித்தேன். பிறகு நீரும் அந்த நித்ய திவ்யமங்களவிக்ரஹத்திலிருந்து ப்ரபஞ்சத்தை ரக்ஷிப்பதற்காக விஷ்ணு என்று அவதரித்தீர். பிறகு திவ்யஞானசக்திகளுடன் அதிதிக்குப் புத்ராராய்ப் பிறந்து, ஸஹோதரர்களான (இந்த்ராதிகளுடைய) ஸந்தோஷத்தை விருத்திசெய்தீர்.

1 ஸமுத்பந்நேஷு க்ருத்யேஷு
லோகஸ்யார்த்தாய கல்பஸே |
ஸ த்வம் வித்ராஸ்யமாநாஸு
ப்ரஜாஸு ஜகதோऽது⁴நா |
ராவணஸ்ய வதாகாங்க்ஷீ
மாநுஷேஷு மநோ ததா: || என்று

ஸர்வேச்வரன் [2]பரம-காரணமானபடியையும் தான் அவனுக்குக் [3]கார்ய-பூதனுமாய், பரதந்த்ரனுமாய், [4]தததீந-பத-லாபனுமாயிருந்த படியையும், தங்கள் நடுவும் ராஜவம்சத்தில் நடுவும் ஸர்வேச்வரன் மத்ஸ்யாதிகளுடைய மத்யத்திலேபோலே ஸ்வேச்சையாலே அவதரிக்கிறான் என்னுமிடத்தையும் ப்ரஹ்மா

---

1 समुत्पन्नेषु कृत्येषु लोकस्यार्थाय कल्पसे ।
स त्वं वित्रास्यमानासु प्रजासु जगतोऽधुना ॥
रावणस्य वधाकांक्षी मानुषेषु मनोदधाः ॥(உத். 104-11)

அவச்யம் ஏற்பட்டபோது உலகத்திற்கு ஸஹாயம் செய்தீர். பிறகு ராவணனால் ஸகலப்ராணிகளும் ஹிம்ஸிக்கப்படும் பொழுது, அவனை ஸம்ஹரிக்கவிரும்பி மனுஷ்யனாய் அவதரிக்க ஸங்கல்பித்தீர்.

2 परमकारण—முதலாவதான காரணம்.

3 कार्यभूत—ஸ்ருஷ்டிக்கப்பட்டவன்.

4 तदधीनपदलाभ— அவனுக்கு அதீனமான பதவியை அடைந்தவன்.

விண்ணப்பம் செய்தான். [1]தன்னுடைச்சோதிக்கு எழுந்தருளுகிறபோதும்,

[2] ஆகச்ச விஷ்ணோ பத்ரம் தே
திஷ்ட்யா ப்ராப்தோஸி மாநத |
ப்ராத்ருபிஸ்-ஸஹ தேவாபை:
ப்ரவிஶஸ்வ ஸ்விகாம் தநும் ||
வைஷ்ணவீம் தாம் மஹாதேஜஸ்
தச்சாகாஶம் ஸநாதநம் |
த்வம் ஹி லோக-பதிர்-தேவ
ந த்வாம் கேசந ஜாநதே |
ருதே மாயாம் விஶாலாக்ஷீம்
தவ பூர்வ-பரிக்ரஹாம் ||

---

[1] தன்னுடைச்சோதி-தன்னுடையதான ஜ்யோதிர்மயமான உலகம் (பரமபதம்).

[2] आगच्छ विष्णो भद्रं ते दिष्ट्या प्राप्तोसि मानद ।
भ्रातृभिस्सह देवाभैः प्रविशस्व स्विकां तनुम ॥
वैष्णवीं तां महातेजस्तच्चाकाशं सनातनम्
त्वं हि लोकपतिर्देव न त्वां केचन जानते ।
ऋते मायां विशालाक्षीं तव पूर्वपरिग्रहां ॥

(உத். 110: 8–10)

மஹாவிஷ்ணுவே! உமக்கு ஸர்வமங்களங்களுமுண்டாகட்டும். எழுந்தருளவேண்டும். நீர் எங்களிடத்திற்குத் திரும்பிவரும் பாக்யத்தைச் செய்தோம். உம்மைப்போன்ற உம்முடைய ஸஹோதரர்களுடன் கூட உம்முடையதான திருமேனியை அடைந்து ஸ்ரீவைகுண்டத்திற்கு எழுந்தருளவேண்டும். நீரே ஸர்வ

[1] யாமிச்சஸி மஹாதேஜஸ்
தாம் தநும் ப்ரவிப ஸ்வயம் |

என்று விண்ணப்பம் செய்தான்.

இப்படிகளால் ப்ரஹ்மாதிகளுக்கும் கூட சரண்யமாய் பரமகாரணமான பரதத்வத்தை ப்ரதிபாதிக்கிற வேத-பாகங்களுக்கு உபப்ருஹ்மணம் பண்ணினான்.

இதி
பர-தத்வோப-ப்ருஹ்மணாதிகாரோ
த்விதீய :

---

லோகாதிபதி. தங்களை விட்டு எந்நாளும் பிரியாத, மஹாலக்ஷ்மியைத் தவிர வேறு எவரும் உம்மை யறிந்தார்களில்லை.

1 यामिच्छसि महातेजस्तां तनुं प्रविश स्वयम्

உமக்கு இஷ்டமான உருவத்தை நீர் எடுத்துக் கொள்ளலாம்.

# 3. சரணாகதி-தாத்பர்ய-ப்ரபஞ்ச:

---

இப்படி ஸர்வ-சரண்யமான பர-தத்வத்தினுடைய [1] வசீகரண-ஸமர்த்தமாய் [2] ஸர்வாதிகாரமாய் [3]பரம-ஹிதமாயிருக்கிற சரணாகதி-தர்மத்துக்கு [4]விதாயகங்களான வேத-பாகங்களை இப்ப்ரபந்தத்தில்உபக்ரமாதிகளாலே உபப்ருஹ்மித்தான். எங்ஙனே என்னில்:—

அவதாராரம்பத்திலே முற்பட சக்ரவர்த்தியினுடைய யஜ்ஞத்திலே [5]ஹவிர்ப்பாக-க்ரஹணார்த்தமாகத் திரண்ட தேவர்கள் [6]ரக்ஷகாகாங்க்ஷிகளாய், 'ஆவாரார் துணை' என்று நிற்

---

1 वशीकरणसमर्थ—ஸ்வாதீனப்படுத்த சக்தியுள்ள

2 सर्वाधिकार—எல்லாராலும் அநுஷ்டிக்கத்தக்க

3 परमहित— சிறந்த உபாயம்

4 विधायक— விதிக்கிற

5 हविर्भागग्रहणार्थ— ஹவிர்ப்பாகத்தை வாங்கிக் கொள்வதற்காக

6 ரக்ஷிப்பவனை விரும்பினவர்களாய்

கிற வளவிலே *ஸர்வசேஷியான ஸர்வேச்வரன் [1]அவகாசம்பார்த்து [2]ரக்ஷண-ஸந்நாஹத்தாலுண்டான [3]புகர் தோன்றும்படி [4]ரக்ஷணோபகரணங்களோடே கூடக் கட்டியுடுத்து வந்து தோற்ற, †தேவஜாதியிலுள்ளாரெல்லாரும் [5]இருந்ததே குடியாக ஶரணாகதரானபடி சொன்னான்.

---

* एतस्मिन्नन्तरे विष्णुरुपयातो महाद्युतिः ।
शङ्खचक्रगदापाणिः पीतवासा जगत्पतिः ॥

என்கிறபடியே [6]

† सिद्धगन्धर्वयक्षाश्च ततस्त्वां शरणं गताः என்று [7]

---

1 अवकाश:—ஸமயம்

2 ரக்ஷிப்பதிலுண்டான முயற்சியினால்

3 ஒளி

4 ரக்ஷிப்பதற்கு வேண்டிய ஆயுதங்கள்

5 ஒருவர் பாக்கியில்லாமல்

[6]ஏதஸ்மிந்நந்தரே விஷ்ணு: உபயாதோ மஹாத்யுதி: |
ஶங்க-சக்ர-கதா-பாணி: பீதவாஸா ஜகத்பதி: ||

(பா. 15 : 16)

இந்த ஸமயத்தில் ஸர்வ ஜகத்திற்கும் ஈச்வரனான ஸ்ரீ மஹாவிஷ்ணு (சிலரை ரக்ஷிக்கும்படியான காலம் வாய்த்த ஸந்தோஷத்தினால் திருமேனி எங்கும்) மிக்க ஒளிபெற்று, சங்கு சக்ரம் கதை முதலியவற்றை ஏந்தி, பீதாம்பரதாரியாய் அங்கு எழுந்தருளினார்.

[7]ஸித்த-கந்தர்வ-யக்ஷாஶ்ச ததஸ்-த்வாம் ஶரணம் கதா: (டை-24) ஸித்தர்கள், கந்தர்வர்கள், யக்ஷர்கள் எல்லாரும் உம்மையே சரணம் அடைகிறோம்.

த்ரிசங்கு-ஶுநஶ்ஶேபாதி-வ்ருத்தாந்தங்களிலும் விச்வாமித்ராதி [1]வ்யாபார-விசேஷங்களைச் சொல்லி, சரணாகத-ரக்ஷணம் பரம-தர்மமென்றும், [2]ஸமர்த்த-காருணிக-விஷய-சரணாகதி [3]பலாவிநா-பூதை யென்றும் காட்டினான். [4]இளையபெருமாள்

[5] ஸ ப்ராதுஶ்-சரணௌ
காடம் நிபீட்ய ரகுநந்தந: |
ஸீதாமுவாசாதியஶா:
ராகவம் ச மஹா-வ்ரதம் || என்று

---

1 व्यापार—செய்கை.

2 समर्थकारुणिकविषयशरणागति—சக்தியும் கருணையுமுள்ள ஒருவனிடத்தில் செய்யப்படும் சரணாகதி.

3 फलाविनाभूता—பலம் இல்லாமற் போகாதது.

4 இளையபெருமாள் என்று லக்ஷ்மணனுக்கு ஸம்ப்ரதாயப்பெயர்.

5 स भ्रातुश्चरणौ गाढं निपीड्य रघुनन्दनः ।
सीतामुवाचातियशा राघवं च महाव्रतम् ॥ அயோ—31 :2

அம்மஹாயசஸ்வியாகிய லக்ஷ்மணன் ஸஹோதரனுடைய பாதங்களைக் கெட்டியாகப்பிடித்துக்கொண்டு முதலில் புருஷகாரமாக (சிபார்சாக) ஸீதையைப் பார்த்துச் சொல்லி, பின்பு (ஆச்ரித-ஸம்ரக்ஷணமென்னும்) வ்ரதத்தை முக்யமாய்க் கைக்கொண்ட ஸ்ரீ ராமனைப் பார்த்துச் சொன்னான்.

[1]உபாய-பரிக்ரஹத்தைப்பண்ணி, இதுக்குப் பலமாக

[2] குருஷ்வ மாமநுசரம்
வைதர்ம்யம் நேஹ வித்யதே |
க்ருதார்த்தோஹம் பவிஷ்யாமி
தவ சார்த்த: ப்ரகல்பதே ||

[3] பவாம்ஸ்து ஸஹ வைதேஹ்யா
கிரி-ஸாநுஷு ரம்ஸ்யதே |
அஹம் ஸர்வம் கரிஷ்யாமி
ஜாக்ரதஸ்-ஸ்வபதஶ்ச தே || என்று

---

1 उपायपरिग्रह— உபாயாநுஷ்டானத்தை.

2 कुरुष्व मामनुचरं वैधर्म्यं नेह विद्यते ।
कृतार्थोऽहं भविष्यामि तव चार्थः प्रकल्पते ॥(அ. 31-22)

உனக்குப் பாதந்த்ரனாகிய என்னை உமக்கு வேலைக்காரனாக ஏற்றுக்கொள்வீராக; அப்படிக்குச் செய்யும் விஷயத்தில் தர்மம் கொஞ்சமும் விபரீதமாகாது. அதனால் என் மனோரதம் நிறைவேறப் பெற்றவனாவேன். உமக்கும் ப்ரயோஜனம் கைகூடும்.

3 भवांस्तु सह वैदेह्या गिरिसानुषु रंस्यते ।
अहं सर्वं करिष्यामि जाग्रतः स्वपतश्च ते ॥ (அ. 31:25)

நீர் ஸீதையோடுகூடவே மலைச்சாரல்களில் க்ரீடித்துக்கொண்டு இருப்பீராக. நான் நீர் விழித்துக்கொண்டிருக்கும்பொழுதும் தூங்கிக்கொண்டிருக்கும் பொழுதும் (காத்துக்கொண்டிருந்து) எல்லாக் காரியங்களையும் செய்து கொண்டிருப்பேன்.

[1]பெருமாளும் பிராட்டியும் சேர்ந்த சேர்த்தியிலே தாமடிமை செய்ய அபேக்ஷித்தாரென்று சொல்லுகையாலே [2]உபாயோபேய-பர-வாக்ய-த்வய-ரூபமான சரணாகதி-மந்த்ர-விசேஷத்தை உபக்ரமித்தான்.

முற்பாடரான தேவர்கள் பண்ணின ப்ரபத்திக்காக ராவணவதத்திற்கு எழுந்தருளுகையும் பிற்பாடரான ஸ்ரீபரதாழ்வான் பண்ணின ப்ரபத்திக்காக மீண்டு [3] திருவபிஷேகம்பண்ணி ராஜ்யம் பண்ணுகையும் விருத்தமானபடியாலே, ஸ்ரீபரதாழ்வானுக்கு ப்ரபத்தி பண்ணினபோதே [4]பரமபலம் சடக்கெனத் [5]தலைக்கட்டிற்றில்லையேயாகிலும், அவருக்குக் கைகேயீகலஹத்தாலே [6]ப்ரஸக்தமான [5]அவத்

---

[1] 'பெருமாள்' என்று ஸ்ரீ ராமனுக்கு பெயர்.

[2] उपायोपेयपरवाक्यद्वय—உபாயத்தையும், (அதனால் அடையும்) பலத்தையும் சொல்லுகிறதான இரண்டு வாக்யமுள்ள (மந்த்ரம்).

[3] திருவபிஷேகம் பண்ணி-முடி சூடி.

[4] परमफल—முக்யமான பலம்.

[5] தலைக்கட்டிற்று—கைகூடிற்று.

[6] प्रसक्त—சேர்ந்த. [7] अवद्य— பழி.

யம் திரும்படி * அப்போது ஸாக்ஷாத்-பலமான திருவடிகளுக்குப் ப்ரதிநிதியான [1]ஸ்ரீசடகோபனாலே [2]ஸபலத்வம் சொல்லி, பின்பு [3]பூர்வ-ப்ரதிஜ்ஞாதமான தேவ-கார்யம் தலைக்கட்டினவாறே ஸ்ரீ புஷ்பகவிமானத்தாலே [4]ஸாக்ஷாத்-பலமான திருவடிகள் [5]ஸ்வயம்-ஆகதங்களாய் [6]அயத்ந-லப்தங்களானபடி சொன்னான். அப்படியே

---

* மரவடியைத் தம்பிக்கு வான்பணயம்
வைத்துப்போய் வானோர்வாழ—என்கிறபடியே[7]

---

[1] சடகோபன் என்று பெருமாளுடைய பாதுகைக்கு ஸம்ப்ரதாயப் பெயர்.

[2] सफलत्वं—பயனடைந்தமை.

[3] पूर्वप्रतिज्ञात—முன்னமே வாக்களிக்கப்பட்ட.

[4] கோரப்பட்ட முக்யமான பலம்.

[5] स्वयमागत—தானாகவே வந்த

[6] अयत्नलब्ध—தான் யத்னம் செய்யாமலே அடையப்பட்டபடி

[7] பெரியா. தி. 4—9—1 பாதுகைகளை தம்பிக்கு த்ருடமான நம்பிக்கைக்கு ஹேதுவாகக்கொடுத்து, தேவதைகளெல்லாரும் (அச்சம் தீர்ந்து) வாழும்படியாக (தண்டகாரண்யத்திற்குச்) சென்று,

* "புற்பா முதலாப் புல்லெறும்பாதி யொன்றின்றியே
நற்பாலயோத்தியில் வாழும் சராசரம் முற்றவும்
நற்பாலுக்கு உய்த்தனன் நான்முகனார் பெற்ற
நாட்டுளே"[1]

என்றும் பேசுகிறபடியே, [2]ஜங்கம-ஸ்தாவர-விபாகமற [3]உபாயாதிகார--ப்ரஸங்க--ரஹித மான ஜந்துக்களையெல்லாம் [4]விஷயவாஸமே

* त्वामामनन्ति कवयः करुणामृताब्धे
ज्ञानक्रियाभजनलभ्यमलभ्यमन्यैः ।
एतेषु केन वरदोत्तरकोसलस्थाः
पूर्वं सदूर्वं अभजन्त हि जन्तवस्त्वाम् ॥ என்றும் [5]

[1] திருவா. மொ. 7–5–1 அயோத்தியில் வாழ்கின்ற பரந்து வளர்கிற புல், அற்பமாகிய எறும்பு முதலான எல்லா சராசரங்களையும் (அவைகளுக்கு மோக்ஷ ஸாதன மான உபாயம்) ஒன்றுமில்லாதிருக்கச் செய்தேயும், ப்ரஹ்மாதிகளின் அதிகாரத்திற்குக் கீழ்ப்பட்ட இந்த நாட்டிலேயே பரமபதத்திலுள்ளார் அடையும் பலத்தை அடையும்படி செய்தார் (பெருமாள்).

[2] जङ्गमस्थावरविभाग— அசையும் பொருள் அசையாப் பொருள் என்கிற வித்தியாஸம் (அற—இல்லாதபடி)

[3] उपायाधिकारप्रसंगरहित(அறிவு, சக்தி முதலிய ஒன்றுமே இல்லாமையால்) இது ஒரு உபாயத்தை அனுஷ்டிக்கலாம் என்று எண்ணக்கூட முடியாத

[4] தேசத்தில் வஸிப்பதே காரணமாக

[5] த்வாமாமநந்தி கவய: கருணாம்ருதாப்தே
ஞானக்ரியா—பஜந—லப்யம் அலப்யம்—அந்யை: |
ஏதேஷு கேந வரதோத்தர-கோஸல-ஸ்தா:
பூர்வம் ஸதூர்வம் அபஜந்த ஹி ஜந்தவஸ்-த்வாம் ||
(வரதஃஸ்தவ. 69)

பற்றுசாகப் பின்பு ரக்ஷிக்கும் ப்ரகாரத்திற்குப் புறஞ்செயலான

> [1]தே வயம் பவதா ரக்ஷ்யா
> பவத்-விஷய-வாஸிந: |
> நகரஸ்தோ வநஸ்தோ வா
> த்வம் நோ ராஜா ஜநேஶ்வர || என்கிற

ரிஷிகள் வாக்யத்தின்படியே, அவர்களுக்கு விரோதிகளான ராக்ஷஸரை [2] நிராகரித்து

---

கருணைக்கடலே! வரத! உன்னை ரிஷிகளெல்லாரும் ஞானயோகம், கர்மயோகம், பக்தியோகம், இவைகளாலேயே அடையத்தக்கவனையும், வேறு உபாயங்களால் அடையமுடியாதவனாகவும் சொல்லுகிறார்கள். ஆனால் உத்தர கோஸல தேசத்தில் வாழ்ந்த புல் முதலான ஸர்வ ஜந்துக்களும் இந்த உபாயங்களுக்குள் எதனால் உன்னையடைந்தார்கள்.

1 ते वयं भवता रक्ष्या भवद्विषयवासिनः ।
नगरस्थो वनस्थो वा त्वं नो राजा जनेश्वर ॥ (ஆர.1-20)

இப்படி வருந்துகின்ற நாங்கள் உன் ராஜ்யத்தில் வஸிக்கிறோமென்ற காரணத்தாலேயே நீ எங்களை ரக்ஷிக்கவேண்டும். பட்டணத்திலிருப்பினும் வனத்திலிருப்பினும் ஜனங்களுக்கு அதிபதியாகிய நீயே எங்களுக்கு அரசன்.

2 நாசம் செய்து.

ரிஷிகளை ரக்ஷித்தபடி சொல்லுகையாலே 'ரக்ஷாபேக்ஷை பண்ணும்போது வேறொர் உபகாரம் பண்ணவேண்டா; [1] அபிமாந-கோசரமான விஷயத்தில் [2] அநந்ய-ஶரணதையை வெளியிட்டுக் கிடக்க வமையும்' என்ற திருக்கண்ணமங்கையாண்டான்படியே [3] "கடைத்தலையிருந்து வாழும் சோம்பரை உகத்தி" என்னும் அர்த்தத்தை வெளியிட்டான்.

[4] ஆர்த்ராபராதனாய் உதிரக்கையனான காகம் [5] ப்ரஹ்மாஸ்த்ராபி-மந்த்ரிதமான துரும்பாலே [6] துரப்புண்டு, ப்ரஹ்மா முதலான

---

[1] अभिमानगोचर— தன்னுடையது என்கிற அபிமானத்திற்குட்பட்ட

[2] अनन्यशरणता—(பெருமாளைத்தவிர) வேறு ரக்ஷகனற்றிருக்கை.

[3] திருமாலை: 38. உன் வாசலிலிருப்பதால் வாழ்ச்சி பெற்றவர்களும், (ரக்ஷிக்கும் பாரத்தை உன்னிடத்தில் போட்டுவிட்டு தாங்கள் அதற்காக ஒருகாரியம் செய்யாததால்) சோம்பேறிகளான பக்தர்களை நீ அபிமானிக்கிறாய்.

[4] आर्द्रापराध — குற்றத்தைச் செய்துகொண்டேயிருப்பவனாய்.

[5] ब्रह्मास्त्राभिमन्त्रित— ப்ரஹ்மாஸ்த்ரமந்த்ரத்தாலே மந்த்ரித்து ஏவப்பட்ட

[6] விரட்டப்பட்டு.

[1] ஒன்றேறி ஒன்றுயர்த்தார் வாசல்களெல்லாம் நுழைந்து நுழைந்து என்னைக் காத்துக்கொள்ளவல்லாருண்டோ என்று கதறினவிடத்தில் ஒருவருமில்லையாயிற்று. அவ்வளவில், *[2]ப்ரிய-ஹித-காரிகளான தாயும் தகப்பனும் அவர்கள் நாட்டிலே குடியிருக்கிற தேவ ஜாதிகளும் சரணாகத-ரக்ஷண தர்மத்திற்கு [3]உபதேஷ்டாக்களான மஹர்ஷிகளும் தாங்களே நிட்டுக்கொண்டால்

---

* स पित्रा च परित्यक्त : सुरैश्च समहर्षिभि:

என்கிறபடியே [4]

---

[1] (ஸர்வேச்வரனை ஸ்ரீமந்நாராயணனைப் போலத் தாங்களும் ஒரு தேவதை என்று நினைத்து) அவன் வாஹனம் த்வஜம் இவைகளை வைத்திருப்பது போல் தாங்களும் ஒரு வாஹனத்தை(ஹம்ஸம், விருஷபம் முதலியவற்றை) ஏறி ஒன்றை த்வஜமாக உடையவர்.

[2] प्रियहितकारि —செய்கிற காலத்தில் ஸுகமாயிருப்பது ப்ரியம்; அப்போது கஷ்டமாயிருந்தாலும் பின்னால் ஸுகத்தைக் கொடுப்பது ஹிதம்; இவற்றைச் செய்கிற.

[3] उपदेष्टा—உபதேசிப்பவர்களான.

[4] ஸ பித்ரா ச பரித்யக்த: ஸுரைய்ச ஸமஹர்ஷிபி: (ஸு. 38. 33.) மாதாபிதாக்களாலும் மஹர்ஷிகளாலும் (ரக்ஷிக்க முடியாது என்று) கைவிடப்பட்டான்.

[1] ப்ரஹ்மா ஸ்வயம்-பூஶ்-சதுராநநோ வா
ருத்ரஸ்-த்ரி-நேத்ரஸ்-த்ரி-புராந்தகோ வா |
இந்த்ரோ மஹேந்த்ரஸ்-ஸுர-நாயகோ வா
த்ராதும் ந ஶக்தா யுதி ராம-வத்யம் ||

என்கிறபடியே

---

1 ब्रह्मा स्वयंभूश्चतुराननो वा
रुद्रस्त्रिणेत्रस्त्रिपुरान्तको वा ।
इन्द्रो महेन्द्रस्सुरनायको वा
त्रातुं न शक्ता युधि रामवध्यम् ॥ (ஸு. 51—45.)

† ஸகல ஐச்வர்யத்தோடு கூடினவனும் (வ்ருத்ரா ஸுரனைக் கொன்றதனால்) மஹேந்த்ர பதத்தில் அபிஷேகம் பண்ணப்பட்டவனும் ஸகல தேவகணங்களும் ஸஹாயமாயிருக்கப் பெற்றவனுமாகிய இந்த்ரனாயினும், (ஸம்ஹார காலத்தில் ப்ராஜைகளை அழச்செய்வதால்) ருத்ரனென்னும் பேர்பெற்று, மன்மதனைக் கொளுத்தும் மூன்றாவது கண்ணிருப்பதால் முக்கண்ணன் எனப்படுவனும் திரிபுரஸம்ஹாரம் செய்த சிவனாயினும், (சிவனுக்குத் தந்தையும் கர்மவச்யரைப்போல் பிறக்கையன்றித்) தானே பிறந்த ஸ்வதந்த்ரனும் (ஒரேகாலத்தில் நான்கு வேதங்களை உச்சரிக்கின்ற) நான்கு முகங்களால் பெருமைபெற்றவனுமாகிய ப்ரஹ்மதேவனாயினும், இவர்களெல்லாரும் ஒன்றுகூடியாயினும் யுத்தத்தில் ராமனால் கொல்லத்தக்கவனாக நினைக்கப்பட்டவனை எள்ளளவும் பாதுகாக்கவல்லரல்லர்.

இக்காகத்துக்கு ரக்ஷை பிறவாது என்று இத னுடைய ஹிதத்தை நிரூபித்து பெருமாள் கைக்கொள்ளுகைக்கீடாக இக்காகம் *[1] அநந்ய-கதியாய் விழவேணும் என்று பார்த்து எல்லோரும் துரத்திக் கதவை யடைத்தார் கள். அப்போது வேறொரு திக்கை நோக்கி னால் ப்ரஹ்மாஸ்த்ரம் தொடருகிறபடியையும், பெருமாள் எழுந்தருளியிருக்கிற திக்கை நோக்கினபோது கொல்ல நினைவன்றிக்கே [2]செருக்கடக்க நினைத்திருக்கிற ஸர்வலோக-சரண்யன் [3]திருவுள்ளத்தை யறிந்த ப்ரஹ்மா ஸ்த்ரம் [4]கால்தாழ்கிறபடியையும் கண்ட காகம் தப்பிப்போக நினைவுண்டாயிருக்கச்செய்தேயும்

---

* "எங்கும் போய்க் கரைகாணுதே எறிகடல் வாய் மீண்டேயும் வங்கத்தின் கூம்பேறு மாப்பறவை" என் கிறபடியே[5]

---

1 अनन्यगति — வேறு புகலற்றதாய்

2 செருக்கு = கர்வம்

3 அபிப்ராயம்

4 மெதுவாகச் செல்லுகிறதையும்

5 (பெரு. தி. 5. 5). அலையெறிந்துகொண்டிருக்கிற ஸமுத்ரத்தில் (சென்றுகொண்டிருக்கும் கப்பலின் கம் பத்தில் உட்கார்ந்திருந்த) பறவை நாலுதிக்கிலும் போக் கிடந்தேடிப் பறந்து சென்று, கரையைக் காணுமல், மறுபடியும் அதே கப்பலின் கம்பத்திற்கு வருவது (போல).

[1] த்ரீந் லோகாந் ஸம்பரிக்ரம்ய
தமேவ ஶரணம்கத: என்கிறபடியே

போக்கற்று வந்து விழுந்தது. இப்படி விழுந்தவிடத்தில்

[2] ஸ தம் நிபதிதம் பூமௌ
ஶரண்யஶ்-ஶரணாகதம் |
வதார்ஹமபி காகுத்ஸ்த:
க்ருபயா பர்யபாலயத் || என்கிறபடியே

[3]வதார்ஹன் போக்கற்றுத் தாமிருந்த விடத்திலே வந்து விழுந்த மாத்ரமேசரணாகதியாகக்கொண்டு பெருமாள் [4]ப்ராணார்த்தியான இவனுக்கு [5]ப்ராண-ப்ரதாநம் பண்ணி ரக்ஷித்தார் என்கையாலே எத்தனையேனும் [6]தீரக்கழிய அபராதம் பண்ணினாரையும் போக்கற்றுவிழுந்தால், ஶ்ரீமத்-சப்தத்திலும் நாராயண-சப்தத்திலும் சொல்லுகிறபடியே [7] நித்யாநபாயிநியான

---

1 त्रीन् लोकान् संपरिक्रम्य तमेव शरणं गत:|| ஸு. 38:33

மூவுலகும் சுற்றித்திரிந்து(கதியொன்றையும் காணாமல்) அந்த ராமனையே சரணமடைந்தது.

2 स तं निपतितं भूमौ शरण्य: शरणागतम् |
वधार्हमपि काकुत्स्थ: कृपया पर्यपालयत् || (ஷை-34)

ஸர்வலோக சரண்யனான காகுத்தன் தன்முன்பே பூமியில் விழுந்து சரணமடைந்த அந்தக் காகத்தை அது கொல்லத் தகுந்ததாயிருந்தாலும் தயையினால் காப்பாற்றினார்.

3 கொல்லத்தக்கவன்
4 உயிரை இரப்பவனை
5 உயிர் அளித்தல்
6 வெகு அதிகமாக
7 ஒருபொழுதும் விட்டுப் பிரியாத

[1]பிராட்டி [2]ஸந்நிதியுண்டாகையாலும் பரம காருணிகத்வாதிகளாலும் பெருமாள் ஏறிட்டுக்கொண்டு ரக்ஷிப்பார் என்னும் பரமரஹஸ்யத்தை வெளியிட்டான். ப்ராணார்த்தியான இக்காகத்திற்கு ப்ராண-ப்ரதானம் பண்ணுகையாலே ப்ரபத்தி-பலம் ஸித்தம். [3]துஷ்ப்ரக்ருதியான இக்காகத்திற்கு சிக்ஷையாக ஒரு கண்ணழிவாலே அஸ்த்ரத்தை விலக்கினார்.

ஸ்ரீ பரசுராமனளவில் தொடுத்த அம்பை அவன் தெளிந்து [4]த்வந்த்வ-யுத்தாபேக்ஷை தவிர்ந்தவளவில், அவனுக்கு [5]மநீஷித-விருத்தங்களான [6]ஸுக்ருதங்களிலே ஏவினார். ஸமுத்ரத்தைக் குறித்துத் தொடுத்த அம்பை ஸமுத்ராபிமானீ புருஷன் ஸாநுதாபனாய் சரணாகதனாகையாலே, [7]த்விஷத்துக்கள் பக்கலிலே ஆச்ரிதருடைய பாப-க்ருத்யத்தை ஏறிடுங்கணக்கிலே, ஸமுத்ரவிரோதிகளான் பாபிஷ்டர் பக்கலிலே ஏவினார். காகத்தைப்பற்ற அஸ்த்ரத்தை ப்ரயோகித்த வளவில் போக்க

---

[1] பிராட்டி என்று பெருமாளுடைய பத்நிக்குப் பெயர்; இங்கு ஸீதை.

[2] ஸமீபத்தில் இருத்தல்.

[3] கெட்ட ஸ்வபாவமுள்ள. [4] द्वन्द्वयुद्ध — மல்யுத்தம்

[5] मनीषितविरुद्ध — விருப்பத்திற்கு விரோதமான

[6] सुकृत — புண்யம் [7] द्विषत् — சத்ருக்கள்.

றுதியொழிய உள்ளொரு பசையில்லாத காகம் சரணாகதமானபோது, இக்காகத்திற்கு அபராதம் பண்ணுகையில் [1] அபிஸந்திவிராமமில்லாதபடியாலே *இனியோர் அபராதத்தோடே மற்றக்கண்ணும் போம் என்று அஞ்சி ஸ்வாமி ஸந்நிதியைவிட்டுத் திரிகைக்காக ஒரு கண்ணை அஸ்த்ரத்திற்கு இலக்காக்கினார். ஆகையால் இம்மூன்று வ்ருத்தாந்தங்களிலும் அஸ்த்ரத்திற்கு லக்ஷ்யம் கொடுத்தபடியெல்லாம் ஆச்ரிதஹிதமாக வென்று [2] நிர்ணீதம்.

கார்யத்தில் அபிஸந்தியுண்டாயிருக்க [3] போகப்ரஸங்கத்தாலே [4] அந்ய-பரராய் கடுகப் பெருமாள் எழுந்தருளியிருந்த விடத்திலே வராதவளவிலே, [5] ஸமயாதிலங்கநம் பண்ணிராகப் பழிசுமந்த மஹாராஜர் விஷயத்திலே

* மற்றைக்கண் கொள்ளாமே கோல் கொண்டு வா என்கிறபடியே [6]

1 अभिसन्धिविरामः— எண்ணத்தினுடைய ஓய்வு

2 நிச்சயிக்கப்பட்டது

3 ஸுகத்தில் பற்றினால்.

4 வேறு விஷயங்களில் மனம் சென்றவராய்.

5 உடன்படிக்கையை மீறுதல்.

6 பெரியா. தி. 2–6–7 மற்றொரு கண்ணையும் எடுத்து விடாமல் கோல் கொண்டு வா

இளையபெருமாளுடைய சீற்றத்தைக் கண்ட ஸந்மந்த்ரியான திருவடி †'அவ்வவஸரத்திலே அபராதமே பற்றாசாக சரணாகதராய் [1]'ப்ரஸாதிப்பிக்க ப்ராப்தம்' என்று [2]மஹாராஜருக்கு தர்மோபதேசம் சொல்லும் க்ரமத்திலே ஹிதம்சொல்ல, மஹாராஜரும் தெளிந்து

---

† कृतापराधस्य हि ते नान्यत्पश्याम्यहं क्षमम् ।

अन्तरेणाञ्जलिं बद्ध्वा लक्ष्मणस्य प्रसादनात् ॥ என்று

---

[1] ஸமாதானம் செய்ய.

[2] திருவடி என்று ஹநுமானுக்கும் மஹாராஜர் என்று ஸுக்ரீவனுக்கும் ஸம்ப்ரதாயப் பெயர்.

† க்ருதாபராதஸ்ய ஹி தே
நாந்யத் பஶ்யாம்-யஹம் க்ஷமம் |

அந்தரேணாஞ்ஜலிம் பத்த்வா
லக்ஷ்மணஸ்ய ப்ரஸாதநாத் || (கிஷ் 32–17).

நீர் ராமனுக்கு அபராதம் செய்திருக்கிறீர். ஆகையால் அஞ்ஜலி செய்து லக்ஷ்மணனை(நல்வார்த்தை சொல்லி) ஸமாதானம் செய்வதையொழிய வேறொரு தகுந்த பரிஹாரம் எனக்குத் தோற்றவில்லை.

*க்ஷமை கொண்ட ப்ரகாரத்தைச் சொல்லுகை யாலே, பகவத்-விஷயத்திலே ஸாபராதராணு லும், பாகவதரை க்ஷமைகொள்ள அம்முகத் தாலே பெருமாள் க்ஷமித்தருளுகையாலே இவ னும் நிரபராதனாய் கைங்கர்ய-யோக்யனும் என்னுமிடத்தை வெளியிட்டருளினான். அவ் வளவில் †இளையபெருமாள் தம்முடைய [1]பாருஷ்ய-வாக்யங்களுக்கடி சோகபரவசரான

---

* यदिकिञ्चिदतिक्रान्तं विश्वासात्प्रणयेन वा ।
प्रेष्यस्य क्षमितव्यं मे न कश्चिन्नापराध्यति ॥ என்று [2]

† यच्च शोकाभिभूतस्य श्रुत्वा रामस्य भाषितम् ।
मया त्वं परुषाण्युक्तस्तच्च त्वं क्षन्तुमर्हसि ॥ என்று [3]

---

1 கடுமையான வாக்யங்கள்.

2 யதி கிஞ்சிததி-க்ராந்தம்
விஸ்வாஸாத் ப்ரணயேந வா |
ப்ரேஷ்யஸ்ய க்ஷமிதவ்யம் மே
ந கஸ்சிந்-நாபராத்யதி || (கி. 36–11).

(ராமனிடத்திலுள்ள) நம்பிக்கையாலும் ஸ்நேஹத்தாலும் ஏதாவது நான் தவறியிருந்தாலும், ஸேவகனான என்னுடைய தவறுதலை மன்னிக்க வேண்டும். உலகில் அபராதமே செய்யாதவன் யாரிருக்கிறான் ?

3 யச்ச ஸோகாபி-பூதஸ்ய
ஸ்ருத்வா ராமஸ்ய பாஷிதம் |
மயா த்வம் பருஷாண்-யுக்த:
தச்ச த்வம் க்ஷந்துமர்ஹஸி || (ஷை—20).

சோகம் மேலிட்டவரான ராமனுடைய வார்த்தைகளைக் கேட்டு நான் கடும்வார்த்தைகளைச் சொன்னேன்; அவற்றை நீர் மன்னிக்கவேண்டும்.

பெருமாளுடைய சீற்றத்தளவில் பிறந்த பாசுரங்கள் என்று தம்முடைய அபராதத்தை [1]ஸோபாதிகமாக்கி, ‡[2] மேலெழுச்சியான பெருமாளுடைய பாசுரங்களுக்குக் காரணம் 'காமன் செய்தான், [3]மந்யு செய்தான்' என்கிற கணக்கிலே சோகமேயாயிற்று. [4]"ஸமயே திஷ்ட ஸுக்ரீவ" என்கையாலே பெருமாளுடைய பாசுரங்களுக்கும் இப்படித் தாத்பர்யம் என்று காட்டி, அப்படியே ஸோபாதிகமான தங்கள் அபராதங்களுக்கு மஹாராஜரை

---

‡ न च सङ्कुचितः पन्थाः येन वाली हतो गतः என்றாற்போலே [5]

---

[1] सोपाधिकं ஸ்வபாவமாயில்லாமல் ஒரு காரணத்தாலேற்பட்டது.

[2] மேலெழுச்சியான—கோபமான

[3] கோபம்.

[4] समये तिष्ठ सुग्रीव

ஸுக்ரீவ! செய்த ப்ரதிஜ்ஞையை நிறைவேற்று.

[5] ந ச ஸங்குசித: பந்தா:

யேந வாலீ ஹதோகத: | (கி. 34–18).

(ராமனால்) கொல்லப்பட்டு வாலி (யமலோகம்) சென்ற வழி இன்னும் அடைக்கப்படவில்லை.

க்ஷமை கொண்டார் என்கையாலே, ஸாபராத ரான ஸ்ரீ வைஷ்ணவர்கள் [1]புரிந்து அநாதரப த்தாலே [2]க்ருத-ப்ராயச்சித்தரானால் இவர்கள் விஷயத்தில் அபராத-தசையில் பண்ணின அநாதராதிகளுக்குத் தாங்கள் எதிரே க்ஷமை கொள்ளவேண்டும் என்னும் சாஸ்த்ரார்த்தத் தைக் காட்டினான்.

இப்படி விபீஷண-வ்ருத்தாந்தத்திற்கு முன்பு சரணாகதி-தர்மத்தில் இப்ப்ரபந்தம் நின்றநிலை சொன்னோம். இவ்விபீஷணவ்ருத் தாந்தத்திற்குப் பின்பு [3]"ஸமுத்ரம் ராகவோ ராஜா சரணம் கந்துமர்ஹதி" என்று தனக்கு சரணாகதி பலிக்கக்கண்ட பரம-தார்மிகனு டைய வாக்யத்தாலே அசக்தனுக்கு அபிம த-ஸித்திக்கு சக்தனை ஆச்ரயிக்க [4]ப்ராப்தம் என்னுமிடம் சொன்னான். அவ்விடத்தில் †பெருமாள் கையம்பு மாண்டவரல்லாமையா

† चापमानय सौमित्रे शरांश्चाशीविषोपमान् ।
सागरं शोषयिष्यामि पद्भ्यां यान्तु प्लवङ्गमाः ॥
என்று அருளிச் செய்யக் கடவ[5]

---

1 திரும்பி.
2 ப்ராயச்சித்தம் செய்து கொண்டால்.
3 समुद्रं राघवो राजा शरणं गन्तुमर्हति (யு. 19–31)
அரசனாகிய ராமன் ஸமுத்ரத்தை ஶரணமடையட்டும்.
4 தகும்.
5 சாபமாநய ஸௌமித்ரே
ஶராம்ஶ்சாஶீ-விஷோபமாந் |
ஸாகரம் ஶோஷயிஷ்யாமி
பத்ப்யாம் யாந்து ப்லவங்கமா: || (யு. 21–22)

னும், சரணமாக வரிக்கப்பட்ட [1]ஜலாசயம் அல்ப-மதியுமாய் அல்ப-சக்தியாகையாலும் சரணாகதி பலியாதொழிந்ததத்தனை.

பின்பு ராவணன் தன்னைக் குறித்து [2]ரிபூ ணாமபி வத்ஸலரான பெருமாள்

† "அராக்ஷஸ மிமம் லோகம்
கர்த்தாஸ்மி நிஶிதை ஶ்ஶரை: |
நசேச்சரண:மப்யேஷி
மாமுபாதாய மைதிலீம் || என்று

அருளிச்செய்த பாசுரத்தாலே பெருமாளுடைய சரண்யதைக்கு உறுப்பான ஸர்வ-சக்தித்வத்தையும் பரமகாருணிகத்வத்தையும் [3]ஹித-ப்ரவர்த்தகத்வத்தையும் ப்ரகாசிப்பித்தான்.

---

லக்ஷ்மணா! என் வில்லையும் ஸர்ப்பம் போன்ற பாணங்களையும் கொண்டுவா. ஸமுத்ரத்தை வற்றடித்து விடுகிறேன். நம் வானரவீரர்கள் காலாலேயே நடந்து செல்லட்டும்.

1 ஸமுத்ரம்.
2 சத்ருக்களிடத்திலும் அன்புள்ள.
3 हितप्रवर्तकत्वं——ஹிதத்தைச் செய்விப்பது.

† अराक्षसमिमं लोकं कर्तास्मि निशितैः शरैः ।
न चेच्छरणमभ्येषि मामुपादाय मैथिलीम् ॥
(யு. 41–66)

ஸீதையைக் கொண்டுவந்து ஸமர்ப்பித்து விட்டு என்னை சரண மடையாவிட்டால், என் கூர்மையான பாணங்களால் உலகில் ராக்ஷஸப்பூண்டே இல்லாமல் செய்து விடுகிறேன்,

*சரணாகத-ரக்ஷண-தர்மத்திலும் [1]ஸஹ-தர்ம-சாரிணியான பிராட்டியும் †ராவணன் ப்ர

---

* इयं सीता मम सुता सहधर्मचरी तव என்கிறபடியே [2]

† मित्रमौपयिकं कर्तुं रामः स्थानं परीप्सता ।
वधं चानिच्छता घोरं त्वयासौ पुरुषर्षभः ॥
विदितः स हि धर्मज्ञः शरणागतवत्सलः ।
तेन मैत्री भवतु ते यदि जीवितुमिच्छसि ॥
प्रसादयस्व त्वं चैनं शरणागतवत्सलम् ।
मां चास्मै प्रयतो भूत्वा निर्यातयितुमर्हसि ॥ என்று [3]

---

1 सहधर्मचारिणी பெருமாளோடு கூட அவர் செய்யும் தர்மத்தை அனுஷ்டிப்பவளான

2 இயம் ஸீதா மம ஸுதா ஸஹதர்மசரீ தவ(பா. 75. என் பெண்ணான இந்த ஸீதை உன்னோடு கூடவே தர்மத்தை அனுஷ்டிக்கிறவளான (உனக்குத் தகுந்த) பத்நீ.

3 மித்ரமௌபயிகம் கர்த்தும்
ராமஸ்-ஸ்தாநம் பரீப்ஸதா |
வதம் சாநிச்சதா கோரம்
த்வயாஸௌ புருஷர்ஷப: ||
விதிதஸ்-ஸஹிதர்மஜ்ஞ: ஶரணாகத-வத்ஸல: |
தேந மைத்ரீ பவது தே யதி ஜீவிதுமிச்சஸி ||
ப்ரஸாதயஸ்வ த்வம் சைநம் ஶரணாகத-வத்ஸலம் |
மாம் சாஸ்மை ப்ரயதோ பூத்வா நிர்யாதயிதுமர்ஹஸி || (ஸு 20: 20—22)

உலகில் ஒரு நிலையை அடையவும் கோரமான மரணம் நேரக்கூடாது என்றும் விரும்பினாயானால், புருஷோத்தமனான ராமனோடு தோழமை கொள்வது உனக்குத் தகுதியாகும். (இங்கு தோழமை என்றது ஶரணாகதியை). (ஶரணாகத தர்மத்தை அறிந்த அவர் தன்னை

கூலனுயிருக்கச் செய்தேயும் [1]மாத்ருத்வ-ப்ரயுக்தமான வாத்ஸல்யாதிசயத்தாலே "அஸ்துதே" என்னும் ப்ரகாரத்திலே யருளிச் செய்த வாக்யத்தாலே இத் தம்பதிகள் லோகஹித த்திலே [2]ஸமாநாபிப்ராயர் என்னுமிடத்தைக் காட்டினன். இப்படி "தேந மைத்ரீ பவது தே" என்றதுவும் ராவணனுக்கு சிசுபாலனை ஜந்மாந்தரத்திலே [3]அந்திம-க்ஷணத்திலேயாகிலும் [4]கார்யகரமாயிற்று

சரண்ய-ஸஹ-தர்ம-சாரிணியான பிராட்டி விஷயத்திலே [5]தர்ஜந-பர்த்ஸநாதி-ப்ரவ்ருத்தைகளான ராக்ஷஸிகளைக் குறித்து,

---

ரணமடைந்தோரிடம் அதிக அன்புள்ளவர். ஆகையால் நீ வாழ விரும்பினுல் அவரோடு உனக்குத் தோழமை உண்டாகட்டும். நீயும் சென்று ரணுகத-வத்ஸலரான பெருமாளிடம் என்னை வணக்கத்துடன் ஸமர்ப்பித்து, அவரை ஸந்தோஷப்படுத்து.

1 मातृत्वप्रयुक्त वात्सल्यातिशय— தாயாகையால்இருக்கும் அதிக அன்பினுலே -

2 ஒரே எண்ணத்தை யுடையவர்.

3 अन्तिमक्षण— கடைசிக்ஷணம் (இறக்கும் தருணம்)

4 कार्यकर— கார்யத்தைச் செய்வது (அதாவது, பலிப்பது).

5 तर्जनभर्त्सनादिप्रवृत्त— நிந்திப்பது, பயமுறுத்துவது முதலியவற்றிலிறங்கின.

"ததலம் க்ரூர-வாக்யைர்-வ:
ஸாந்த்வமேவாபிதீயதாம் |
அபியாசாம வைதேஹீம்
ஏதத்தி மம ரோசதே ||
* * *
பர்த்ஸிதாமபி யாசத்வம்
ராக்ஷஸ்ய: கிம் விவக்ஷயா |
ராகவாத்தி பயம் கோரம்
ராக்ஷஸாநாமுபஸ்திதம் ||
ப்ரணிபாத-ப்ரஸந்நா ஹி
மைதிலீ ஜநகாத்மஜா |
அலமேஷா பரித்ராதும்
ராக்ஷஸ்யோ மஹதோ பயாத் || [1] என்று

த்ரிஜடையும் ஸ்வமதம் சொன்னபடியைப் பேசினாள். பிராட்டியும், அவர்களிசைவின்றிக்கே யிருக்க, [2]ஸத்வ-ப்ரக்ருதியான த்ரிஜடையோடு அவர்களுக்குண்டான [3]துவக்கா

---

[1] तदलं क्रूरवाक्यैर्वः सान्त्वमेवाभिधीयताम् ।
अभियाचाम वैदेहीमेतद्धि मम रोचते ॥

[2] நல்ல ஸாத்வீகஸ்வபாவமுள்ள.

[3] ஸம்பந்தத்தாலே.

* * * *

भर्त्सितामपि याचध्वं राक्षस्यः किं विवक्षया ।
राघवाद्धि भयं घोरं राक्षसानामुपस्थितम ॥
प्रणिपातप्रसन्ना हि मैथिली जनकात्मजा ।
अलमेषा परित्रातुं राक्षस्यो महतो भयात् ॥
(ஸு. 27. 41–44) ||

ஆகையால் இனி இந்தக் கடுமையான வார்த்தைகளை நிறுத்துங்கள். ம்ருதுவாகவே பேசி நம்மை ரக்ஷிக்

லே வாத்ஸல்ய-பரவசையாய் அருளிச்செய்த வார்த்தையை ஸ்ரீ வாநரவீரர்களுக்கு [1] அநுபாஷித்துக் காட்டுகிற திருவடி [2]“அலமேஷா பரித்ராதும் ராகவாத் ராக்ஷஸீ-கணம்” என்று த்ரிஜடா-வாக்யத்தை முடித்து

[3]“ததஸ் ஸா ஹ்ரீ-மதீ பாலா
பர்த்துர்-விஜய-ஹர்ஷிதா |
அவோசத் யதி தத் தத்யம்
பவேயம் ஶரணம் ஹி வ: ||” என்று

---

கும்படி ஸீதையை ப்ரார்த்திப்போம். இப்போது நாம் செய்யக்கூடியது இவ்வளவே. இதுதான் எனக்கு யுக்தமாகத் தோன்றுகிறது. ஏற்கனவே நாம் ஸீதையைத் துன்புறுத்தியிருந்தாலும், (அவள் மறுத்துவிட்டால் என் செய்கிறது என்கிற) பயமில்லாமல் ப்ரார்த்தியுங்கள். பெருமாளிடத்திலிருந்து ராக்ஷஸர்களுக்கு நேர்ந்திருக்கும் பயத்திலிருந்து ஸீதையால் தான் நம்மை ரக்ஷிக்கமுடியும். அவளும் நமஸ்காரத்தாலேயே த்ருப்தியடையும் ஸ்வபாவமுள்ளவள்.

1 अनुभाषि—अनुवदि—திருப்பிச் சொல்வது.

2 अलमेषा परित्रातुं राघवाद्राक्षसीगणम् |
(ஸு. 58-87) ||

ரகுவீரனிடமிருந்து ராக்ஷஸிகளை ரக்ஷிக்கவல்லவள் இவளோ.

3 ततस्सा ह्रीमती बाला भर्तुर्विजयहर्षिता |
अवोचद्यदि तत्तथ्यं भवेयं शरणं हि वः ||(ஷை-90)

தன் பர்த்தாவின் விஜயத்தைக்கேட்டு ஸந்தோஷமும் நாணமும் கொண்ட கபடமற்ற ஸீதை, ‘நீ சொல்வது உண்மையானால் நான் உங்களை நிச்சயம் ரக்ஷிக்கிறேன்’ என்றாள்.

பிராட்டி யருளிச்செய்த [1]ரக்ஷா-பர-ஸ்வீகார-வாக்யத்தை அநுவதித்துக் காட்டினான். பின்பு ஸாபராதைகளான ராக்ஷஸிகளைப்பற்ற ராமதூதன் சீறினவிடத்து,

[2]பாபாநாம் வா ஶுபாநாம் வா
வதார்ஹாணாம் ப்லவங்கம |
கார்யம் கருணமார்யேண
ந கஶ்சிந்-நாபராத்யதி ||

இத்யாதிகளாலே அவன் சீற்றத்தை யாற்றி பிராட்டி ராக்ஷஸிகளைத் தானேயிட்டுக்கொண்டு ரக்ஷித்தபடி சொன்னான். இவ்வ்ருத்தாந்தத்தை அநுஸந்தித்த பட்டர் ராமகோஷ்டிக்குமாகாத நமக்குப் பிராட்டியுடைய க்ஷமையொழியத் தஞ்சமில்லை என்னுமிடத்தை *அரு

मातर्मैथिलि राक्षसीस्त्वयि तथैवार्द्रापराधास्त्वया
रक्षन्त्या पवनात्मजाल्लघुतरा रामस्य गोष्ठी कृता ।
काकं तं च विभीषणं शरणमित्युक्तिक्षमौ रक्षतः
सा नः सान्द्रमहागसः सुखयतु क्षान्तिस्तवाकस्मिकी ॥

என்று [3]

---

1 रक्षाभर स्वीकारवाक्य ரக்ஷிக்கும் பாரத்தை ஏற்றுக் கொண்டு சொன்ன வாக்யம்.

2 पापानां वा शुभानां वा वधार्हाणां प्लवङ्गम ।
कार्यं करुणमार्येण न कश्चिन्नापराध्यति ॥ (யு. 116–45)

வாநரஶ்ரேஷ்ட! பாபம் செய்தவர்களாயிருக்கட்டும், அல்லது புண்யம் செய்தவர்களாயிருக்கட்டும்; அவர்கள் தண்டிக்கத் தக்கவர்களானாலும், சரணமடைந்தால் பெருந்தன்மையுடையவர்கள் அவர்களிடம் இரங்கி ரக்ஷிப்பார்கள். உலகில் அபராதம் செய்யாதவர்களே கிடையாதல்லவா.

ளிச்செய்தார். ஆக இப்படி ஆறுகாண்டத்திலும் சரணாகதி-தர்மமே அந்தருவாணியாய்க் கோர்க்கப்பட்டது.

---

[3] மாதர்-மைதிலி ராக்ஷஸீஸ்-த்வயி
 ததைவார்த்ராபராதாஸ்-த்வயா
ரக்ஷந்த்யா பவநாத்மஜாத்
 லகுதரா ராமஸ்ய கோஷ்டீ க்ருதா |
காகம் தம் ச விபீஷணம்
 ஶரணமித்யுக்தி-க்ஷமௌ ரக்ஷத:
ஸா ந: ஸாந்த்ர-மஹாகஸ:
 ஸுகயது க்ஷாந்திஸ்-தவாகஸ்மிகீ ||

(ஸ்ரீகுண-கோ. 50)

தாயே! மிதிலைச் செல்வியே! நீ குணங்களால் ராமனுக்கு மேற்பட்டவள். (மூவுலகும் சுற்றி வேறு ரக்ஷகர் இல்லாமல்) போக்கற்றுவந்து விழுந்த காகத்தையும், மனைவி புத்திரன் ராஜ்யம் எல்லாவற்றையும்விட்டு ராமனை சரணமடைகிறேன் என்று வந்த விபீஷணனையும் ராமன் ரக்ஷித்தார். நீயோ ராவணனிறப்பதற்கு முன்னிருந்தது போல அவனிறந்த பின்பும் உன்னைத் துன்புறுத்தின ராக்ஷஸிகளை 'கொன்றுவிடுகிறேன்' என்று சீறின மாருதியிடமிருந்து ரக்ஷித்தாய். ஆதலால் ப்ராதிகூல்யத்தை விட்டாரை ரக்ஷிக்கும் ராமனைவிட ப்ராதிகூல்யம் செய்து கொண்டிருக்குமவரை ரக்ஷிக்கும் நீயே சிறந்தவள். அப்பேர்ப்பட்ட உன்னுடைய நிர்ஹேதுகமான கருணையே மஹாபாபிகளான எங்களை ரக்ஷித்து ஸுகிகளாகச் செய்யவேண்டும்.

உத்தர ஸ்ரீ ராமாயணத்திலும் ராவணன் பாட்டன்மார்காலத்திலே [1]விஷ்ண்வவதார-ஸ்தனை ஸர்வேச்வரன் சரணாகதரான தேவர்களை ரக்ஷிப்பதாகத் திருவுள்ளம் பற்றி ராக்ஷஸரோடே [2]பொருதவளவிலே [3]பூசலிலே கெட்டு [4]பராங்முகராய் லங்கையைக் குறித்துப் [5]பலாயநம் பண்ணுகிற ராக்ஷஸரைப் பின்தொடர்ந்து சார்ங்கமுதைத்த சரமழைகளாலே கொன்று சூறையாடக்கண்ட மால்யவான் புரிந்து *'ஓடிப்போகிற எங்களைக் கொல்லுகை க்ஷத்ர-தர்ம விருத்தமன்றோ ? தர்மம் அறியாதார் செய்யுமத்தை தர்மஜ்ஞனை நீ செய்யா நிற்கிறதென்' என்று ஆற்றாமையாலே

* नारायण न जानीषे क्षात्रं धर्मं सनातनम् ।
अयुद्धमनसो भग्नान् योऽस्मान् हंसि यथेतरः ॥

என்று [6]

---

1 विष्ण्ववतारस्थ—விஷ்ணு என்கிற அவதாரரூபத்தில் இருந்த. 2 யுத்தம் செய்த வளவிலே

3 யுத்தம். 4 (முகத்தைத் திருப்பி) முதுகுகாட்டி

5 पलायनं—ஓட்டம்

6 நாராயண ந ஜாநீஷே க்ஷாத்ரம் தர்மம் ஸநாதநம் | அயுத்த-மநஸோ ப்க்நாந் யோஸ்மாந் ஹந்ஸி யதேதர: || (உத். 8: 3).

நாராயண! வெகுகாலமாக க்ஷத்ரியர்கள நுஷ்டித்து வரும் தர்மத்தை நீ யறியாயோ? யுத்தம் செய்ய இஷ்டமில்லாமல் பயந்து ஓடும் எங்களை விவேகமற்றவனைப் போல (தொடர்ந்து) கொல்லுகிறாய்.

றையிட, ஸர்வேச்வரன் 'நாம் க்ஷத்ரிய ராகிலன்றோ க்ஷத்ரியதர்மம் அநுஷ்டிப்பது? நம்மை நாராயணன் என்று நீ சொன்னபடியே நாம் [1] நியந்த்ருத்வாதிகளாலே ஸர்வ-விலக்ஷணராகையால் நாராயண-தர்மமான சரணாகத-ரக்ஷணம் அநுஷ்டிக்கிறோம்' என்று அபிப்ராயம்கொண்டு

[2] யுஷ்மத்தோ பய-பீதாநாம்
தேவாநாம் வை மயாபயம் |
ராக்ஷஸோத்ஸாதநம் தத்தம்
ததேதத்நுபால்யதே ||
ப்ராணைரபி ப்ரியம் கார்யம்
தேவாநாம் ஹி ஸதா மயா |
ஸோஹம் வோ நிஹநிஷ்யாமி
ரஸாதல-கதாநபி || என்று

---

1 नियन्तृत्वादि—ஆளுந்தன்மை முதலானவை.

2 युष्मत्तो भयभीतानां देवानां वै मयाऽभयं ।
राक्षसोत्सादनं दत्तं तदेतदनुपाल्यते ॥
प्राणैरपि प्रियं कार्यं देवानां हि सदा मया ।
सोऽहं वो निहनिष्यामि रसातलगतानपि (உத். 8: 7, 8)

ராக்ஷஸ! உங்களால் ஹிம்ஸிக்கப்பட்டுப் பயந்த தேவதைகளுக்கு உங்களைக் கொல்வதாக அபயம் கொடுத்திருக்கிறேன். அதை இப்போது நிறைவேற்றுகிறேன். என் உயிரைக் கொடுத்தாவது தேவதைகளின் கார்யத்தை எப்போதும் நான் செய்யவேண்டும். ஆகையால் ரஸாதல—லோகத்தில் ஓடி ஒளிந்தாலும் உங்களைத் தொடர்ந்து கொல்வேன்.

'நாம் தேவர்களுக்குப் பண்ணின அபயப்ரதானத்தாலே பசுக்களுக்காகப் புலிகளைத் தொடர்ந்து கொல்லும் கணக்கிலே உங்களைக் கொல்லுகிறோம்' என்று அருளிச்செய்த பாசுரத்தாலே மற்றுமுள்ள க்ஷத்ரிய-தர்மாதிகளிலும் காட்டில் சரணாகத-ரக்ஷண-தர்மமே பெருமாளுக்கு [1] அநுபாலநீயம் என்னுமிடத்தை ஸ்தாபித்தான்.

வாலியுடைய [2]சோத்யத்திற்கும் இவ்வுத்தரத்தையே திருவுள்ளம்பற்றி * கம்பீரமாகப் பெருமாள் அருளிச்செய்தார். முன்புஸாபராதரான மஹாராஜர் [3] அநுதப்தராய் சரணாகதராக அவரை நீ நலிந்தாயாகையால், நீ [4]தண்ட்யனாகையாலும் சரணாகதரான மஹாராஜரை ரக்ஷிக்கை நமக்கு பரமாகையாலும் உன்னை நிராகரித்தோம் என்று தாத்பர்யம்.

---

* ஸூக்ஷ்ம: பரம-துர்ஜ்ஞேய:
ஸதாம் தர்ம: ப்லவங்கம || என்று [5]

---

[1] அநுஷ்டிக்கப் படவேண்டியது.

[2] चोद्य—கேள்வி.

[3] பச்சாதாபப்பட்டவராய்.

[4] दण्ड्य—தண்டிக்கத் தக்கவனாகையாலும்.

[5] सूक्ष्मः परमदुर्ज्ञेयः सतां धर्मः प्लवङ्गम (கி. 18–15)
ஹே வாநர! தர்மம் என்பது மிகவும் ஸூக்ஷ்மமானது. ஸாதுக்களாலும் ஸுலபமாக அறியக்கூடியதல்ல.

இப் ப்ரபந்தம் தலைக்கட்டுகிற விடத்திலும் உபாயாநதிகாரிகளான ஸ்தாவரங்களையும் கூட *[1]விஷய-வாஸத்தையும் அவஸ்தா விசேஷத்தையும் பற்றாசாக ரக்ஷித்தபடி பரக்கப் பேசப்பட்டது.

இப்படி இப் ப்ரபந்தம் †தாத்பர்ய-லிங்

---

* विषये ते महाराज रामव्यसनकर्शिताः ।
अपि वृक्षाः परिम्लानाः सपुष्पांकुरकोरकाः ॥ [2]
என்னும்படி யுண்டான.

† उपक्रमोपसंहारावभ्यासोऽपूर्वता फलम् ।
अर्थवादोपपत्ती च लिङ्गं तात्पर्यनिर्णये ॥ [3] என்கிற

---

[1] தேசத்தில் வஸிப்பதையும் நிலைமையையும் காரணமாகக் கொண்டு.

[2] விஷயே தே மஹாராஜ
ராம-வ்யஸந-கர்ஶிதா: |
அபி வ்ருக்ஷா: பரிம்லாநா:
ஸபுஷ்பாங்குர-கோரகா: ॥ (அயோ. 59: 8).

மஹாராஜனே! உம் ராஜ்யத்திலிருக்கும் மரங்கள் கூட பூமொட்டு அரும்பு இவைகளோடேகூட ராமன் பிரிவினால் இளைத்து வாடியிருக்கின்றன.

[3] உபக்ரமோபஸம்ஹாரா-
வப்யாஸோபூர்வதா பலம் |
அர்த்தவாதோபபத்தீ ச
லிங்கம் தாத்பர்ய-நிர்ணயே ||

கங்களை யெல்லாம் பரிபூர்ணமாக உடையதாய் ஸ்ரீ வால்மீகி பகவானாலே [1]த்ருஷ்டமாயிருப்பதொரு சரணாகதி-வேதம். இதில் இவ்வபய-ப்ரதாந-[2]ப்ரகரணம் ஸர்வ-ரஹஸ்ய-ஸாரங்களையும் திரள வெளியிட்ட உபநிஷத்-பாகம்.

---

## இதி
## சரணாகதி-தாத்பர்ய-ப்ரபஞ்ச:
## ॥ த்ருதீயோ அதிகார: ॥

---

ஒரு க்ரந்தத்தின் உள்ளர்த்தத்தை நிச்சயிப்பதற்கு ஸாதநமான ஹேதுக்களுக்கு 'தாத்பர்ய-லிங்கங்கள்' என்று பெயர். அவை ஆறு: எந்த விஷயத்தைப் பற்றி ஆரம்பித்ததோ அதையே சொல்லிமுடிப்பது; அதையே திருப்பித்திருப்பிச் சொல்வது; அது மற்ற ப்ரமாணங்களால் கிடைக்காமலிருப்பது; அதற்குப் பலம்சொல்வது; அதைப் பற்றிப் புகழ்ந்து கூறுவது; அதை ஸ்தாபிக்க யுக்திகள் கூறுவது. எந்த ஒரு விஷயத்தைப் பற்றி இந்த ஆறும் ப்ரவ்ருத்தித்திருக்கின்றனவோ அதுதான் அந்த க்ரந்தத்திற்கோ அல்லது ப்ரகரணத்திற்கோ தாத்பர்யம்.

1 दृष्ट—பார்க்கப்பட்ட.

2 प्रकरणं—பகுதி.

# 4. ப்ரகரண-தாத்பர்ய-நிர்ணய:

இப்படி சரணாகதி-வேதோபநிஷத்தான இவ்வபய-ப்ரதாந-ப்ரகரணத்திலே, [1]"பரமாபத்-கதஸ்யாபி தர்மே மம மதிர்-பவேத்" என்று ப்ரஹ்மாவின் பக்கலிலே வரம் வேண்டிக் கொண்டு, [2]"தர்மிஷ்டஸ்-த்வம் யதா வத்ஸ ததா சைதத் பவிஷ்யதி" என்று வரம் பெற்ற ஸ்ரீ விபீஷணாழ்வான் சரணாகதி-தர்மத்தைப் பரிக்ரஹித்து அநுஷ்டிக்கையாலும், பின்பு பெருமாளையும்கூட அநுஷ்டிப்பிக்கையாலும் சரணாகதி பரம-தர்மம் என்னுமிடம் [3]சிஷ்டாசாரத்தாலே [4]ஸ்தாபிதம். இப்ப்ரகரணத்தில் முன்பே பல ஸர்க்கங்களாலே ரஜஸ்தம:-ப்ரக்ருதிகளாயிருப்பார்க்கு ஸத்வ-ப்ரக்ருதிகளாயிருப்பார் ஹிதம் சொன்னாலும் பக

1 परमापद्गतस्यापि धर्मे मम मतिर्भवेत् (உத். 10:31)
எனக்கு எந்த ஆபத்து நேர்ந்தாலும், என் மனது எப்போதும் தர்மத்திலே இருக்கவேண்டும்.

2 धर्मिष्ठस्त्वं यथा वत्स तथा चैतद् भविष्यति (உத். 10: 34)
குழந்தாய்! தர்மத்திலே நோக்கமுடைய நீ கேட்டபடியே ஆகட்டும்.

3 शिष्टाचार— பெரியோர்களுடைய அநுஷ்டானத்தாலே.

4 स्थापितं— நிலை நிறுத்தப்பட்டது.

வித்-விஷயத்தில் [1] ஆபிமுக்யம் [2] கூடாது என்னுமிடம் சொல்லிற்று. ஸத்வோத்தரனை ஸ்ரீ விபீஷணாழ்வான் சரணாகதனாய் வருகிற போது அவன் விஷயத்தில் தேவதாவதாரரான ஸ்ரீ வானரவீரர்களாலே விக்னம் [3] ப்ரஸக்தமானபடி சொல்லுகையாலே * "பகவத் விஷயத்திலே அபிமுகராவாரைத் தங்கள் குடிமக்கள் தப்பிப்போகிறார்கள் என்று நினைத்துத் தேவர்கள் விலக்குவர்கள்" என்னுமிடமும், இப்படி விக்னங்கள் வந்தாலும் [4] சுத்தபாவராய் [5] அநந்யராய் வந்தடைந்தவர்

---

* श्रूयते किल गोविन्दे भक्तिमुद्वहतां नृणाम् ।
संसारन्यूनताभीतास्त्रिदशाः परिपन्थिनः ॥ என்கிறபடியே [6]

---

1 आभिमुख्यं— நோக்கம்.

2 ஏற்படாது. 3 நேரிட்டபடி.

4 शुद्धभावाः— பரிசுத்தமான மனத்தையுடையராய்

5 (இவனைத்தவிர) வேறு கதியற்றவராய்.

6 ச்ரூயதே கில கோவிந்தே
பக்திமுத்வஹதாம் ந்ருணாம் |
ஸம்ஸார-ந்யூநதா-பீதாஸ்
த்ரிதசா: பரிபந்திந: ||

கோவிந்தனிடத்தில் பக்திசெய்பவர்களுக்கு, (தங்களுக்குக் கீழ்ப்பட்ட) ஸம்ஸாரம் குறைந்துவிடும் என்கிற பயத்தால் தேவதைகள் விக்னம் செய்கிறார்கள் என்று கேள்விப்படுகிறதில்லையா?

களை *பெருமாள்தாமே எல்லா விக்னங்களை யும் சமிப்பித்து அடிமை கொள்வார் என்னு மிடமும் வெளியிடப்பட்டது.

ஸர்வஜ்ஞ-ஸம்ஹிதாதிகளில் சொன்ன ஆநுகூல்ய-ஸங்கல்பாதிகளுமடங்க இப்ப்ரக ரணத்திலே காணலாம். எங்ஙனே என்னில்: அடியிலே

---

* संकल्पादेव भगवान् तत्वतो भावितात्मनाम् ।
व्रतान्तमखिलं कालं सेचयत्यमृतेन तु ॥ என்றும் [1]
प्रवृत्तिकालादारभ्य त्वात्मलाभावसानिकम् ।
यत्रावकाशो विघ्नानां विद्यते न कदाचन ॥ என்றும் [2]
ஸாத்வத—பௌஷ்கராதிகளில்சொல்லுகிறபடியே

---

[1] ஸங்கல்பாதேவ பகவாந்
தத்வதோ பாவிதாத்மநாம் |
வ்ரதாந்தமகிலம் காலம்
ஸேசயத்யம்ருதேந து ||

(தம்மை)உள்ளபடியே த்யானம் செய்பவர்களுக்கு பகவான் தன் ஸங்கல்பத்தாலேயே (இவர்கள் வ்ரதம் முடியும் வரையிலுள்ள எல்லாக்காலத்தையும் அம்ருதத் தினால் நினைக்கிறான். (ஸுகமாகவே நடத்துகிறான்).

[2] ப்ரவ்ருத்தி காலாதாரப்ய
த்வாத்மலாபாவஸாநிகம் |
யத்ராவகாஸோ விக்நாநாம்
வித்யதே ந கதாசந ||

(ஈச்வரனை சரணமடைவதற்காக செய்யப்படும்) முதல் ப்ரவ்ருத்தி ஆரம்பித்து பாமாத்மாவை யடையும் வரையில் எந்த விஷயத்தில் விக்னங்களுக்கு ஒருபொழு தும் இடமே கிடையாதோ.

ராவணுதிகளுக்கும் கூட ஹிதோபதேசம் பண்ணுகையாலும், தூதனாய்ச் சென்ற திருவடியை துஷ்ப்ரக்ருதியான ராவணன் அசக்யம் என்று அறியாதே நலிய நினைக்க அத்தை விலக்குகையாலும், பிறவியுறவையும் பெரிய ஐச்வர்யத்தையும் புத்ர-தாராதிகளையும் அநாதரித்து ப்ராதிகூல்யவர்ஜநம் பண்ணுகையாலும், [1] ஆநுகூல்ய-ஸங்கல்பமும் [2]ப்ராதிகூல்யவர்ஜநமும் ஸூசிதமாயிற்று. பெருமாள் ஸர்வலோக சரண்யன் என்கிற [3]வ்யவஸாயத்தாலும் * அஞ்சவேண்டும் ப்ரதேசத்திலே

---

* आजगाम मुहूर्तेन यत्र रामस्सलक्ष्मण: [4]என்கிற படியே.

---

1 आनुकूल्यसंकल्प — அநுகூலமாயிருப்பேன் என்கிற தீர்மானம்.

2 प्रातिकूल्यवर्जन — ப்ரதிகூலமாயிருப்பதை விடுவது.

3 நிச்சயம்.

4 ஆஜகாம முஹூர்த்தேந யத்ர ராமஸ்-ஸலக்ஷ்மண: (யு. 17:1).
லக்ஷ்மணனுடன் ராமனிருந்த இடத்திற்கு ஒரு முஹூர்த்த காலத்தில் வந்தான்.

அசங்கிதமாக தன்னிலமாக நினைத்து வருகையாலும் [1]"ரக்ஷிஷ்யதீதி விச்வாஸம்" காட்டப்பட்டது [2]"ராகவம் சரணம் கத:" என்கிற [3] உபாய-வரண-வாக்ய-ஸாமர்த்யத்தாலே [4]கோப்த்ருத்வ-வரணம் சொல்லிற்று. [5]உபாயாந்தர-ஸ்தாந-நிவேச-பரமான சரணசப்தத்தாலே [6]வ்யஞ்ஜிதமாய் [7]ரக்ஷா-பர-ஸமர்ப்பண-ப்ரதாநமான [8] ஆத்மநிக்ஷேபமும்

---

1 रक्षिष्यतीति विश्वासः—ரக்ஷிப்பான் என்கிற நம்பிக்கை.

2 राघवं शरणं गतः—ராமனை சரணமடைகிறேன்.

3 உபாயமாகக் கோறும் வாக்யத்தின் சக்தியாலே.

4 गोप्तृत्ववरणं—ரக்ஷகனாயிரு என்கிற ப்ரார்த்தனை.

5 மற்றொரு உபாயத்தின் (அதாவது பக்தியின்) ஸ்தாநத்தில் வைப்பதைச் சொல்லுகிறது.

6 व्यञ्जित—ஸூசிப்பிக்கப்பட்ட.

7 रक्षाभरसमर्पणप्रधान—ரக்ஷிப்பதின் பாரத்தை ஸமர்ப்பிப்பதை ப்ரதானமாகவுடைய.

8 आत्मनिक्षेप—ஆத்மாவை ஸமர்ப்பித்தல்.

[1] ஸர்வலோக-ஶரண்யாய
ராகவாய மஹாத்மநே |
நிவேதயத மாம் க்ஷிப்ரம்
விபீஷணம் உபஸ்திதம் || என்று

அந்தரங்கமாயிருப்பாரை முன்னிலையாக்கிக் கொண்டு விசதமாகச் சொல்லப்பட்டது. இவ்விடத்தில் பெருமாளும் [2] இளையபெருமாளும் முதலிகளும் கேட்கும்படி கிட்டவந்து *கூப்பிடுகிறவனுகையாலே 'பெருமாளுக்கு அறிவியுங்கள்' என்கை விவக்ஷிதமன்று.

---

* प्रणादश्च महानेषः என்கிறபடியே [3]

---

1 सर्वलोकशरण्याय राघवाय महात्मने ।
निवेदयत मां क्षिप्रं विभीषणमुपस्थितम् ॥

விபீஷணன் என்கிற நான் வந்திருக்கிறேன். ஸகல-பிராணிகளுக்கும் ரக்ஷகனும் மஹாத்மாவுமான ரகுவீரனிடத்தில் என்னை சீக்கிரம் ஸமர்ப்பியுங்கள்.

2 லக்ஷ்மணனுக்கு ஸம்ப்ரதாயப் பெயர்.

3 ப்ரணுதஶ்ச மஹாந் ஏஷ: (யு. 18: 14)
இந்தக் கூறும் உதாத்ததாயிருக்கிறது.

"நிவேதயத மாம்" என்று என்னை ஸமர்ப்பியுங்கோள் என்றபடி. [1]"ராவணோ நாம துர்வ்ருத்த:" என்று தொடங்கி, "[2]ஸோஹம் பருஷிதஸ்-தேந தாஸவச் சாவமாநித:" என்றத [3]றுதியாக [4]துஷ்ப்ர க்ருதியான ராவணனுக்குத் தான் ஹிதோப தேசம் பண்ணிப் பாழுக்கு நீரிறைத்துப் [5]பரி

* "सख्यमात्मनिवेदनं" [6]
"किङ्करोस्मीति चात्मानं देवायैवं न्यवेदयेत्" *
இத்யாதிகளிற்படியே. ||

[1] रावणो नाम दुर्वृत्तः— (ரா. யு. 17: 10)
ராவணன் என்கிற கெட்ட நடத்தையையுடையவன்.

[2] सोहं परुषितस्तेन दासवच्चावमानितः (ஷை–14)
அவனால் கடும் வார்த்தைகள் சொல்லப்பட்டு, அடிமைபோல் அவமானம் செய்யப்பட்டேன்.

[3] வரையில். [4] கெட்டஸ்வபாவமுள்ள.

[5] परिभूत— அவமதிக்கப்பட்ட.

[6] ஸக்யமாத்ம-நிவேதநம் (பாகவத. 7—5—23).
தோழமை, ஆத்மாவை ஸமர்ப்பித்தல் (என்று இவை பக்தியின் பேதங்கள்).

[7] கிங்கரோஸ்மீதி சாத்மாநம்
தேவாயைவம் ந்யவேதயேத் (ஜிதந்தே 1—14).
நான் கிங்கரனாகவேண்டுமென்று ஆத்மாவை ஸர்வேச்வரனிடத்தில் இவ்விதம் ஸமர்ப்பிக்க வேண்டும்.

பூதனைபடி சொல்லுகையாலும், [1]" ஸ்வரேண மஹதா மஹாந்" என்கிற [2]ஆர்த்த-ஸ்வரத்தாலும், " நிவேதயத மாம் க்ஷிப்ரம்" என்கிற [3] த்வராதிசயத்தாலும், [4] "ப்ரணாத: ச மஹாநேஷ ததோஸ்ய பயமாகதம்" என்கிற ஸர்வஜ்ஞனை சரண்யனுடைய வாக்யத்தாலும் [5]கார்ப்பண்யம் சொல்லப்பட்டது. ஆக இப்படி ஆநுகூல்ய-ஸங்கல்பாதி-யுக்தையாய் பரிபூர்ணையாய், த்வயத்தில் [6]பூர்வ-கண்டத்திலே சொல்லப்படுகிற [7]ஸ்வ-ரக்ஷா-பர-ஸமர்ப்பணாத்மிகையான ப்ரபத்தியை [8]ஸர்வாவஸ்தையிலும் தர்ம-ஸாரத்திலே நிலைகுலையாத ஸ்ரீவிபீஷணாழ்வான் அநுஷ்டித்தான்.

---

1 स्वरेण महता महान् (யு.17-11)
மஹானை விபீஷணன் உரத்தசப்தத்துடன் சொன்னான்.

2 आर्तस्वर—நொந்தகுரல்.

3 त्वरातिशय—அதிக விரைவு.

4 प्रणादश्च महानेष ततोस्य भयमागतम् (யு.18: 14)
ராவணனிடமிருந்து இவனுக்கு பயம் உண்டாயிருக்கிறது. ஆகையால் இவன் கண்டத்வநி பேரொலியோடு கூடியதாயிருக்கிறது.

5 कार्पण्य—எளிமை. 6 पूर्वखण्ड—முற்பகுதி.

7 स्वरक्षाभरसमर्पणात्मिका—தன்னை ரக்ஷிப்பது என்கிற பாரத்தை ஸமர்ப்பித்தல் என்கிற ரூபமுள்ள,

8 सर्वावस्था—எல்லாநிலைமை.

அதற்கு அவன் பலமாகக் [1]கோலிற்று என் என்னில் [2]ஆபாத-ரஸிகராயிருப்பார் லங்கைச்வர்யம் என்றிருப்பார்கள். ஸ்ரீ விபீஷணாழ்வான் கருத்தை [3]அடியொற்றினல் சரண்யனுன பெருமாள் திருவடிகளில் கைங்கர்யமே பலமாயிருக்கும். அது எங்ஙனே என்னில்: சரணுகதி காலந்தன்னிலே [4]"த்யக்த்வா புத்ராம்ஶ்ச தாராம்ஶ்ச ராகவம் சரணம் கத:" என்று இதர-விஷயங்களிலே [5]நைராச்யத்தைத்தானே [6]கண்டோக்தி பண்ணுகையாலும், பின்பு பெருமாளுக்கு விண்ணப்பம் செய்கிற போதும்,

[7] பரித்யக்தா மயா லங்கா
மித்ராணி ச தநாநி ச |

---

1 விரும்பியது.

2 आपातरसिक— (ஊன்றிப் பார்க்காமல்) மேலெழுந்த வாரியாகவே அறிவதில் ருசியுள்ளவர்கள்.

3 அனுஸரித்தால்.

4 त्यक्त्वा पुत्रांश्च दारांश्च राघवं शरणं गतः ॥ (யு. 17: 14)
பிள்ளையையும் மனைவியையும் விட்டு ரகுவீரனை சரணமடைந்தேன்

5 नैराश्यं— ஆசையற்றமை.

6 कण्ठोक्ति— வெளியிட்டுச் சொல்வது.

7 परित्यक्ता मया लंका मित्राणि च धनानि च ।
भवद्गतं मे राज्यं च जीवितं च सुखानि च (யு. 19: 5)
லங்கையையும், சிநேகிதர்களையும், தனங்களையும் விட்டேன். எனக்கு ராஜ்யமும், உயிரும், மற்ற ஸுகங்களும் எல்லாம் உம்மதீனம் (அதாவது உம்முடைய கைங்கர்யமே).

பவத்-கதம் மே ராஜ்யம் ச
ஜீவிதம் ச ஸுகாநி ச || என்று

'லங்கைச்வர்யாதிகளை [1]அடையவிட்டு எல்லாப் புருஷார்த்தமுமாக தேவரீர் திருவடிகளைப்பற்றினேன்' என்று விண்ணப்பம் செய்கையாலும் இவன் [2]அநந்ய-ப்ரயோஜநனை [3]அதிகாரி என்னுமிடம் [4]ஸுவ்யக்தம். ஆனபின்பு, [5]"ராஜ்யம் ப்ரார்த்தயமாநஸ்து புத்தி-பூர்வம் இஹாகத:" என்கிற திருவடிவாக்யமும், [6]"ந வயம் தத்-குலீநா: ச ராஜ்ய-காங்க்ஷீ ச ராக்ஷஸ:" என்று பெருமாளருளிச் செய்த வார்த்தையும் ராம-பக்தியாலே கலங்கின மஹாராஜருடைய [7]கிளர்த்தியை அடக்குகைக்கீடாக நீதி சாஸ்த்ரங்களிலே சொல்லும்

---

1 முழுவதும்.

2 अनन्यप्रयोजन — (பகவத் கைங்கர்யத்தைத் தவிர) வேறொன்றைப் பலமாக விரும்பாதவன்.

3 अधिकारि — யோக்யதையையுடையவன்.

4 सुव्यक्तं — மிகவும் ஸ்பஷ்டம்.

5 राज्यं प्रार्थयमानस्तु बुद्धिपूर्वमिहागतः (யு. 17:65)
ராஜ்யத்தை விரும்பினவனாய் புத்திபூர்வமாய் இங்கே வந்திருக்கிறான்.

6 न वयं तत्कुलीनाश्च राज्यकांक्षी च राक्षसः (யு. 18:13).
நாம் ராக்ஷஸ ஜாதியைச் சேர்ந்தவரல்ல; விபீஷணனும் ராஜ்யத்தை விரும்புகிறான்.

7 பரபரப்பு.

ராஜ-வ்ருத்தாந்தக் கட்டளையைக் காட்டினபடி யாமித்தனை. திருவடியும்பெருமாளும் அருளிச் செய்த பாசுரமும் ஸ்ரீவிபீஷணாழ்வான் தன் பாசுரமும் விரோதித்தால் [1] அந்தரங்க-ந்யாய த்தாலே தன் பாசுரமே ப்ரபலமாகக் கடவது. அங்ஙனேயாகில்,

[2] *அஹம் ஹத்வா தஶ-க்ரீவம்*
*ஸப்ரஹஸ்தம் ஸபாந்தவம் |*
*ராஜாநம் த்வாம் கரிஷ்யாமி*
*ஸத்யமேதத் ப்ரவீமி தே ||* என்று

'ராவணனைக்கொன்று உம்மை ராஜ்யத்திலே முடிசூட்டக் கடவோம்' என்று பெருமாள் அருளிச்செய்வானென் என்னில், அதுவும்

[3] *ஶரீராரோக்யம் அர்த்தாம்ஶ்ச*
*போகாம்ஶ்சைவ ஆநுஷங்கிகாந் |*
*ததாதி த்யாயிநாம் நித்யம்*
*அபவர்க-ப்ரதோ ஹரி: ||* என்கிற ந்யாயத்தாலே

---

1 अन्तरङ्गन्याय

2 अहं हत्वा दशग्रीवं सप्रहस्तं सबान्धवं ।
राजानं त्वां करिष्यामि सत्यमेतद् ब्रवीमि ते ॥ (யு. 19: 19)

*ப்ரஹஸ்தன் முதலிய மந்திரிகளோடும், பந்துக்களோடும் ராவணனைக் கொன்று, நான் உன்னை அரசனாகச் செய்கிறேன். இதை உனக்கு ஸத்யமாகச் சொல்லுகிறேன்.*

3 शरीरारोग्यमर्थांश्च भोगांश्चैवानुषङ्गिकान् ।
ददाति ध्यायिनां नित्यमपवर्गप्रदो हरिः ॥ (வி. த. 74–43)

*சரீரத்தின் ஆரோக்யத்தையும், ஐச்வர்யங்களையும், இவன் விரும்பாமல் வரும் மற்ற போகங்களையும் மோக்ஷத்தைக் கொடுக்கும் விஷ்ணு தன்னை த்யானம் செய்பவர்களுக்குக் கொடுக்கிறார்.*

அடங்காத சரண்ய-ப்ரீதிக்கு[1] போக்குவீடான [2] ஆநுஷங்கிக-போக-ப்ரதாநம் என்று கொள்ள [3] ப்ராப்தம். ஆகையாலேயன்றோ முடிசூட்டக் கடவோம் என்று அருளிச்செய்த பெருமாளுக்கு அதுக்கொரு [4] மறுமாற்றம் விண்ணப்பம் செய்யாதே

[5] ராக்ஷஸாநாம் வதே ஸாஹ்யம்
லங்காயாஶ்ச ப்ரதர்ஷணம் |
கரிஷ்யாமி யதா-ப்ராணம்
ப்ரவேக்ஷ்யாமி ச வாஹிநீம் || என்று

ஸர்வ நிரபேக்ஷரான திருவடியைப்போலே [6] அவஸரோசிதமான அடிமை செய்யக்கடவேன் என்று ஸ்ரீவிபீஷணாழ்வான் விண்ணப்பம் செய்தது. இவன் [7] தார்மிகத்வத்தை வர

---

1 போவதற்கு வழியான.

2 आनुषङ्गिकभोगप्रदानं — (ப்ரதானமில்லாமல்) இடையில் வரும் ஸுகத்தைக் கொடுப்பது.

3 प्राप्तं — யுக்தம். 4 பதில்.

5 राक्षसानां वधे साह्यं लङ्कायाश्च प्रधर्षणम् ।
करिष्यामि यथाप्राणं प्रवेक्ष्यामि च वाहिनीम् ॥ (யு. 19:23)

ராக்ஷஸர்களைக் கொல்வதில் உதவியும், இலங்கையைத் தகர்ப்பதும் என் உயிருள்ளவரையிலும் செய்கிறேன். ஸேனையிலும் ப்ரவேசிக்கிறேன்.

6 अवसरोचित — ஸமயத்திற்கேற்ற.

7 धार्मिकत्वं — நன்னெறி தவறாமை.

अमरत्वं மரணமில்லாமை.

மாக வேண்டிக்கொள்ள, ப்ரீதனை ப்ரஹ்மா அமரத்வத்தையும் கூடக் கொடுத்தாற்போலே அடிமைசெய்ய வேண்டிக்கொண்ட ஸ்ரீவிபீஷணாழ்வானுக்குப் பெருமாள் அடிமைக்கு உறுப்பாக ஐச்வர்யத்தையும் கொடுத்தார். ஆகையாலே [1]திருவடிநிலையை முன்னிட்டு ஸ்ரீபரதாழ்வான் நாட்டிலுள்ளாரை நியமித்திருந்தாற்போலே, [2]தர்ம-ஸம்ஸ்தாபநார்த்தமாக அவதீர்ணரான பெருமாளுடைய [3]நியோகத்தாலே [4]மட்டுப்படாத ராக்ஷஸரை வழிப்படுத்தி நடத்துகைக்காக ஸ்ரீவிபீஷணாழ்வான் ராஜ்யத்தை இசைகையால், இதுவும் ஆஜ்ஞாநுபாலநமாகையாலே கைங்கர்யகோடியிலே அந்வயித்தது. இவர் தமக்கு இசைவின்றிக்கே யிருக்க, பெருமாளுடைய [5]அநதிலங்கநீயமான [6]சபத-பூர்வக-சாஸநத்தாலே ராஜ்யம் பண்ணிஞர் என்னுமிடம் பெருமாள் தன்னுடைச்சோதிக்கு எழுந்தருளுகிறபோது

---

[1] பாதுகை.

[2] धर्मसंस्थापनार्थं— தர்மத்தை நிலைநிறுத்துவதற்காக.

[3] नियोग— கட்டளை. [4] அடங்காத.

[5] अनतिलंघनीय— மீறமுடியாத.

[6] शपथपूर्वकशासन— ஆணையிட்டுச்சொன்ன ஆஜ்ஞையாலே.

விடைகொடுத்த பாசுரத்தாலே வெளியிடப் பட்டது.

[1] யாவத் ப்ரஜா தரிஷ்யந்தி
தாவத் த்வம் வை விபீஷண |
ராக்ஷஸேந்த்ர மஹாவீர்ய
லங்காஸ்தஸ்-த்வம் தரிஷ்யஸி ||
ஶாபிதஸ்-த்வம் ஸகித்வேந
கார்யம் தே மம ஶாஸநம் |
ப்ரஜாஸ்-ஸம்ரக்ஷ தர்மேண
நோத்தரம் வக்துமர்ஹஸி || என்று

[2]பிறுக்கோடேயிறே பெருமாள் இவரை ராஜ்யத்திலே இருக்க இசைவித்தது. இப்படி இவன் [3] அநந்ய-ப்ரயோஜநனைகையாலேயிறே இவனுக்குத் தம்மிலும் [4]சீரிய கோயிலாழ்வாரை எழுந்தருளுவித்துக் கொடுத்தது.

---

1 यावत्प्रजा धरिष्यन्ति तावत् त्वं वै विभीषण ।
राक्षसेन्द्र महावीर्य लङ्कास्थस्त्वं धरिष्यसि ॥ உத். 108: 27
शापितस्त्वं सखित्वेन कार्यं ते मम शासनम् ।
प्रजास्संरक्ष धर्मेण नोत्तरं वक्तुमर्हसि ॥ (உத். 108, 29)

---

ராக்ஷஸராஜனும் மஹாவீரனுமான விபீஷண! உலகில் ப்ரஜைகள் உள்ளவரையில் நீ லங்கையிலிருந்துகொண்டு ராஜ்யபாரம் செய்துவருவாய். தோழன் என்கிற முறையில் உன்னைக் கட்டளையிடுகிறேன். நீ அதை அனுஷ்டிக்கவேண்டும். தர்மமாய் ப்ரஜைகளை ரக்ஷி. வேறு பதில் சொல்லாதே.

2 பிறுக்கு—நிர்ப்பந்தம்.

3 (ராமன் திருவடிகளில் கைங்கர்யத்தைத் தவிர) வேறொன்றைத் தனக்குப் பலமாகக் கருதாதவன்.

4 உயர்ந்த.

இப்படியன்றிக்கே [1] ஆபாத-ப்ரதீதி-பக்ஷத்தாலே இவன் ஐச்வர்யார்த்தியானாலும், [2]"மித்ர-பாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கதஞ்சந", "[3]அபயம் ஸர்வ-பூதேப்யோ ததாம்யேதத் வ்ரதம் மம" என்கிற பொதுவான பாசுரங்களாலே சரண்யாபிப்ராயத்தைப் பார்த்தால், ப்ரபத்தியானது [4]ஸாமாந்யேந [5]மோக்ஷ-பர்யந்த-ஸகல- புருஷார்த்த-ஸாதநம் என்னுமிடம் தெளியலாம்.

---

இதி

ப்ரகரண-தாத்பர்ய-நிர்ணயாதிகார:

சதுர்த்த: ||

---

1 மேலெழுந்தவாரியாகப் பார்க்கும் பக்ஷத்தாலே

2 மித்ரன் என்னும் பாவனையோடு என்னை (சரணம்) அடைந்தவனை நான் ஒருபோதும் கைவிடேன்.

3 ஸகல பூதங்களிடத்திலிருந்தும் பயமில்லாமல் செய்வேன். இது என்னுடைய வ்ரதம்.

4 பொதுவாக.

5 मोक्षपर्यन्तसकलपुरुषार्थसाधन— மோக்ஷம் உட்பட எல்லாப் புருஷார்த்தங்களுக்கும் ஸாதகம்.

## 5. சரண்ய-ஶீல-ப்ரகாஶ:

இப்படித் தன் [1]அபிமதஸித்திக்காக சரணாகதனை ஸ்ரீவிபீஷணாழ்வான் [2]"ஸர்வ-லோக-சரண்யாய" என்கிற அர்த்தத்தை "ராகவாய மஹாத்மநே" என்று [3]ஸௌலப்யத்தாலும் [4]பரத்வத்தாலும் ஸாதிக்கிறான். [5]த்ருணம் ஸுலபமேயாகிலும், ஒன்றுக்கு [6]உறுப்பல்லாமையாலே [7]அநாதரணீயம்; [8]ஸுமேரு ஆதரணீயமேயாகிலும், துர்லபமாகையாலே [9]அநுபயுக்தம். ஆகையாலே பரத்வமும் ஸௌலப்யமும் அபேக்ஷிதம்.

---

1 अभिमतसिद्धि— எண்ணம் நிறைவேறுவது.

2 सर्वलोकशरण्याय राघवाय महात्मने ।
निवेदयत मां क्षिप्रं विभीषणमुपस्थितम् ॥
(இதன் அர்த்தம் 56-ம் பக்கத்தில் காண்க).

3 सौलभ्यं—எளிதில் அடையுந்தன்மை.

4 परत्वं—மேன்மை.

5 तृण—புல்.

6 உறுப்பு-உபயோகம்.

7 अनादरणीयं— அலக்ஷ்யம் செய்யத்தக்கது.

8 सुमेरु— மேரு என்னும் ஸ்வர்ணமலை.

9 अनुपयुक्तं— உபயோகிக்க முடியாதது.

(ஸர்வ-லோக-சரண்யாய)-- உங்களுக்குப் போலே எனக்கும் பெருமாள் பக்கலிலே [1]கூறு உண்டென்கிறுன். அங்ஙனன்றிக்கே, யாவனொருவனேடே ஒரு [2]கூடல்துவக்காலே நானுங்கூட உங்களுக்குக் கல்லும் தடியும் எடுக்கவேண்டும்படியாயிருக்கிறேன், அப்படி [3]மஹாபராதனை ராவணன் தனக்கும் கூடப் பெருமாள் சரண்யராய்க் கிடிகோள் இருப்பது. இப்படிப் பொதுவான சரண்யவிஷயத்தில் ருசியில்லாமையாலே துராத்மாவான ராவணன் தன் கூறு இழக்கிறுனத்தனை. 'ராகவாய' 'மஹாத்மநே' என்று [4]பத-த்வய-ஸமபி-வ்யாஹாரத்தாலே [5]"நிலை வரம்பில பல பிறப்பாய் ஒளி வருமுழுநலம்" என்கிறபடியே அவதார தசையிலே [6]பர-தசையிலுங்காட்டில் [7]அதிசயிதமான [8]மாஹாத்ம்யத்தைச் சொல்லுகிறது. (ராகவாய)- பெருமாளுக்கு சரணுகதரக்ஷணம் பகு முதலாகப் [9]போருகிற குலதர்மமன்றே?

---

[1] பங்கு. [2] சரீரஸம்பந்தத்தாலே.
[3] महापराध:— பெரியகுற்றம் செய்தவன்.

[4] पदद्वयसमभिव्याहार—இரண்டு பதங்களின் சேர்க்கை.
[5] திருவா. மொ. 1–3–2. (தன் அவதாரங்களில்) ஒரு எல்லையும், (தன் செய்கைகளில்)ஒரு அளவுமில்லாத பலவகைப்பட்ட ஜன்மங்களையுடையவனாய், (பிறக்கப் பிறக்க)மேல் மேல் ப்ரகாசிக்கும் எல்லா கல்யாணகுணங்களையுமுடையவன்.
[6] பகவான் பரமபதத்தில் இருக்கும் நிலை.
[7] அதிகமான. [8] பெருமை. [9] நடந்து வருகிற.

(மஹாத்மநே)-கடலைக் கையிட்டிறைத்து முடியவொண்ணாதாப்போலே விசேஷித்துச் சொல்லி முடியவொண்ணாது இம்மாஹாத்ம்யம். பெருமாள் ஆச்ரித-ரக்ஷணத்தில் [1]ஒருப்பட்டால், ஆதித்யன் புறப்பட்டால் இருட்டு பின் காணவொண்ணாதாப்போலே, வரத்தாலே பூண் கட்டிவைக்கிற [2]பஹு-முக-ராக்ஷஸரையும் முன்காணவொண்ணாதபடியிருக்கும் இம்மாஹாத்ம்யம். இவ்வவதாரதசையிலுண்டான நிரதிசய-மாஹாத்ம்யத்தை [3]பர-தார-தர்சந-பராங்முகரான பெருமாள் திருமுன்பே நின்று [4]"கதஞ்சிதஹமாகத:" என்கிறபடியே, 'பெண்ணுடையுடுத்து உருமாற்றி நானொருவனும் தப்பிப்போந்தேன்' என்று ராவணனுக்கு ஜந-ஸ்தாந-வ்ருத்தாந்தத்தைச் சொன்ன அகம்பநன் வாக்யத்தாலே மஹர்ஷி வெளியிட்டான்.

---

1 முயற்சித்தால்.

2 बहुमुखराक्षस— பல முகங்களையுடைய ராக்ஷஸன் (ராவணன்); அல்லது பலவிதமான ராக்ஷஸர்கள்.

3 परदारदर्शनपराङ्मुख—பிறர் மனைவியைக் கண்ணெடுத்துப் பாராதவர்.

4 कथञ्चिदहमागतः (ஆர. 31:2)
வெகு சிரமத்துடன் (அதாவது பெண்ணுடை யுடுத்து) நான் (தப்பி) வந்தேன்.

1 அஸாத்ய: குபிதோ ராமோ
விக்ரமேண மஹாயஶா: |
ஆபகாயா: ஸுபூர்ணாயா:
வேகம் பரிஹரேச் ஶரை: ||
ஸதாரக்ரஹநக்ஷத்ரம்
நபஶ்சாப்யவஸாதயேத் |
அஸௌ ராமஸ்து ஸீதந்தீம்
ஶ்ரீமாநப்யுத்தரேந்மஹீம் ||
பித்வா வேலாம் ஸமுத்ரஸ்ய
லோகாந் ஆப்லாவயேத் இமாந் ||

---

1 असाध्यः कुपितो रामो विक्रमेण महायशाः ।
आपगायाः सुपूर्णाया वेगं परिहरेच्छरैः ॥
सतारग्रहनक्षत्रं नभश्चाप्यवसादयेत् ।
असौ रामस्तु सीदन्तीं श्रीमानभ्युद्धरेन्महीम् ॥
भित्वा वेलां समुद्रस्य लोकानाप्लावयेदिमान् ।

மஹாயஶஸ்வியான ராமன் கோபித்துக்கொண்டு பராக்ரமத்திற்கு முயன்றானால், அவனை ஒருவரும் எதிர்க்கமுடியாது; தன் பாணங்களால் ஜலம் நிறைந்த நதியின் ப்ரவாஹத்தின் வேகத்தைத் தடுத்துவிடுவான்.

(ஸூர்யன் முதலான) க்ரஹங்கள் (அச்வினி முதலான) நக்ஷத்ரங்கள், (மற்றுமுள்ள எண்ணமுடியாத) சிறிய நக்ஷத்ரங்கள் இவைகளோடு கூடின ஆகாசத்தை யும் சிதறிப்போம்படி அடித்துவிடுவான். ஸ்ரீயோடு கூடின இந்த ராமன் முழுகிக்கொண்டிருக்கும் பூமியை மேலே தூக்கிவிடுவான்.

(கோபம்கொண்டால்) கரையை உடைத்து ஸமுத்ரத்தின் ஜலத்தால் உலகங்களெல்லாம் முழுகும்படி செய்துவிடுவான்.

1 வேகம் வாபி ஸமுத்ரஸ்ய
வாயும் வா விதமேத் ஶரை: ||
ஸம்ஹ்ருத்ய வா புநர்-லோகாந்
விக்ரமேண மஹாயஶா: ||
ஶக்தஸ்-ஸ புருஷ-வ்யாக்ர:
ஸ்ரஷ்டும் புநர்-இமா: ப்ரஜா: ||
ந ஹி ராமோ தஶ-க்ரீவ
ஶக்யோ ஜேதும் த்வயா யுதி |
ரக்ஷஸாம் வாபி லோகேந
ஸ்வர்க: பாப-ஜநைர்- இவ || என்கிறபடியே

ராவணகோஷ்டியிலே அவனுக்கு ஆப்தரான வர்கள் ப்ரஸித்தமாக்கின மாஹாத்ம்யம் இது.

---

1 वेगं वापि समुद्रस्य वायुं वा विधमेच्छरैः ||
संहृत्य वा पुनर्लोकान् विक्रमेण महायशाः ।
शक्तः स पुरुषव्याघ्रः स्रष्टुं पुनरिमाः प्रजाः ||
न हि रामो दशग्रीव शक्यो जेतुं त्वया युधि ।
रक्षसां वापि लोकेन स्वर्गः पापजनैरिव || ஆர. 31: 23-27

---

(அப்படி உடைந்த) ஸமுத்ரத்தின் வேகத்தையோ, அல்லது பெரும்காற்றின் வேகத்தையோ தன் அம்புகளால் உடனே நிறுத்திவிடுவான்.

புருஷச்ரேஷ்டனை புகழ்வாய்ந்த ராமன் தன் ஸங்கல்பத்தாலேயே இவ்வுலகங்களை ஸம்ஹரித்து மறுபடியும் ப்ரஜைகளை எல்லாம் ஸ்ருஷ்டிக்கும் சக்தியுள்ளவன்.

ராவண! பாபம் செய்தவர்களால் ஸ்வர்க்கம் அடைய முடியாதாப்போலே,உன்னாலேயாவது, ராக்ஷஸ ஜனங்கள் எல்லாராலேயாவது ராமனை சண்டையில் ஜயிக்கமுடியாது.

பெருமாளுடனே [1]பொருது இளைத்துக் கலங்கின ராவணன் தெளிந்து, தன் தேரை மீட்டுக்கொண்டுபோன ஸாரதியை வெறுத்துச் சொல்லும்போதும் [2]"சத்ரோ: ப்ரக்யாத வீர்யஸ்ய ரஞ்ஜநீயஸ்ய விக்ரமை:" என்று மேலே இவ்வவதார-மாஹாத்ம்யத்தைச் சொல்லக்கடவனிறே.

இப்படி ஸ்ரீவிபீஷணாழ்வான் 'மஹாத்மநே' என்றும் 'ராகவாய' என்றும் சுருங்கச் சொன்ன பரத்வமும் ஸௌலப்யமும் மேலே [3]முதலிகள் பாசுரத்தாலும் வெளியிடப்பட்டது. எங்ஙனே யென்னில்:

[4] அஜ்ஞாதம் நாஸ்தி தே கிஞ்சித்
த்ரிஷு லோகேஷு ராகவ |
ஆத்மாநம் பூஜயந் ராம
ப்ருச்சஸ்-யஸ்மாந் ஸுஹ்ருத்தயா ||

என்றார்கள். இவ்வர்த்தம் தன்னையே

---

[1] யுத்தம் செய்து.

[2] शत्रोः प्रख्यातवीर्यस्य रञ्जनीयस्य विक्रमैः (யு. 106: 6)
மஹாவீரன் என்று ப்ரஸித்தி பெற்றவனும், என் பராக்ரமத்தைக் காட்டி ஸந்தோஷப்படுத்தத் தக்கவனுமான என் சத்ரு (பார்த்துக்கொண்டிருக்கும்பொழுது யுத்தத்தில் ஆசையுடைய நான் பயங்காளியாக்கப்பட்டேன்.)

[3] வானரர்களுக்குப் பெயர்.

[4] अज्ञातं नास्ति ते किञ्चित् त्रिषु लोकेषु राघव ।
आत्मानं पूजयन् राम पृच्छस्यस्मान्सुहृत्तया ॥(யு. 17: 33)
ராம! மூவுலகங்களிலும் உமக்குத் தெரியாதது உண்டோ? (எங்களிடமுள்ள) நட்பினால் எங்கள் ஒவ்வொருவரையும் கௌரவித்துக்கொண்டு நீர் இவ்விதம் எங்களைக்கேட்கிறீர்.

[1] த்வம் ஹி ஸத்ய-வ்ரத: ஶூரோ
தார்மிகோ த்ருட-விக்ரம: |
பரீக்ஷ்ய-காரீ ஸ்ம்ருதிமாந்
நிஸ்ருஷ்டாத்மா ஸுஹ்ருத்ஸு ச ||

என்று விவரித்தார்கள்.

(த்வம் ஹி)—என்கிற இத்தாலே மேல் சொல்லப்படுகிற குணங்களுக்கெல்லாம் [2] அதிசயாவஹமான [3] ஸ்வரூப-வைலக்ஷண்யம் சொல்லுகிறது. பொற்றாமரைப்பூவின் பரிமளத்திற்கு அல்லாத தாமரைப்பூவின் பரிமளத்தைக் காட்டில் [4] ஆச்ரய-வைலக்ஷண்யத்தாலும் அதிசயம் உண்டாயிருக்குமிறே. இவ்வர்த்தத்தை

[5] குணாயத்தம் லோகே குணிஷு ஹி
மதம் மங்களபதம்
விபர்யஸ்தம் ஹஸ்தி-க்ஷிதிதர-
பதே தத் த்வயி புந: |

---

1 त्वं हि सत्यव्रतः शूरो धार्मिको दृढविक्रमः ।
परीक्ष्यकारी स्मृतिमान् निसृष्टात्मा सुहृत्सु च (யு. 17: 34)

செய்த ப்ரதிஜ்ஞையை நிறைவேற்றுபவர்; வீரன்; தர்மம் தவறாதவர்; கலங்காத பராக்ரமமுள்ளவர்; தீர ஆலோசித்துக் கார்யங்களைச் செய்பவர்; (செய்நன்றி) மறவாதவர்; சிநேகிதர்கள் விஷயத்தில் முற்றும் கட்டுப்பட்டவர்.

2 अतिशयावह— பெருமையைத் தருவதான.

3 ஸ்வரூபத்தாலுண்டான வேற்றம்.

4 பொன்னாலானதாகையால் வாஸனைக்கு இருப்பிடமான த்ரவ்யத்தாலும் உண்டான பெருமை.

5 गुणायत्तं लोके गुणिषु हि मतं मङ्गलपदं
विपर्यस्तं हस्तिक्षितिधरपते तत्त्वयि पुनः ।

குணாஸ்-ஸ்த்ய-ஜ்ஞாந-ப்ரப்ருதய
உத த்வத்-கததயா |
பூயம் யாதா இதி ஹி
நிரணைஷ்ம ஶ்ருதி-வஶாத் ||

என்கிற ச்லோகத்திலே உபபாதித்தார்கள். (ஸத்ய-வ்ரத:)-ஸர்வலோக-சரண்யனான தேவரீருடைய சரணாகத-ரக்ஷண-வ்ரதத்தை ராவண-பர்யந்தமாக எவ்விஷயத்திலே விலக்கலாம். (சூர:)—இவ்வ்ரதத்திற்கு விரோதிகளை

---

गुणास्सत्यज्ञानप्रभृतय उत त्वद्गततया

शुभीभूयं याता इति हि निरणैष्म श्रुतिवशात् ॥

(வர. ஸ்தவ. 11)

உலகில் நல்ல வஸ்துக்களை அவைகளிலிருக்கும் நல்ல குணத்தைப் பற்றியே 'மங்களமானது' (சிறந்தது) என்று சொல்லுகிறார்கள். ஹஸ்திகிரீச! உன்னிடத்திலோ, இது மாறியிருக்கிறது. (எப்படியெனில்) ஸத்யம், ஞானம் முதலிய குணங்கள் உன்னையடைந்தபடியாலேயே பெருமையை யடைந்தன என்றன்றோ வேதாந்த வாக்யங்களால் நிச்சயம் செய்திருக்கிறோம்.

[1] யதார்ஹமாக தேவரீர் [2] அமோகங்களான அம்புகளாலே யாதல், [3] உத்தரங்களாலே யாதல் வெல்லும் [4] சேவகம் வேறொருவர்க்குண்டோ? (தார்மிக:)-சரணாகத-ரக்ஷண-தர்மத்திலே நிலையுடையீர் தேவரீரேயன்றோ? (த்ருட விக்ரம:)—ஆச்ரிதார்த்தமான தேவரீருடைய பராக்ரமத்தை விரோதிகளாலே யாதல், ஆச்ரிதர் பக்கல் குற்றங்காட்டும் [5] பரிவராலே யாதல் விலக்கப்போமோ? (பரீக்ஷ்ய-காரீ)—ஸர்வஜ்ஞராய் [6] அஷ்டாங்கையான புத்தியாலே ஆராய்ந்து செய்தருளும் கார்யங்களுக்கு அடியோங்களைக் கேட்கவேண்டுவதுண்டோ? (ஸ்ம்ருதிமாந்) தேவரீர் வஸிஷ்டாதிகளான ஞான-வ்ருத்தர்களுக்கு ராம-குருக்கள் என்று ஒரு [7] தரம் கொடுக்கைக்காக அவர்கள் பக்கலிலே கேட்டருளின அர்த்தங்களில் அவஸரங்களில் உத

---

1 यथार्ह—அவரவர்களுக்குத் தக்கபடி.

2 अमोघ—வீணாகாத. 3 பதில்.

4 வீர்யம். 5 பரிவர்—பரிந்து பேசுபவர்.

6 எட்டு அங்கங்களையுடைய புத்தி; அவையாவன: சீக்ரத்தில் க்ரஹிப்பது; மறவாமல் தரிப்பது; ஸமயத்தில் ஞாபகப்படுத்திக்கொள்வது; பிறருக்குச் சொல்லிக்கொடுப்பது; ஊஹித்துத் தானாய்த் தெரிந்துகொள்வது; ஸமயோசிமாய் மாற்றுவது; பகுத்தறிவு; தத்வ ஞானம்.

7 பெருமை.

வாதனுண்டோ? (ஸ்ம்ருதிமாந்)—

[1] ந ஸ்மரத்-யபகாராணாம்
ஶதமப்யாத்ம-வத்தயா |
கதஞ்சித் உபகாரேண
க்ருதேநைகேந துஷ்யதி ||

என்னும்படியன்றோ தேவரீருடைய [2]க்ருதஜ்ஞதை யிருக்கும்படி. (நிஸ்ருஷ்டாத்மா ஸுஹ்ருத்ஸு ச)- * தேவரீருடைய ஆத்மாத்மீயங்களெல்லாம் ஆச்ரிதரான அடியோங்கள் [3]இட்டவழக்காக்கியன்றோ தேவரீர் வைப்பது. ஆகையால் [4]தாக்ஷிண்ய-பரதந்த்

---

* वरद सकलमेतत् संश्रितार्थं चकर्थ என்னும்படி [5]

---

1 न स्मरत्यपकाराणां शतमप्यात्मवत्तया ।
कथञ्चिदुपकारेण कृतेनैकेन तुष्यति ॥ (அ. 1: 11)

நூற்றுக்கணக்கான அபராதங்களை ஒருவன் செய்திருந்தாலும், ராமன் தன் மனதை அடக்கினவராகையால், அவற்றை நெஞ்சினால் நினைக்கமாட்டார். எவ்விதத்திலாவது ஒருவன் ஒரு உபகாரம் செய்தால், அதனால் எப்போதும் ஸந்தோஷப்படுவார்.

2 कृतज्ञता—நன்றியறிவு.

3 இட்டவழக்கு—பாதந்த்ரம்(சொன்னபடிசெய்வது).

4 दाक्षिण्यपरतन्त्र — தாக்ஷிண்யத்திற்குக் கட்டுப்பட்டவர்.

5 வரத ஸகலமேதத் ஸம்ஶ்ரிதார்த்தம் சகர்த்த. (வர. ஸ்த. 63) வரத! இவை எல்லாவற்றையும் உன்னை யண்டினவர்களுக்காகச் செய்திருக்கிறாய்.

ரரான தேவரீர் திருவுள்ளத்தாலே [1]கோலின கார்யத்தைக் [2]காபேயரான எங்களையும் இசைவித்துக்கொண்டு செய்தருளுவதாகவன்றே எங்களைக் கேட்டருளுகிறது' என்று இப்படிப் பெருமாளைக் கொண்டாடி, [3]பரிவாலே கலங்கின அங்கத-சரப-ஜாம்பவத்-[4]ப்ரப்ருதிகளான முதலிகள் சில [5]ஹேத்வாபாஸங்களை ஹேதுக்களாகக் கொண்டு விபீஷண [6]பரிக்ரஹத்தைக் [7]கடுக [8]இசையாதொழிய, [9]தத்வ-வித்தாய் ஸந்மந்த்ரியான திருவடி அவர்கள் சொன்ன ஹேத்வாபாஸங்களையெல்லாம் [10]ப்ரதிக்ஷேபித்து [11]ஸுபரீக்ஷிதங்

---

1 செய்ய நினைத்த.

2 कापेय— குரங்கின் (சஞ்சலமான) ஸ்வபாவத்தையுடைய.

3 பரிவு—அன்பு. 4 प्रभृति—முதலிய.

5 हेत्वाभास— (உண்மையில் ஹேதுவில்லாதபோதிலும்) ஹேதுபோல் தோன்றுமவை.

6 परिग्रह—அங்கீகாரம்.

7 சீக்கிரம். 8 ஏற்றுக்கொள்ளாதொழிய.

9 तत्त्ववित्— உண்மையை யறிந்தவன்.

10 தள்ளி.

11 सुपरीक्षित — நன்கு ஆராயப்பட்ட.

களான நிர்தோஷ-குணங்களாலே ஸ்ரீவிபீஷணாழ்வான் [1]பரிக்ராஹ்யன் என்று விண்ணப்பம் செய்தான்.

அவ்வளவில், பெருமாள் சரணாகதனை [2]நலியச் சொல்லுகிற [3]திரளிலே இவன் பரிக்ராஹ்யன் என்று சொல்லுவோரையும் பெற்றோம் என்று திருவுள்ளம் உகந்து * [4]அகம்பநீயமான ஸ்வமதத்தை அருளிச் செய்யத் தொடங்கினார். 'விபீஷணன் [5]ஸதோஷனு

---

* अथ रामः प्रसन्नात्मा श्रुत्वा वायुसुतस्य ह ।
प्रत्यभाषत दुर्धर्षः श्रुतवानात्मनि स्थितम् ॥ [6]

என்கிறபடியே

---

1 அங்கீகரிக்கத்தக்கவன்.

2 பீடிக்க. 3 கூட்டம்.

4 अकंपनीय—(பிறரால்) அசைக்கமுடியாத.

5 सदोष—தோஷமுள்ளவன்.

6 அத ராம: ப்ரஸந்நாத்மா
ஶ்ருத்வா வாயுஸுதஸ்ய ஹ |
ப்ரத்யபாஷத துர்த்தர்ஷ:
ஶ்ருதவாந் ஆத்மநி ஸ்திதம் ‖ (யு. 18: 1.)

பிறகு ஹநுமானின் வார்த்தையைக்கேட்டு கொஞ்சம் தெளிந்த மனத்தராய், எல்லாம் கற்றறிந்தவராதலால் பிறரால் சலிப்பிக்கமுடியாத ராமன் தன் மனதிலிருந்த அபிப்பிராயத்தைச் சொன்னார்.

கையாலே [1]சங்கநீயன் என்ற அங்கதாதி-மத ங்களுக்கும், இவன் நிர்தோஷனுகையாலே பரிக்ராஹ்யன் என்கிற திருவடி-மதத்திற்கும் விருத்தமாக, ஸதோஷனேயாகிலும் சரணாகதன் என்று பேரிட்டு வந்தவன் பரிக்ராஹ்யன்' என்று தாமருளிச்செய்யப்புகுகிற மதம் [2]அவ்வோலக்கத்தில் ஸர்வ-விருத்தமாகையாலே இத்தை எல்லோரும்கூட அநாதரிப்பார்கள் என்று பார்த்தருளி, *'நம்முடைய மதத்தை நாமும் சொல்ல நினையாநின்ருேம்; அதனுடைய அநுஷ்டாநம் பின்பு பார்த்துக்கொள்ளுகிருேம்; நமக்குப் பரிவரான நீங்கள் நாம்

---

* ममापि तु विवक्षाऽस्ति काचित्प्रति विभीषणं ।
श्रोतुमिच्छामि तत्सर्वं भवद्भिः श्रेयसि स्थितैः ॥ [3]

என்று

---

[1] ஸந்தேஹப்படத் தக்கவன். [2] ஓலக்கம்-கோஷ்டி.

[3] மமாபி து விவக்ஷாஸ்தி
காசித் ப்ரதி விபீஷணம் |
ஶ்ரோதுமிச்சாமி தத் ஸர்வம்
பவத்பி: ஶ்ரேயஸி ஸ்திதை: || (யு. 18: 2)

விபீஷணனைக் குறித்து எனக்கும் சிறிது சொல்ல வேண்டியதிருக்கிறது. என் நன்மையைக் கோறும் நீங்கள் அதைக் கேட்கவேண்டுமென்று விரும்புகிறேன்.

சொல்லுகிற வாக்யத்தை விபீஷணனுடைய சரணாகதி-வாக்யம் பட்டது படுத்தி அநாதரியாதே கேட்டுத்தரவேணும்' என்று இரந்தருளினார்.

இப்படி முதலிகள் [1]செவிதாழ்க்கும்படி இரந்து, தம்முடைய ஸ்வபாவம் சொல்லுவரைப் போலே ஸ்வவஸித்தாந்தத்தை [2]ஸமீசீநமான ஹேதுவோடே கூடச் சுருங்க அருளிச் செய்கிறார்.

[3] மித்ர-பாவேந ஸம்ப்ராப்தம்
ந த்யஜேயம் கதஞ்சந |
தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத்
ஸதாம் ஏதத் அகர்ஹிதம் ||

---

[1] காதுகொடுத்துக் கேட்கும்படி.

[2] समीचीन— ஸரியான.

[3] मित्रभावेन संप्राप्तं न त्यजेयं कथञ्चन ।
दोषो यद्यपि तस्य स्यात् सतामेतदगर्हितम् ॥ (யு. 18:3)·

மித்ரன் என்கிற பாவனையுடன் என்னிடம் வந்தவனை, அவனிடத்தில் தோஷங்களிருந்தாலும், நான் ஒரு பொழுதும் கைவிடமாட்டேன். இதை ஸாதுக்கள் நிந்திக்கமாட்டார்கள்.

பெருமாள் தம்முடைய [1]சீர்மையாலே ஆச்ரிதனைத் தம்மோடு [2]ஒக்கப் பார்த்தருளி சரணாகதன் என்று [3]புல்லிதாகச் சொல்லமாட்டாமல், 'மித்ரபாவேந' என்று அருளிச் செய்கிறார். பெருமாளோடு [4]துல்ய-ஶீலையான பிராட்டியும் *சரணாகதி-சப்த-விஷயத்திலே [5]மைத்ரீ' என்று அருளிச் செய்தாளிறே. (மித்ர-பாவேந)- [6]மித்ரத்வேந. இத்தால் இங்கு [7]ஆநுகூல்ய-ஸங்கல்பாதி-பூர்வகமாகப் பண்ணின [8]ஆத்ம-ரக்ஷா-பர-ஸமர்ப்பண-ஸம்பந்தம் ஸூசிதமாகிறது. அங்ஙனன்றிக்கே, மித்ர-பாவனையால் என்னவுமாம்; [9]'உள்ளில் லையேயாகிலும் சரணாகதன் என்று பேரிட்டு

---

* विदितः स हि धर्मज्ञः शरणागतवत्सलः ।
तेन मैत्री भवतु ते यदि जीवितुमिच्छसि ॥ என்று. [10]

---

[1] மேன்மை. [2] ஸமானமாக. [3] இழிவாக.

[4] तुल्यशीला—ஸமானமான ஸ்வபாவத்தை யுடையவள்.

[5] தோழமை. [6] தோழமையோடு.

[7] आनुकूल्यसंकल्पादिपूर्वक— (பகவானுக்கு) அநுகூலனயிருப்பேன் என்னும் ஸங்கல்பம் முதலியவற்றை முன்னிட்டுக்கொண்டு.

[8] आत्मरक्षाभरसमर्पण — ஆத்மாவை ரக்ஷிக்கவேண்டிய பாரத்தை (ஈச்வரனிடத்தில்) ஒப்பித்தல்

[9] மனதிலில்லையேயாகிலும்.

[10] 40-ம் பக்கம் பார்க்க.

வந்தாரை நாம் விடமாட்டோம்' என்கிறார். இப்படி [1]வ்யாஜ-மாத்ர-ஸாபேக்ஷமான பெருமாள் திருவுள்ளத்தை [2]அடியொற்றி

[3] பாபீயஸோபி ஶரணாகதி-ஶப்த-பாஜ:
நோபேக்ஷணம் மம தவோசிதமீஶ்வரஸ்ய |
த்வத்-ஜ்ஞாந-ஶக்தி-கருணாஸு ஸதீஷு நைவ
பாபம் பராக்ரமிதுமர்ஹதி மாமகீநம் ||

என்று பூர்வர்கள் விண்ணப்பம் செய்தார்களிறே. (ஸம்ப்ராப்தம்)-இவன் ராவண-[4]க்ராஹ-க்ருஹீதனை, கடலுக்கு அக்கரைக்கே நின்று 'ராகவம் ஶரணம் கத:' என்றானாகில்

---

1 व्याजमात्रसापेक्ष—ஒரு அல்பஹேதுவை மாத்ரம் எதிர்பார்க்கிற.

2 அநுஸரித்து.

3 पापीयसोऽपि शरणागतिशब्दभाजः
नोपेक्षणं मम तवोचितमीश्वरस्य ।
त्वज्ज्ञानशक्तिकरुणासु सतीषु नैव
पापं पराक्रमितुमर्हति मामकीनम् ॥(அதிமா. ஸ்த. 61).

நான் அதிக பாபியாயிருந்தாலும், சரணம் என்கிற சப்தத்தைச் சொல்லியிருப்பதால், என்னை உபேக்ஷிப்பது ஈச்வரனான உனக்குத் தகுதியல்ல. உன்னுடைய ஞானம், சக்தி, கருணை இவை மூன்றுமிருக்கும்பொழுது, என்னுடையதான பாபம் அவற்றை மேற்கொண்டு தன் பலத்தைக்காட்ட சக்தியற்றது.

4 ग्राहगृहीत—(ராவணன் என்கிற) முதலையால் பிடிக்கப்பட்டவனை.

நாம் [1] அதி-த்வரையோடே [2] வைநதேயகதியாலே அக்கரைக்கே செல்லவேண்டியிருக்க, நாமிருந்தவிடத்திலே [3] பங்கோருபரி கங்கா-நிபதந-ந்யாயத்தாலே வந்த விவனை நாம் விடும்படி யென்? (ஸம்ப்ராப்தம்)—[4] ஸம்யக்ப்ராப்தம்; இங்கு ஸம்யக்த்வமாவது—

[5] "த்யக்த்வா புத்ராம்ஶ்ச தாராம்ஶ்ச"
"பரித்யக்தா மயா லங்கா
மித்ராணி ச தநாநி ச |
பவத்-கதம் மே ராஜ்யம் ச
ஜீவிதம் ச ஸுகாநி ச" || என்கிறபடியே

[6] ஹேயோபாதேய-விபாகம் பண்ணிக் கழிக்க வேண்டுவது கழித்து, கைக்கொள்ளவேண்டுவது கைக்கொண்டு, 'சரணாகதன்' என்கிற

---

1 மிகவிரைவாக.

2 वैनतेयगति— கருடனுடையது போன்ற வேகத்தாலே.

3 पङ्कोरुपरि गङ्गानिपतनन्याय— முடவன் (இருந்த இடத்திலேயே) அவன்பேரில் கங்கை வந்து விழுந்தது என்கிற கணக்கிலே.

4 सम्यक्प्राप्तं— செம்மையாக வந்தவன்.

5 இதன் அர்த்தம் 59ம் பக்கத்தில் காண்க.

6 हेयोपादेयविभाग— விடவேண்டுவது, கைக்கொள்ள வேண்டுவது என்கிற பிரிவு.

[1] உக்தி-மாத்ரமே [2] பற்ருசாகப்பற்றி, [3] அதி ஶங்கை தீர்ந்து, [4] அந்தரங்கரைப் [5] புருஷ காரமாக முன்னிட்டுக்கொண்டுவருகை. (ந த்யஜேயம்)—இவன் [6] பரித்யாஜ்யனே பரிக்ராஹ்யனே என்கிற [7] மீமாம்ஸை எதுக்கு உறுப்பாகிறது? 'சரணுகதன்' என்கிற சப்தத்தை நம் செவிப்படுத்தினவனை நாம் விடவல்லோமோ? (கதஞ்சந)-சரணுகதனுக்குக் குணங்களில்லையேயாகிலும், தோஷங்கள் [8] ப்ரசுரங்களேயாகிலும், இவனைக் கைக்கொள்ளுகை பரிவாரனுர்க்கு [9] அபிமதம் அன்றேயாகிலும், இவனைக் கைக்கொண்டால் மேல் [10] த்ருஷ்டாத்ருஷ்ட-ப்ரத்யவாய-ஸஹஸ்ரமுண்டேயாகிலும்,

---

1 उक्ति— சொல். 2 பற்ருசு—பிடிப்பு.

3 अतिशंका— ஸந்தேஹம்.

4 மிகவும் நெருங்கிப் பழகுவோர்.

5 पुरुषकार— சிபார்சு. 6 परित्याज्य—விடத்தக்கவன்.

7 मीमांसा—ஆராய்ச்சி.

8 प्रचुर—அதிகம். 9 இஷ்டம்.

10 दृष्टादृष्टप्रत्यवायसहस्र— எண்ணியும் எண்ணுமலும் வரும் ஆயிரக்கணக்கான இடைஞ்சல்கள்.

[1] ஒருபடிக்கும் நாமிவனை விடமாட்டோம். இச்ச்லோகத்தில் [2]பூர்வார்த்தத்தாலே "ஸந் தாம்" இத்யாதியான ச்ருதி-வாக்யம் [3] உபப் ருஹ்மிதமாய்த்து. "உன்னுடையவன் நான், உனக்கே பரம் என்று ஒருக்கால் உறவு பண் ணுவதடியாக, ஒருக்காலத்திலும் இவனை ஸர் வேச்வரன் விடான்" என்றிறே இச்ச்ருதியின் பொருள்.

இப்படி ஒருபடியாலும் சரணாகதனைத் தாம் விடமாட்டாத ஸ்வபாவத்தை அருளிச் செய்து, முதலிகள் விண்ணப்பம்செய்த [4] பரித் யாஜ்யதா-ஹேதுக்களான தோஷங்களுக்கு [5] ஸாத்யத்தோடு வ்யாப்தி யில்லாமையாலே

---

1 எவ்விதத்திலும்.

2 पूर्वार्धे — முன்பாதி.

3 उपबृंहित — வ்யாக்யாநம் செய்யப்பட்டது.

4 परित्याज्यताहेतु — விடத்தக்கவன் என்பதற்கான காரணம்.

5 साध्य — நாம் ஸ்தாபிக்க விரும்பும் வஸ்து; (உ-ம்) பர்வதத்தில் புகைதெரிவதால் நெருப்பு இருக்கிறது என்று ஒருவன் அநுமாநம் செய்கிருன். இதில் நெருப்பு ஸாத்யம்; புகைஹேது, புகையுள்ள விடங் களிலெல்லாம் நெருப்புமிருக்கும் என்று சொல்வ தற்கு வ்யாப்தி (व्याप्ति) என்று பெயர். அதாவது இரண்டு வஸ்துக்களுக்கும் எப்போதுமிருக்கும் ஸம்பந்தம்.

அவையுண்டேயாகிலும் [1] அகிஞ்சித்-கரம் என்கிற திருவுள்ளத்தாலே அவர்கள் ஶங்கித்த தோஷங்களுடைய ஸ்வரூப-[2]ஸத்பாவத்தை இசைகிறார். (தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத்) இவ்விடத்தில் [3]அப்யநுஜ்ஞை தோற்றுகைக்காகவாதல், [4]ஸம்பாவனையைப் பற்றவாதல், துஷ்டனையும் சரணாகத-சப்த-மாத்ரத்தாலே பரிக்ரஹித்தான் என்கிற [5]மஹா-குண-ஸித்யர்த்தமாக [6]தோஷ ப்ரார்த்தனையைப் பற்றவாதல் 'ஸ்யாத்' என்கிறார். 'தோஷ:' என்கிற [7]ஸாமாந்ய-நிர்தேஶத்திற்கு 'நீங்கள்சொன்ன தோஷங்களாகவுமாம், நீங்கள் சொல்லாத [8]ஸாக்ஷாத்-ராவணாதி-கதமான தோஷாந்தரங்

---

1 अकिञ्चित्कर—ஒன்றைச் செய்ய சக்தியற்றவை.

2 सद्भाव—இருத்தல்.

3 अभ्यनुज्ञा—(இருந்தால் இருக்கட்டும் என்கிற) ஸம்மதி.

4 संभावना—இருக்குமா என்கிற எண்ணம்.

5 महागुणसिद्ध्यर्थं—சிறந்த குணத்தை அடைவதற்காக.

6 दोषप्रार्थना—தோஷம் இருக்கவேண்டும் என்கிற ப்ரார்த்தனை.

7 பொதுவாகச் சொன்னதற்கு.

8 நேராகவே ராவணன் முதலானோரிடமுள்ள வேறு தோஷங்களாகவுமாம்.

களாகவுமாம்' என்று கருத்து. இத்தோஷங்க ளெல்லாம் பரித்யாஜ்யதா-ஹேதுக்களாவது சரணாகத-[1]வ்யதிரிக்த-விஷயத்திலே என்று 'தஸ்ய ஸ்யாத்' என்கிற ஸர்வ-லோக-சரண்ய ரான பெருமாளுக்குத் திருவுள்ளம். ஆகை யாலேயிறே [2]"யதி வா ராவணஸ்-ஸ்வயம்" என்றும், ராவணன் தன்னைக் குறித்தும் [3]"ந சேத் ஶரணமப்யேஷி" என்று மருளிச் செய் கிறது.

தேவரீர் [4]ஆர்த்ர-ஸ்வபாவராகையாலே துஷ்ட-பரிக்ரஹம் பண்ணினால் நாட்டிலே [5]சிஷ்ட-கர்ஹை பிறவாதோ வென்ற முதலி களுக்குக் கருத்தாக அதுக்கும் உத்தரம் அரு ளிச் செய்கிறார்-(ஸதாம் ஏதத் அகர்ஹிதம்). அகர்ஹிதம்- [6]கர்ஹிதாத் அந்யத்; பூஜிதம்

---

1 व्यतिरिक्त— (சரணாகதனைத்) தவிர மற்றவர்.

2 यदि वा रावणः स्वयं (யு. 18–35.)

(ஸுக்ரீவ! விபீஷணனையிருந்தாலும்) அல்லது ராவ ணனேயாயிருந்தாலும் (இவனை அழைத்து வா).

3 39-ம் பக்கம் பார்க்க.

4 आर्द्रस्वभाव— இளகிய மனதையுடையவர்.

5 शिष्टगर्हा— பெரியோரால் செய்யப்படும் நிந்தை.

6 गर्हितादन्यत्— நிந்தைக்கு மாறானது; (கொண்டா டப்பட்டது).

என்றபடி. நாம் சரணாகதனை தோஷம் பாராதே பரிக்ரஹித்தால், "வத்யனேயாகிலும் சரணாகதனை அழியக்கொடுக்கலாகாது" என்கிற ச்ருத்யர்த்தத்தை அறிந்து அநுஷ்டித்துப் போருகிற வஸிஷ்ட பகவான், விச்வாமித்ரபகவான் [1]உள்ளிட்ட ஸத்துக்கள் 'நாம் பண்ணின தர்மோபதேசம் பலித்தது' என்று கொண்டாடும்படியாம். நீங்கள் சொல்லுகிற படியே கேட்டு நாம் கைவிட்டால், அவர்கள் நம்மை கர்ஹிக்கும்படியாம். ஆகையால் நமக்குக் கார்யம் தப்பாமைக்கு நீதி சொல்லப் பரிவும் [2]நிரப்பமுமுடைய நீங்கள் வஸிஷ்ட-விச்வாமித்ர - ப்ருஹஸ்பதி--ரகு-சிபி-ப்ரப்ருதிகளான ஸத்துக்களும் நெஞ்சாறல் படாமே, நம் ஸ்வபாவத்தையும் குலையாதே நம்மைப் பெறப் பாருங்கோள் என்று திருவுள்ளம்.

---

இதி சரண்ய-ஶீல-ப்ரகாஶ:

பஞ்சமோதிகார:

---

[1] உள்ளிட்ட—உட்பட.

[2] நிரப்பம்—பூர்ணமானயோக்யதை.

## 6. சரண்ய-வைபவ-ப்ரகாச:

இப்படிப் பெருமாள் அருளிச்செய்தவார்த்தையைக்கேட்டு [1]மஹாராஜர் [2]கூட-ஹ்ருதயனை ராக்ஷஸனுடைய அநுப்ரவேசத்தாலே என் விளையப் புகுகிறதோ வென்று பெருமாள் பக்கல் பரிவாலே கலங்கி, பின்பு *விபீஷண-[3]தௌர்ஜந்யாதிகளைக் காட்டிப் பெருமாளை விலக்கப் பார்க்க, பெருமாள் ராஜ-நீதி-மர்யாதையாலே உத்தரமருளிச் செய்தார். பின்னையும் மஹாராஜர் 'பெருமாளுடைய [4]ப்ரபந்ந-பாரதந்த்ர்ய-காஷ்டையாலேயிறே நாம் விண்ணப்பம் செய்த வார்த்தை திருவுள்ளத்தில் படாதே இருக்கிறது' என்று புத்திபண்ணி, ஒரு ப்ரபத்திக்கு இரண்டு ப்ரபத்தியாகப்

---

* को नाम स भवेत्तस्य यमेष न परित्यजेत् ।
ईदृशं व्यसनं प्राप्तं भ्रातरं यः परित्यजेत ॥ என்று [5]

---

1 ஸுக்ரீவனுக்கு ஸம்ப்ரதாயப் பெயர்.

2 गूढहृदय— மறைக்கப்பட்ட எண்ணத்தையுடைய.

3 दौर्जन्य— கெட்ட நடத்தை.

4 प्रपन्नपारतन्त्र्यकाष्ठा— தன்னை சரணமடைந்தவனுக்குப் பாரதந்த்ரனாயிருக்கும் தன்மையின் எல்லை

5 கோ நாம ஸ பவேத்தஸ்ய
யமேஷ ந பரித்யஜேத் |
ஈத்ருஸம் வ்யஸநம் ப்ராப்தம்
ப்ராதரம் ய: பரித்யஜேத் || (யு. 18: 5)

இப்படிப்பட்ட ஆபத்திலிருக்கும் ஸஹோதரனையே கைவிடுமிவன் வேறு எவனைத்தான் விடமாட்டான் ?

பண்ணுவோம் என்று இளையபெருமாளையும் கூட்டிக்கொண்டு திருவடிகளிலே விழுந்து, பெருமாள் திருவுள்ளத்திலே தரிக்கவேணும் என்று பார்த்து, 'உம்மளவிலன்றிக்கே உமக்குத் தோழனை என் விஷயத்திலும் [1]பஹிஸ்-சர-ப்ராண-பூதரான இளையபெருமாள் விஷயத்திலும் இவன் [2]ப்ரச்சந்நனாய் நின்று நலியுங் [3]கிடீர். ஆகையால் இவன் [4]'வத்யன்' என்று விண்ணப்பம் செய்ய; இத்தைக் கேட்ட பின் பெருமாள் * 'கலக்க மடியாக மஹாராஜர் இளையபெருமாளைக் கூட்டிக் கொண்டு பண்ணின சரணாகதியிற் காட்டிலும் தெளிவடியாக

* सुग्रीवस्य तु तद्वाक्यं रामः श्रुत्वा विमृश्य च ।
ततश्शुभतरं वाक्यमुवाच हरिपुङ्गवम् ॥ [5]என்கிறபடியே

1 बहिश्चरप्राणभूत — வெளியில் ஸஞ்சரிக்கும் ப்ராணன் போன்றவரான

2 प्रच्छन्न — மறைந்து. [3]கிடீர், கிடிகோள் - இவை அசைச் சொற்கள்.

4 वध्य — கொல்லப்பட வேண்டியவன்.

5 ஸுக்ரீவஸ்ய து தத்வாக்யம்
ராம: ஶ்ருத்வா விம்ருஶ்ய ச |
ததஶ்-ஶுபதரம் வாக்யம்
உவாச ஹரி-புங்கவம் || (யு. 18. 21)

ஸுக்ரீவனுடைய அந்த வார்த்தையைக்கேட்டு, ராமன் நீர ஆலோசித்து, அதைக்காட்டிலும் அழகான வாக்கியங்களை வாநராஜனைக் குறித்துச் சொன்னார்.

வந்த விபீஷணன் சரணாகதியொன்றுமே ப்ர பலம்' என்று அறுதியிட்டு, மஹாராஜருடைய அச்சம் தீரவேணும் என்று பார்த்தருளி, "தோழனாரே! விபீஷணன் துஷ்டனென்றும் அதுஷ்டனென்றும் பண்ணுகிற [1]விசாரம் எதிக்காகப் பண்ணுகிறீர்? நம்மளவில் ராக்ஷஸன் என்கிற விது என்னென்பது? நம்மளவிலாதல், உம்மளவிலாதல், தம்பியளவிலாதல் இவனொரு [2]பாதகம் செய்கைக்கு ப்ரஸங்க மென்? நம்முடைய பூந்தோட்டத்தில் [3]ஜாதி-மாத்ர-வாநரங்களுக்கும் இவனொரு குற்றம் செய்யவல்லனோ? நாம் நினைத்தபோது பிசாசங்கள், அஸுரர்கள், யக்ஷர்கள், ப்ருதிவியிலுள்ள ராக்ஷஸர்கள் எல்லாரும் திரண்டு வந்தாலும் ஒரு [4]அங்குள்ய க்ரத்துக்குப் பற்றுமோ? அஞ்சலியாகிற அஸ்த்ரம் எடாதாற்கு நம்மை வெல்ல [5]விரகு உண்டோ" என்று தம்முடைய ஸர்வ-சக்தித்வத்தை வெளியிட்டு மஹாராஜருடைய அச்சத்தைக் கழிக்கிறார்.

---

[1] विचारः—ஆலோசனை. [2] बाधक—இடைஞ்சல்.

[3] (ஸுக்ரீவன் முதலானோரைப்போல் சக்திமானாயில்லாமல்) பிறப்பினால் மாத்ரம் குரங்காயிருப்பவை.

[4] अङ्गुल्यग्र—விரல் நுனி, [5] உபாயம்.

1 ஸுதுஷ்டோ வா அப்-யதுஷ்டோ வா
கிமேஷ ரஜநீ-சர: |
ஸூக்ஷ்மம் அப்-யஹிதம் கர்த்தும்
மம அஶக்த: கதஞ்சன ||
பிஶாசாந் தாநவாந் யக்ஷாந்
ப்ருதிவ்யாம் யேச ராக்ஷஸா: |
அங்குள்யக்ரேண தாந் ஹந்யாம்
இச்சந் ஹரி-கணேஶ்வர ||

பண்டு நாம் உமக்குக் காட்டின ப்ரபாவத்தை வாநர-ராஜ்யத்திலே புக்கவாறே மறந்திரோ. 'மஹாத்மநே' என்று விபீஷணன் நினைப்பித்ததும் நெஞ்சிற் பட்டதில்லையோ. எதிரிகள் விரல் கவ்வும்படி காணும் நம்முடைய ஒரு அங்குள்யக்ர- [2]வ்யாபாரம். நகங்களிறே

---

1 सुदुष्टो वाऽप्यदुष्टो वा किमेष रजनीचरः ।
सूक्ष्ममप्यहितं कर्तुं ममाशक्तः कथञ्चन ॥ யு. 18-22
पिशाचान् दानवान् यक्षान् पृथिव्यां ये च राक्षसाः ।
अङ्गुल्यग्रेण तान् हन्यां इच्छन् हरिगणेश्वर ॥ ஷை-23

இவன் மிகவும் துஷ்டனாயிருந்தாலென்ன? இல்லாவிடில் என்ன? இவன் ராக்ஷஸனாயிருந்தால்தானென்ன? எனக்கு எவ்விதத்திலும் மிகவும் அல்பமான கெடுதலையும் செய்ய இவனால் முடியாது.

வாநராதிப! நான் நினைத்தேனேயானால், பிசாசங்கள், தாநவர்கள் யக்ஷர்கள், உலகிலுள்ள ராக்ஷஸர்கள் எல்லாரையும் விரல் நுனியாலேயே கொன்று விடுவேன்.

2 व्यापार—கைய்கை.

பெருமாளுக்கு நரஸிம்ஹ-தசையில் [1]ஸ்ரீபஞ்சாயுதங்கள்.

சரண்யத்வோப யுக்தமாக பகவச்சாஸ்த்ரங்களிலும் [2]அபியுக்தர் வாக்யங்களிலும்

[3] ஸர்வஜ்ஞோபி ஹி விச்வேச:
ஸதா காருணிகோ அபி ஸந் || என்றும்

[4]த்வத்-ஜ்ஞாந-சக்தி-கருணாஸு ஸதீஷு என்றும்

ஸங்க்ருஹீதமான சரண்ய-குண-த்ரயமும் இப்ப்ரகரணத்திலே விவக்ஷிதம். எங்ஙனே யென்னில்: ஆதியிலே "அஜ்ஞாதம் நாஸ்தி தே கிஞ்சித்" என்று ஸர்வஜ்ஞத்வம் சொல்லிற்று; [5]மத்யே "மித்ர-பாவேந ஸம்ப்ராப்தம் நத்யஜேயம் கதஞ்சந" என்று பரம-காருணிகத்வம் சொல்லிற்று; இவ்விடத்தில் "அங்குள்யக்ரேண தாந் ஹந்யாம் இச்சந்" என்று ஸர்வசக்தித்வம் சொல்லிற்று.

---

[1] पञ्चायुध—ஸுதர்சனம் (என்னும் சக்ரம்) பாஞ்சஜந்யம் (சங்கு), கௌமோதகீ (கதை), நந்தகம் (வாள்) சார்ங்கம் (வில்) என்பவை பெருமாளுடைய ஐந்து ஆயுதங்கள்.

[2] अभियुक्त—பெரியோர்களான ஆசார்யர்கள்.

[3] सर्वज्ञोऽपि हि विश्वेशः सदा कारुणिकोऽपि सन् ॥ (ல. த 17. 78) (ஸர்வேச்வரனை பெருமாள்) ஸர்வஜ்ஞர்; எல்லாரையும் நியமிக்கும் சக்தியுள்ளவர்; அளவற்ற கருணை யுள்ளவர்.

[4] 81-ம் பக்கம் பார்க்க.

[5] मध्ये—நடுவில்.

இப்படி [1]மாநுஷ-பாவத்திலே நின்று ராம-சப்தம் ஈரரசு படாதபடி பண்ணின மஹாவீரன் என்னும் செருக்காலே மதியாமே பேசுகிறாப்போலே தம்முடைய ஈச்வரத்வ-ரக்ஷகத்வ ஞாபக-ஸர்வ-சக்தித்வத்தாலே சரண்யத்வோபயுக்த-ஸர்வ-குண-ஸம்பூர்ணதையை யருளிச் செய்து மஹாராஜ-ப்ரப்ருதிகளுடைய அச்சம் தீரும்படி பண்ணியருளினார்.

---

இதி

ஶரண்ய-வைபவ-ப்ரகாஶ:

॥ ஷஷ்டோ அதிகார: ॥

---

[1] மனுஷ்யனாய் அவதரித்த தசையிலேயே மஹாபராக்ரமம் வாய்ந்த பரசுராமனையும் ஜயித்து, அதனால் 'ராமன்' என்றால், பரசுராமனுட்பட மற்றெவரையும் அந்தப் பெயர் குறிக்காமல் செய்த தன்னுடைய வீர்யத்தை நினைப்பூட்டுவதுபோலச் சொல்லி அதனால் தன்னிடம் ஈச்வரத்வம், ரக்ஷகத்வம், ஸர்வஶக்தித்வம் முதலான ரக்ஷகனுக்கு வேண்டிய குணங்களெல்லாம் நிறைந்திருப்பதைக்காட்டி ஸுக்ரீவாதிகளுடைய பயத்தைத் தீர்த்தருளினார் பெருமாள்.

---

# 7. பரம-தர்ம-நிர்ணய:

இப்படித் தம்முடைய ஸ்வபாவத்தையும் ப்ரபாவத்தையும் வெளியிட்டு, மேல் இவன் துஷ்டனேயாகிலும் நாம் அசக்தரேயாகிலும் ப்ராண-பர்யந்தமாக சரணாகத-ரக்ஷணம் பண்ண வேண்டும்; இதுவே பரம-தர்மம் என்னுமிடத்தை [1]கபோதோபாக்யாந-ஸஹ்ருத-கண்டு-மஹர்ஷி-[2]காதா-விதி-முகத்தாலே அருளிச் செய்கிறார்.

[3] ஶ்ரூயதே ஹி கபோதேந
ஶத்ரு: ஶரணம் ஆகத: |
அர்ச்சிதஶ்ச யதா-ந்யாயம்
ஸ்வைஶ்ச மாம்ஸைர்-நிமந்த்ரித: ||

---

1 कपोतोपाख्यान — புறுவின் கதை. (இது பாரதம் சாந்திபர்வம் 143–148 அத்யாயங்களில் விஸ்தாரமாகவும், இதிஹாஸ ஸமுச்சயத்திலும் இருக்கிறது).

2 गाथा — செய்யுள்.

3 श्रूयते हि कपोतेन शत्रुः शरणमागतः ।
अर्चितश्च यथान्यायं स्वैश्च मांसैर्निमन्त्रितः ॥
(யு. 18 24).

ஒரு புறுவிருந்த விடத்திற்கு வந்து அந்த ஜாதிக்கே பரமசத்ருவான ஒரு வேடன் விதிப்படி அப்புறுவினால் வரவேற்கப்பட்டு, அதன் சரீர மாம்ஸத்தாலேயே அதிதியாக விருந்தூட்டப்பட்டான் என்கிற இந்தக் கதை ப்ரஸித்தமாய் கேட்கப்படுகிறதல்லவா?

(ஶ்ரூயதே ஹி) என்கிற வித்தாலே *[1]பாவந-தமத்வத்தாலே ஸர்வரும் ஆதரித்துக் கேட்கும்படி ஸூசிதமாகிறது. (ஶ்ரூயதே) - [2]விப்ரகீர்ணங்களாய் அநந்தங்களான ஶ்ருதிகளை ஸாக்ஷாத்கரிக்கவல்லார்க்கு இதுவு

---

* श्रृणु राजन् कथामेतां सर्वपापप्रणाशिनीं ।
नृपतेर्मुचुकुन्दस्य कथिता भार्गवेण या ॥ என்றும் [1]
य इदं श्रृणुयान्नित्यं पठेदाख्यानमुत्तमम् ।
विमुक्तस्सर्वपापेभ्यः स्वर्गलोकं स गच्छति॥ என்றும்
சொல்லுகிறபடியே.

---

1 पावनतमत्वं— அதிக பரிசுத்தியைத் தருவது.

2 विप्रकीर्ण—சிதறியிருப்பவைகளாய்.

* ஶ்ருணு ராஜந் கதாம் ஏதாம்
ஸர்வ-பாப-ப்ரணாஶிநீம் |
ந்ருபதேர் முசுகுந்தஸ்ய
கதிதா பார்க்கவேண யா || (இதி. ஸமு. 8–5).
ய இதம் ஶ்ருணுயாந்-நித்யம்
படேத் ஆக்யாநம் உத்தமம் |
விமுக்தஸ்-ஸர்வபாபேப்ய:
ஸ்வர்க்க-லோகம் ஸ கச்சதி || (ஷை. 8–128).

பார்க்கவர் என்கிற சுக்ராசார்யரால் முசுகுந்த மஹாராஜனுக்குக் கூறப்பட்டதும் ஸகலவித பாபங்களையும் போக்கடிப்பதுமான இந்தக்கதையை அரசே! நீர்கேளும்.

இந்த உத்தமமான கதையைப் படிப்பவனும், கேட்பவனும் ஸர்வபாபங்களிலிருந்தும் விடுபட்டு ஸ்வர்க்க லோகத்தை அடைவான்.

மொரு மூலையிலே காணலாய்க் காணுமிருப்பது. (ஶ்ரூயதே)—பார்க்கவாதிகள் சொல்ல மூசுகுந்தாதிகள் கேட்கலாமத்தனை போக்கி, எத்தனையேனும் காருணிகராயிருப்பாராலும் இப்படி அநுஷ்டிக்கை அசக்யங்காணும். (ஹி)—அதி-ப்ரஸித்தமாகையாலும் அந்ய-வ்ருத்தாந்தமாகையாலும் இவ்வ்ருத்தாந்தம் எங்களுக்கு முன்னே நீங்களும் கேட்டுப்போருமதன்றோ; நம் பக்கல் பரிவாலே வந்த கலக்கத்தை விட்டு நீரே [1]ப்ரதி-ஸந்தாநம் பண்ணிப்பாரீர். (கபோதேந) ஒரு [2]த்ரைவர்ணிகனுமன்று; வர்ணமாத்ரத்தில் பிறந்தானொருவனுமன்று; [3]ஸாமாந்ய-தர்ம-யோக்ய-மநுஷ்யஜாதீயனுமன்று; ஒரு [4]திர்யக் செய்தபடியிது. இப்படி இத்தர்மம் திர்யக்குக்களுக்குங்கூட ரக்ஷணீயமாயிருக்க, தர்ம-ப்ரவர்த்தகரான நாம் இருந்து, சரணாக

---

1 प्रतिसन्धानं—நினைத்தல்.

2 त्रैवर्णिक—(ப்ராஹ்மணன், க்ஷத்ரியன், வைச்யன் என்கிற முதல்) மூன்று ஜாதியைச் சேர்ந்தவன்.

3 உண்மையுரைத்தல், பிறர் பொருள் நயவாமை முதலியவை எல்லாமானிடர்களுக்கும் பொதுவாகையால் ஸாமான்ய தர்மங்கள் எனப்படும்.

4 तिर्यक्—பக்ஷி.

தனை வத்யனென்பதும் த்யாஜ்யனென்பது மாகாநின்றோம். (கபோதேந) ஒற்றைக்க போதமாகையாலே விலக்குகைக்கீடான பரிவ ரில்லாமையாலும், [1]"அர்த்தம்" என்று ச்ருதி யில் ஓதுகிறபடியே [2]ஸஹாதிகாரத்தாலே தர்மியிலே சொருகி,

[3] ஶ்ருணு சாவஹித: காந்த
யத் தே வக்ஷ்யாம்-யஹம் ஹிதம் |
ப்ராணைரபி த்வயா நித்யம்
ஸம்ரக்ஷ்ய: ஶரணாகத: || என்று

தர்மத்திலே [4]ப்ரேரிப்பிக்கிற [5]ஸஹ-தர்ம-சாரிணீ-ஸந்நிதியாலும், அக்கபோதம் சடக்கென

---

1 अर्धं—பாதி. [2]'பதி என்பவள் புருஷனில் பாதி' என்றிருப்பதால் ஒரு தர்மத்தை அநுஷ்டிப்பதற்கு இரு வருக்கும் சேர்ந்துதான் அதிகாரம். ஆதலால் பதி தர்ம த்தைச் செய்யும்போது அவனுடன் சேர்ந்தே இருப்ப தால் பத்நிக்கு ஸஹாதிகாரம் என்று சொல்லிற்று.

3 शृणु चावहितः कान्त यत्ते वक्ष्याम्यहं हितं ।
प्राणैरपि त्वया नित्यं संरक्ष्यः शरणागतः ॥
(இதிஹாஸ ஸமு. 8-40).

நாத! நான் சொல்லும் ஹிதத்தை கவனமாய்க் கேளும்; உம்மை சரணமென்று வந்தடைந்தவனை உயி ரைக் கொடுத்தாவது எப்போதும் நீர் ரக்ஷிக்கவேண்டும்.

4 தூண்டுகிற.

5 கூட தர்மத்தை அனுஷ்டிக்கிறவளான பத்நீ ஸமீ பத்தில் இருந்ததாலும்.

சரணாகத-ரக்ஷண-தர்மம் அநுஷ்டிக்கப்பெற்ற திறே. (ஶத்ரு:)-கபோதத்திற்கு வேடன்தானே பார்யாபஹரணம் பண்ணின சத்ருவாயிருக்கும்; நமக்கு விபீஷணன் அப்படிப்பட்ட சத்ரு விருத்த ஊரினின்றும் வந்தானத்தனையன்றோ? (சரணமாகத:)-கபோதமிருந்த மரத்தடியிலே வேடன் [1]யாத்ருச்சிகமாக வந்தானத்தனை.

[2] ஸோஞ்ஜலிம் ஶிரஸா க்ருத்வா
வாக்யமாஹ வநஸ்பதிம் |
ஶரணம் ஹி கதோஸ்மி அத்ய
தேவதாம் த்விஹ வாஸிநீம் || என்று

[3]வநஸ்பதி-தேவதையைக் குறித்து சரண-சப்தம் ப்ரயோகித்தானாகிலும் இக்கபோதத்தைக் குறித்துசரண-சப்தம்ப்ரயோகித்திலன். விபீஷணன் புத்ரதாராதிகள் எல்லாவற்றையும் விட்டு "ராகவம் சரணம் கத:" என்று நமக்குக் [4]கூட-

---

1 याद्दच्छिक—தற்செயலாய்.

2 सोऽञ्जलिं शिरसा कृत्वा वाक्यमाह वनस्पतिं ।
शरणं हि गतोऽस्म्यद्य देवतां त्विह वासिनीम् ॥
(இதி. ஸமு. 8. 24)

தலையில் கைகூப்பி, 'இங்கு வஸிக்கின்ற தேவதையை (என்னை ரக்ஷிக்கும்பொருட்டு) இப்போதே சரணமடைகிறேன்' என்று அந்தக் காட்டு மரத்தைப் பார்த்துச் சொன்னான்.

3 காட்டு மரம். 4 कूटस्थः—மூல புருஷன்.

வ்ஸதனை ரகு-ராக்ஷஸ-ஸம்வாதத்திலே சரணு கத-ரக்ஷணம் பண்ணினபடியை நினைப்பித்துக் கொண்டு நம்மை [1]யதா-க்ரமம் சரணுகதனு னன். (அர்ச்சித: ச)-வேடனுகையாலே பக்ஷி ஜாதிக்கு [2]ப்ரக்ருத்யா சத்ருவுமாய், விசேஷித் துத் தன் [3]பார்யா-பஹர்த்தாவுமான இவன் டதுபடுகிருன் என்றிருப்புதல், [4]அவஸரத் திலே நலிய விரகுதேடுதல் செய்ய ப்ராப்தமா யிருக்க; அதிதியை தேவனுக விதிக்கிற ச்ருதி யின்படியே தேவர்களை ஆராதிக்கும் [5]திறத் திலே [6]அக்நிமுகமாகவன்றே கபோதம் அர்ச் சித்தபடி. நாமும் சரணுகதனை [7]"வத்யதாம் ஏஷ தீவ்ரேண தண்டேந ஸசிவை: ஸஹ" என்று [8]அநுபந்தி பர்யந்தமாக நன்ருக அர்ச்

---

1 यथाक्रमं—முறைவழுவாமல்.

2 प्रकृत्या—இயற்கையிலேயே

3 भार्यापहर्ता—மனைவியை அபஹரித்தவன்.

4 ஸமயத்திலே.

5 முறையிலே. 6 அக்நிவழியாக.

7 वध्यतामेष तीव्रेण दण्डेन सचिवैस्सह (யு. 17-27) மந்திரிகளுடன் கூட இவன் சித்திரவதை செய் யப்படட்டும்.

8 अनुबन्धिपर्यन्त— (அவனைச்) சேர்ந்தவர்களையும் விடாமல்.

சியா நின்றோம். (யதா-ந்யாயம்) [1]சீதத்தாலும் [2]க்ஷுத்தாலும் [3]ஆர்த்தனான வேடனுக்கு அபேக்ஷிதங்களான [4]அக்ந்-யாநயநாதிகளைப் பண்ணி, நல்விருந்து வந்தால் ஆதரிக்கும்படி தப்பாதே [5]அந்தர்-விஷாத-கந்தம் இல்லாதே அக்கபோதம் ஆதரித்தபடி. (யதா-ந்யாயம்)- இன்சொல்முதலாக ப்ராண-பர்யந்தமாக சரணாகத-விஷயத்தில் சக்தி-வஞ்சநம் பண்ணாதே செய்த பரிவெல்லாம் அளவாயிருக்குமத்தனை போக்கி மிகுதியுண்டோ? (ஸ்வை: ச மாம்ஸைர்-நிமந்த்ரித:)-[6]புறம்பே சில ஆஹாரங்களை யெடுத்துக்கொண்டு வந்திட்டதன்று; தன்னுடையதான [7]த்ரவ்யாந்தரங்களிலே சிலவற்றையிட்டு உபசரித்ததுமன்று; [8]விவேகமில்லாதார் தானாக அபிமாநித்திருக்கக் கடவ

---

1 शीत—குளிர். 2 क्षुत्— பசி.

3 आर्त—கஷ்டப்படுகிறவன்.

4 अग्न्यानयनादि—நெருப்புக் கொண்டுவருவது முதலியவை.

5 अन्तर्विषादगन्धं—மனதில் துக்கம் என்பதின் வாஸனைகூட (இல்லாதே)

6 வெளியிலுள்ள.

7 द्रव्यान्तर— மற்றப் பொருள்கள்.

8 विवेक— பகுத்தறிவு.

தாய், விவேகிகளும் [1]ஆத்யமான தர்ம-ஸாத நம் என்று [2]பேணக்கடவதான சரீரத்தில் மாம் ஸங்களாலேயன்றே அவனை உபசார-பூர்வக மாக நல்விருந்தூட்ட ப்ரவர்த்தித்தது. (மாம் ஸை:)-[3]ஏக-தேசங்களைப்பிரித்து இட்டதன்று; கடுகப்பசி தீர்க்கவேண்டுமென்று வேடனுக்கு தனக்குள்ள அவயவங்களொன்றும் [4]சேஷியா தபடி [5]சரபங்காதி-தாபஸரைப்போலே இதொ ரு மஹாதபஸ்ஸாக நினைத்து நெருப்பிலே காணும் விழுந்தது.

இப்படி இச் ச்லோகத்தில் சொன்ன அர் த்தந்தன்னை தம்முடைய அநுஷ்டானத்திற்கு ஹேதுவாக அநுவதித்துக்கொண்டு, இப்படி யானல் நமக்கு சரணாகத-ரக்ஷணம் [6]கைமுதிக ந்யாய-ஸித்தம் அன்றே என்று அருளிச் செய்கிறார்:—

---

1 आद्य—முக்கியமான.

2 பாதுகாக்க. 3 ஒரு பாகம்.

4 மிகுதியில்லாதபடி.

5 शरभङ्गादितापस— சரபங்கர் முதலான தவம் செய் யும் யோகிகளை(ப்போலே).

6 कैमुतिकन्याय— (சக்தியற்ற ஒருவன் ஒரு காரிய த்தைச் செய்தானேயானல், சக்தியுள்ளவன் அதே காரி யத்தைச் செய்வான் என்பதைக்) கூறவும் வேண்டுமோ என்கிற ந்யாயம்.

1 ஸ ஹிதம் ப்ரதிஜக்ராஹ
பார்யா-ஹர்த்தாரம் ஆகதம் |
கபோதோ வாநர-ஶ்ரேஷ்ட
கிம்-புநர்-மத்-விதோ ஜந: ||

(ஸ ஹி)-அக்கபோதம் நம்மைப்போலே தர்மாநுஷ்டானம் பண்ணக்கடவ ஜாதிகளில் ஒன்றிலே யாதல், சரண்ய-வம்சத்திலே யாதல் பிறந்ததன்று என்னுமிடம் ப்ரஸித்தமாயன்றோவிருப்பது. (தம்)—ஜாதியாலும், விசேஷித்துத் தன் கொடுமையாலும் *பக்ஷி-ஜாதிக்காக விருத்தனாய் கபோதமிருந்த விடத்திலே

* काश्चित् क्षुद्रसमाचारः पक्षिणां कालसंमितः 2 என்று

1 स हितं प्रतिजग्राह भार्याहर्तारमागतम् ।
कपोतो वानरश्रेष्ठ किंपुनर्मद्विधो जनः ॥ (யு. 17. 25)

வானராதிப! தன் மனைவியை யபஹரித்தவனும், (தானிருந்தவிடத்திற்கு) வந்தவனுமான அந்த வேடனை அந்தப் புறா ஏற்றுக் கொண்டதன்றோ? ஒரு பக்ஷி இப்படிச் செய்திருக்க என் போன்றவர்களைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ?

2 கஶ்சித் க்ஷுத்ர-ஸமாசார:
பக்ஷிணாம் கால-ஸம்மித: || (இதி. ஸமு. 8-6).

அல்பமான நடத்தையை யுடையவனும் பக்ஷிகளுக்கே எமன் போன்றவனுமான ஒருவன்.

யாத்ருச்சிகமாக வந்து விழுந்ததுக்கு மேலே கபோதத்தைக்குறித்து ஒரு [1]உபாய-ப்ரயோக-ரஹிதனாய், விபரீதாநுஷ்டானத்திலும் நிலை குலையாதவனாய், [2]அநுதாப-லேசமாதல் [3]அநுகூல-வாத-ப்ரஸங்கமாதலின்றிக்கே கிடீர் அவ்வேடன் இருப்பது. (ஸ ஹி தம் ப்ரதி-ஜக்ராஹ)—தன்னை யழிய மாறியன்றோ அவ் வேடனைக் கைக்கொண்டு ரக்ஷித்தது. முன்பு சத்ருவென்று பொதுவிலே யருளிச்செய்ததை அவன் [4]வ்ருத்தியைக் காட்டி விசேஷிக்கிறார் (பார்யா-ஹர்த்தாரம்). இப்படியே ராவணன் வந்தாலும் நமக்குக் கைக்கொள்ளவேண்டிய ன்றோ இருப்பது என்று திருவுள்ளம். (ஆகதம்)—இவன் தன்னைக் கைக்கொள்ளுகைக் குச் செய்த உபாயாநுஷ்டானம் கபோதமிரு ந்த மரத்தடியிலே வந்தவளவே கிடீர்! அல்லது வநஸ்பதி-தேவதையைக் குறித்து சரணம் என்று சொன்ன சப்தமும் கபோதம் கேட்ட

---

1 உபாயத்தை அநுஷ்டிக்காதவனாய்.

2 अनुतापलेश—கடுகளவேனும் பச்சாத்தாபம்.

3 अनुकूलवादप्रसङ्ग—ப்ரியமான பேச்சுக்கு இடம்.

4 वृत्ति— செய்கை,

இல்லை. (கபோத:)— முன்பே 'கபோதம்' என்று சொல்லியிருக்க இருகாலுமிட்டு 'கபோதம்' என்றது சிபியினுடைய சரணாகத-ரக்ஷண-தர்மம் சொல்லுகிற [1]ச்யேந-கபோத-வ்ருத்தாந்தத்தில்போலே கபோத-வேஷம் கொண்டானொரு தேவனோ ரிஷியோ வென்று சங்கியாமைக்காக. இது பூர்வ-கர்ம-விசேஷத்தாலே கஜேந்த்ராதிகளைப்போல திர்யக்காயிருக்க இப்படி தர்மாநுஷ்டான-யோக்யமாய் பிறந்தது. (வாநர-ச்ரேஷ்ட)-வேறேயும் ஒரு திர்யக்கு சத்ருவான வேடனை ரக்ஷித்தபடி கேளீர். வாநர ஜாதிகளுக்கு முடிசூடின நீர் [2]வ்யாக்ர-வாநர-ஸம்வாதம் கேட்டறியீரோ? ஒரு புலி வந்து தொடர, தானிருந்த மரத்தடியிலே வந்தேறின வேடனை அந்த வ்யாக்ரம் விடச்சொல்ல, இவனை சரணாகதன் என்று வாநரம் ரக்ஷித்தது. அப்போது மரத்தடியை விடாதே கிடக்கிறபுலி இவ்வாநரம் தூங்கினவளவிலே வேடனைப் பார்த்து, 'உன்னை விடுகிறேன் வாநரத்தைத் தள்ளவல்லையோ' வென்ன; பாப-புத்தியான வேடன் தன்னை ரக்ஷித்த வாநரத்தைத் தள்ளினவளவிலே, வாநரத்தைப் பிடித்து, 'உன்னை

---

1 श्येनकपोतवृत्तान्त—பருந்தும் புறவும் என்கிற கதை

2 व्याघ्रवानरसंवाद—புலிக்கும் குரங்குக்கும் நடந்த ஸம்பாஷணை.

விடுகிறேன், தனக்கு உபகாரகனான உன்னைத் தள்ளின வேடனைத் தள்ளித் தரவல்லையோ' வென்று[1] மநுஷ்ய-மாம்ஸ-லுப்தமான புலி சொல்ல; [2]தர்ம-வித்தான வாநரம் [3]ப்ராணாத்யய-தஶையாகையாலே [4]அஹ்ருதயமாக விசைந்து, புலி விட்டவாறே மரத்திலேறி சத்ருவான வேடனைப் பின்பும் போக்கற்றுத் தானிருந்த மரத்திலே இருந்ததேயடியாக ஶரணாகதன் என்று ரக்ஷித்தது. நீர் வாநரங்களுக்கு முடிசூடியிருந்தாலும் உங்களுக்கு ஜாதி-தர்மம் என்று பார்த்தாகிலும் கைக்கொள்ள வேண்டாவோ? (வாநர-ஶ்ரேஷ்ட)—[5]முதலிகள் கலங்கினால் தெளிவிக்க விருக்கிற நீர் கலங்கலாமோ? (வாநர-ஶ்ரேஷ்ட) வாலி-பதத்திலிருந்தவாறே உமக்கு [6]சரணாகத-பீடைருசித்ததோ? (வாநர-ஶ்ரேஷ்ட)—வாநரமாத்ரமல்லீரே ! [7]ஆதித்யனு

---

1 நரமாம்ஸத்தில் (லுப்த)—பேராசையுள்ள.

2 धर्मवित्— தர்மத்தை அறிந்த.

3 प्राणात्ययदशा—உயிர்போகும் தருணமாகையாலே.

4 अहृदय— மன: பூர்வமாயில்லாமல் வெளிக்கு மாத்திரமாக.

5 முதலிகள் என்று இங்கு வாநரர்களைச் சொல்லுகிறது.

6 சரணாகதனை துன்புறுத்துவது இனிப்பாயிருந்ததோ

7 आदित्य— ஸூர்யனுடைய,

டைய புத்ரனுமாய் தர்மாதர்மங்களை அறிந்து மிருக்கிற நீர் அல்லாத வாநரங்களைப்போலே [1] காபேயம் பண்ணப்பெறுவதிரோ? (கிம் புநர்-மத்-விதோ ஜந:)கபோதம் செய்தபடி கண்டால் [2] நம்போலிகளுக்கு கேட்கவேணுமோ? நாம் சரணாகத-ரக்ஷணத்திற்குக் கொடியெடுத்த ரகு-வம்சத்திலே, *"அறுபதினாயிரமாண்டு வெண் கொற்றைக்குடைதன் நிழலொழிய வேறொரு நிழலிலொதுங்காதே லோக-ரக்ஷணார்த்தமாகப் பத்துத் திக்கிலும் தேர்நடத்தி ப்ரவஹித்தனை தசரதன்" மகனாய், வஸிஷ்ட-விச்வாமித்ர-சிஷ்யனாய், மஹா-யோகியாக [3] ப்ரக்யாதனை ஜநகனோடே ஸம்பந்தம் பண்ணின நாம் [4] "ராமோ விக்ரஹவாந் தர்ம:" என்று உடம்பில்

---

* षष्टिर्वर्षसहस्राणि लोकस्य चरता हितम् ।
पाण्डरस्यातपत्रस्य छायायां जरितं मया ॥ [5] என்று

---

1 कापेयं—குரங்கின் செய்கை அல்லது ஸ்வபாவம்.
2 நம்போன்றவர்களுக்கு. 3 प्रख्यात—புகழ்பெற்ற.
4 रामो विग्रहवान् धर्मः । (அ. 37–13).
ராமன் உருவெடுத்துவந்த தர்மம்.
5 ஷஷ்டிர்-வர்ஷ-ஸஹஸ்ராணி
லோகஸ்ய சரதா ஹிதம் |
பாண்டரஸ்யாத பத்ரஸ்ய
சாயாயாம் ஜரிதம் மயா || (அ. 2–7)
அறுபதினாயிரமாண்டு வெண்குடையின் கீழிருந்து உலகத்திற்கு நன்மைசெய்தே நான் கிழவனானேன்.

[1]ஶிஷ்டதயா ப்ரஸித்தியை யேறிட்டுக் கொண்டு, *இத்தனைகாலமும் நம்முடைய கைபார்த்து நாட்டார் அநுஷ்டிக்கும்படி நடந்து போந்து இன்று சரணாகத-[2]காதம் பண்ணினால் நாடு என்படக்கடவது? (மத்-வித:)-நம்முடைய வ்ரதம் பின்பு சொல்லக்கடவோம்; [3]'ஸாமாந்யோ அயம் தர்ம-ஸேதுர்-நராணாம்' என்கிறபடியே நம்போலிகளெல்லார்க்கும் இதுவே பொதுவாய்க்காணுமிருப்பது. (மத்-வித:)-நம்போலிகள் சரணாகதனை விடுவார்களோ? ஹிம்ஸாருசிகளாகையாலே அவத்யரை வதிக்கவல்ல ராவணாதிகளுக்கன்றோ இப்படிக்கொத்த கார்யங்கள் ருசிப்பது. (ஜந:)—சரணா

---

* मर्यादानां च लोकस्य कर्ता कारयिता च सः [4]
என்கிறபடியே

---

1 शिष्टतया—நல்லொழுக்கமுடைமை (என்கிற.)
2 घातः—கொலை; இங்கு கைவிடுதல்.
3 सामान्योयं धर्मसेतुर्नराणाम् ।
இது எல்லா மானிடர்களுக்கும் பொதுவான தர்மமாகிற அணை.
4 மர்யாதாநாம் ச லோகஸ்ய
கர்த்தா காரயிதா ச ஸ: ॥ (ஸு. 35-11).
உலகங்களுக்கு தர்மத்தை விதிப்பவனும், விதித்தபடி அநுஷ்டிக்கும்படி செய்பவனும் அவனே.

கதனை பரித்யஜித்தவன் என்ன பிறப்பு பிறந்தானாகக் கடவன்? நம்போலிகளுக்கு ஜந்ம-ப்ரயோஜநம் சரணாகத ரக்ஷணமன்றோ?

[1] ஶிஷ்டாநுஷ்டானம் ப்ரமாணமேயாகிலும், ஒருகபோதம் அநுஷ்டித்தது என்றொரு ப்ரமாணம் உண்டோ? இதுக்கு [2]விதாயகமாயிருப்பதொரு வாக்யம் வேண்டாவோ வென்கிற ஶங்கையாலே கண்டு என்பானொரு மஹரிஷி கண்டதொரு காதையைக் கேளீர் என்கிறார்:—

[3] ரிஷே: கண்வஸ்ய புத்ரேண
கண்டுநா பரமர்ஷிணா |
ஶ்ருணு காதாம் புரா-கீதாம்
தர்மிஷ்டாம் ஸத்ய-வாதிநா ||

கண்டுவென்கிற மஹர்ஷியினுடைய [4]ஜந்ம-ப்ரகர்ஷத்தை முற்படக் கேளீர். (ரிஷே:

---

1 பெரியோர்களின் செய்கை.

2 विधायक— (ஒரு கார்யத்தை செய் என்று) கட்டளையிடும்படியான.

3 ऋषेः कण्वस्य पुत्रेण कण्डुना परमर्षिणा ।
शृणु गाथां पुरागीतां धर्मिष्ठां सत्यवादिना ॥(யு. 18-26).
கண்வரிஷியின் புத்ரனும் ஸத்யவாதியுமான கண்டுவென்கிற மஹர்ஷியினால் தர்மங்களை அறிவிப்பதும் (வேதம் முதலியவைகளை அநுஸரித்தே) முன் ஓதப்பட்டதுமான இந்தச் செய்யுளைக் கேளும்.

4 जन्मप्रकर्ष— பிறவியின் ஏற்றம்.

கண்வஸ்ய புத்ரேண)—தான்தோன்றியன்றிக்கே *அவனுடைய பிதாவும் [1] சதுர்-வேதாத்யாயியாய் [2] அதீந்த்ரிய-த்ரஷ்டாவாய்க் காணுமிருப்பது. ஆனால் பறப்பதின் குட்டி தவழாதிறே! (கண்வஸ்ய புத்ரேண)—[3] மஹா-தபாவான கண்வனென்கிற மஹர்ஷிக்கு ஸம்ஸார-[4] நிஸ்தாரகனாய்க் காணும் இவன் பிறந்தது. (கண்வஸ்ய புத்ரேண, கண்டுநா)—பிதாவின் பேராலும் தன் பேராலும் ப்ரஸித்தனாய்க் காணுமிருப்பது. (கண்டுநா)—அவன் தன் பெருமையைப் பார்த்தால் † மஹர்ஷிகள் கொண்டாடும்படியான பேருடையானொருவன் காணும். (ரிஷே: புத்ரேண, பரமர்ஷிணா)—

---

* यस्य स्यात् श्रोत्रिय: पिता । என்கிறபடியே [5]

† स चापि भगवान् कण्डु: என்று [6]

---

1 चतुर्वेदाध्यायी—நான்கு வேதங்களையும் ஓதினவர்.

2 अतीन्द्रियद्रष्टा— புலன்களுக்கு எட்டாதவற்றையும் நேரில் பார்ப்பவர்.

3 महातपा: —பெரிய தபஸ்வியான.

4 निस्तारक—ஸம்ஸாரத்திலிருந்து கரையேற்றுபவன்.

5 யஸ்ய ஸ்யாத் ஶ்ரோத்ரிய: பிதா
(மனுஸ்ம்ருதி 3–137).
எவனுடைய பிதா வேதங்களை ஓதினவராயிருப்பாரோ.

6 ஸ சாபி பகவான் கண்டு:— (வி. பு. 1–5–52).
(ஞான-ஶக்திகள் நிறைந்த)கண்டு பகவானும்.

விளக்கில் கொளுத்தின பந்தமென்னும்படி காணும் [1]ப்ரகாஶ-பஹுளனை பிதர்விலுங் காட்டில் இவனுடைய [2]ஞான-விகாஸம் இருக்கும்படி. (ஶ்ருணு)—இத்தனை நாளும் இக்காதை உம்முடைய செவியில் படாமையிறே நீரிப்படிக் கலங்குகிறது. இத்தை [3]அவஹிதராய்க் கேளீர். (காதாம்)—இது பெரிய பொருள்களை யெல்லாம் பொதிந்து கொண்டு எளிதாகக் கேட்கலாம்படி சுருங்கின பாசுரமாய்க் காணுமிருப்பது. (புராகீதாம்)-இன்று முதலாகக் கட்டினதொன்றன்று காணும் இது; வேதம்போல பழையதாயிருப்பதொன்று. (கீதாம்)-கண்டுவான மஹர்ஷியும் இத்தை ஸ்ருஷ்டித்தானென்றிராதே கிடீர். ரிக்கை ஸாமமாகப் பாடுமாப்போலே பண்டே யுள்ளதொன்றை அவன் பாடினனத்தனை. (கீதாம்)—அவன் செய்தானாகிலும் அந்த ஸாம-த்வநிபோலே ஸமஸ்தபாபங்களையும் போக்கவற்றாய்க் காணுமிருப்பது. (தர்மிஷ்டாம்)—போலியான தர்மங்களைப் போலன்றிக்கே [4]ப்ரத்யக்ஷ-ச்ருதி-ஸித்தமான பரம-தர்ம

---

[1] प्रकाशबहुल— அதிக ஞானத்தையுடைய.

[2] ज्ञानविकास— ஞானத்தின் பரவுதல்.

[3] கவனமாய்

[4] (எல்லாராலும் இப்போதும்) ஓதப்படுகிற ஶ்ருதியில்கிடைப்பதான.

த்தை விஷயமாக வுடைத்தாய்க்காணும் இக் காதையிருப்பது. (ஸத்ய-வாதிநா)—[2]ஸத்ய-வாத-சீலனென கண்டு வென்கிற மஹர்ஷி வாய்வெருவிச் சொன்னாலும் [3]பழுதாயிருப்பதொரு 'ச'வ்வும் 'து' வ்வும் கூட்டுகையுமன்றிக்கே காணுமிருப்பது. இதில் 'பரமர்ஷிணு' என்று [4]யதார்த்த-தர்ஸித்வம் சொல்லிற்று; 'ஸத்ய-வாதிநா' என்று [5]யதா-த்ருஷ்டார்த்த-வாதித்வம் சொல்லிற்று; 'தர்மிஷ்டாம்' என்று உபதேசத்தினுடைய பரம-ப்ரயோஜநத்வம் சொல்லிற்று. இத்தால் [6]ப்ரம-விப்ரலம்பங்கள் அற்று, ஸர்வ-லோக-ஹிதம் சொல்வான் ஒருவன் என்று [7]ஆப்த்யதிஶயம் சொல்லித்தாயிற்று.

---

2 सत्यवादशील—உண்மை உரைப்பதையே ஸ்வபாவமாக உடையவர்.

3 பழுது-அர்த்தமில்லாத ('च', 'तु' என்கிற ஶ்லோகத்தை பூர்ணம் செய்வதற்காக உபயோகப்படுத்தப்படும் சொற்கள்).

4 यथार्थदर्शित्वं—உள்ளபடி அறிகை.

5 यथादृष्टार्थवादित्वं— உள்ளபடி அறிந்ததை அறிந்தபடி சொல்லுகை.

6 भ्रमविप्रलंभ— தான் ப்ரமிப்பது, பிறரை ஏமாற்றுவது; அதாவது உள்ளபடி தான் அறியமுடியாமையும், அறிந்தபடி சொல்லாமல் மாற்றியுரைப்பதும்.

7 आप्त्यतिशय— மிகவும் நம்பத்தக்கமை.

மேல் 'கண்டு-காதை' என்றெடுக்கிற நாலரை ச்லோகத்தில், ப்ரதம-ச்லோகத்தாலே 'பூர்ண-சரணாகதி யில்லையேயாகிலும் போக்கற்ற தசையில் [1] ஆத்ம-நிக்ஷேபாபிப்ராய-வ்யஞ்ஜகங்களாய்க் கொண்டு சரணாகதியினுடைய [2] ஶகல-துல்யங்களான [3] அஞ்ஜலி-பந்தாதி-மாத்ரங்களை [4] நேர்ந்தவனையும் அழியக் கொடுக்கலாகாது' என்கிறார்.

[5] பத்தாஞ்ஜலி-புடம் தீநம்
யாசந்தம் ஶரணாகதம் |
ந ஹந்யாத் ஆந்ருஶம்ஸ்யார்த்தம்
அபி ஶத்ரும் பரந்தப ||

---

[1] आत्मनिक्षेपाभिप्रायव्यञ्जक— ஆத்மாவை ஸமர்ப்பிக்கும் அபிப்ராயத்தைத் தெரிவிப்பவை(களாய்).

[2] शकलतुल्य—ஒரு பகுதிக்கு ஸமாநமான.

[3] अञ्जलिबन्ध—கைகுவித்தல். [4] செய்தவனையும்.

[5] बद्धाञ्जलिपुटं दीनं याचन्तं शरणागतम् ।
न हन्यादानृशंस्यार्थमपि शत्रुं परन्तप ॥ (யு. 18-27)

சத்ருக்களைத் தபிக்கச் செய்பவனே! கைகுவித்தாலும், எளிமைதோற்றவிருந்தாலும், (ரக்ஷிக்கவேண்டும் என்று) இரந்தாலும், (இவை மூன்றுமின்றி) ரக்ஷகனிருந்தவிடத்திற்கு வந்தாலும், அப்பேர்ப்பட்ட ஒருவனை தனக்கு, 'க்ரூரன்' என்கிற நிந்தை வாராமைக்காக அவன் சத்ருவாயிருந்தாலும் ரக்ஷிக்கவேண்டும்.

(பத்தாஞ்ஜலி-புடம்) — அநுகூல-புத்தியும் ப்ரதிகூல-வ்யாவ்ருத்தியும் இல்லையேயாகிலும் கையில் அஞ்ஜலி-மாத்திரமே யமையும்.

[1] அஞ்ஜலி: பரமா முத்ரா
க்ஷிப்ரம் தேவ-ப்ரஸாதிநீ என்கிறபடியே

அத்யந்த-ஸ்வதந்த்ரனையும் கடுக விரங்கப் பண்ணும் முத்ரையிதன்றோ? (நீநம்)—அஞ்ஜலியும் வாங்-மாத்ரமும் நேராதே [2]கார்ப்பண்யம் தோற்ற நிற்கும் நிலையே அமையும். (யாசந்தம்)-கைகூப்பிற்றிலனேயாகிலும், கார்ப்பண்யமும் தோற்றித்தில்லையேயாகிலும், [3]அஹ்ருதயமாக இரக்கவமையும். (சரணாகதம்)—அஞ்ஜலி-பந்தாதிகள் மூன்றும் இல்லையேயாகிலும் ரக்ஷகரைக் கிடைக்குமோவென்று இருந்தவிடத்திலே வந்து புகுரவமையும். முதல் ஸ்வ-ரக்ஷா-பர-நிக்ஷேபருடையான சரணாகதியின் ஸகல-ஸ்தாநீயங்

---

1 अञ्जलि: परमा मुद्रा क्षिप्रं देवप्रसादिनी ॥

(பாரத்வாஜஸம்.)

அஞ்ஜலியானது ஸர்வேச்வரனை சீக்ரத்தில் த்ருப்தி பண்ணும்படியான உயர்ந்த முத்ரை.

2 कार्पण्यं—எளிமை.

3 अहृदय— (முழுமனதுடனில்லாமல்) வெளிக்கு மட்டும் செய்வது.

களைச் சொல்லிற்ருய், இங்கே 'சரணுகதம்' என்று பூர்ண-சரணுகதியைச் சொல்லுகிறதாகவுமாம். (ந ஹந்யாத்)-தான் அழியச் செய்தல், ரக்ஷிக்க சக்தனுன தன் உபேக்ஷாதிகளாலே அழியக் கொடுப்புதல் செய்யப் பெருன். இந்த சாஸ்திரம் [1]ஐஹிகாப்யுதயார்த்தமோ, பர-லோகார்த்தமோ, [2]ப்ரத்யவாய-பரிஹாரார்த்தமோ வென்ன, அவை நிற்கமுற்பட ப்ரயோஜநாந்தரம் சொல்லுகிறது.(ஆந்ருஸம்ஸ்யார்த்தம்)-[3]ஆந்ருஸம்ஸ்யமாகிற மஹாகுணத்தை ரக்ஷிக்கைக்காகவுமாம்; [4]'ந்ருஸம்ஸன்' என்று நாட்டார் சீ சீ என்னுமைக்காகவுமாம்.(அபி ஸத்ரும்)-நேரே சத்ருதான் வந்து சரணுகதனுனுலும் அழிய விடவொண்ணுதபடியாலே, இதுக்கு முன்பு ஒரு குற்றம் காணுதிருக்க சத்ரு விருந்த ஊரில் நின்றும் வந்தான் என்கிற விவ்வளவைக் கொண்டு சரணுகதனனவனை யழியக்கொடுக்கலாமோ வென்று தாத்பர்யம். (பரந்தப)—சரணுகதனேடேயோ [5]சேவகம் காட்டுவது; நேரே [6]பொருமவனேடேயன்ருே.

---

[1] ऐहिकाभ्युदयार्थ— இவ்வுலகில் வரும் க்ஷேமத்திற்காக [2] கெடுதல் நிவ்ருத்திப்பதற்காக.

[3] आनृशंस्य— கருணை. [4] नृशंस— இரக்கமற்றவன், [5] வீர்யம். [6] யுத்தம் செய்பவனேடே.

"ந ஹந்யாத்" என்று தான் கொல்லா தொழியுமளவன்றோ வென்ன ; அங்ஙனன்று, சரணாகதனை வேறொருத்தர் நலியும் போது 'ஆர்த்தன்,' 'த்ருப்தன்' என்கிற சரணாகதா வஸ்தா-விசேஷங்களைப் பாராதே தன் ப்ராணன்களை யழிய மாறியும் அவனை ரக்ஷிக்க வேண்டும் என்கிறார் :—

[2] ஆர்த்தோ வா யதி வா த்ருப்த :
பரேஷாம் ஶரணாகத : |
அரி : ப்ராணாந் பரித்யஜ்ய
ரக்ஷிதவ்ய : க்ருதாத்மநா ||

(ஆர்த்தோ வா யதி வா த்ருப்த:)—இப் போதே அபிமத-ஸித்தியுண்டாக வேண்டு மென்று [3]விளம்ப-க்ஷமனன்றிக்கே யிருக்க வுமாம்; விளம்பித்துப் பெறலாவதொரு பலத் தைக்கோலி என்றேனுமாக அபிமதம் ஸித்த

---

1 आर्त—நொந்தவன். दृप्त—விளம்பத்தைப் பொறுக்குமவன்.

2 आर्तो वा यदि वा दृप्तः परेषां शरणागतः ।
अरिः प्राणान् परित्यज्य रक्षितव्यः कृतात्मना ॥
(யு. 18-27)

மிகவும் நொந்தவனாயிருந்தாலும், விளம்பித்து பலத்தைக் கோலினவனாயிருந்தாலும் பிறரிடத்திற்கு வந்தவன் சத்ருவாயிருந்தாலும் சாஸ்த்ரங்களைக் கற்றறிந்தவனால் உயிரைக்கொடுத்தாவது ரக்ஷிக்கப்படவேண்டும்.

3 விளம்பத்தைப் பொறுப்பவன்.

மன்றோவென்று தேறியிருக்கவுமாம். இவனுக்கும் அபிமதத்தைப் பற்ற [1] அகிஞ்சநதையாலே ஆர்த்தியுண்டு. அங்ஙனன்றிக்கே [2] ப்ரச்ரய-பயாதி-யுக்தனுயிருக்கவுமாம்; இவையன்றிக்கே இருக்கவுமாம் என்று ஆர்த்த-த்ருப்த-விபாகம் சொல்லுவர்கள். (பரேஷாம் சரணாகத:)— இதுக்கு முன் முகமறியாதாரிருந்தவிடத்தே வரவமையும். (அரி:)-அவன் சத்ருத்வம் அடியறுதே உள்ளே கிடக்கச் செய்தே, மித்ர-பாவனையைப் பண்ணி வந்தாலுமாம். (ப்ராணாந் பரித்யஜ்ய ரக்ஷிதவ்ய:)- [3] அஸ்திரங்களான ப்ராணன்களை விட்டு ஸ்திரமான சரணாகத ரக்ஷண-தர்மத்தைப் பற்றவன்றோ ப்ராப்தம். இவ்வர்த்தத்தை

[4] ஆத்ம-ப்ராணை: பர-ப்ராணாந்
யோ நர: பரிரக்ஷதி |
ஸ யாதி பரமம் ஸ்தாநம்
யஸ்மாந் நாவர்த்ததே புந: || என்றும்

---

1 अकिञ्चनता— புகலற்றமை.

2 प्रश्रयभयादियुक्त—அடக்கம், பயம் முதலியவற்றோடு கூடியவன்.

3 अस्थिर—நிலையற்ற.

4 आत्मप्राणैः परप्राणान् यो नरः परिरक्षति ।
स याति परमं स्थानं यस्मान्नावर्तते पुनः ॥

இதி. ஸமு. 4-74

தன் உயிரைக்கொடுத்து பிறருயிரை எவன் ரக்ஷிக்கிருனே, அவன் திரும்பிவருதல் என்பதில்லாத நித்யமான உயர்ந்த லோகத்தை யடைகிருன்.

1 "ப்ராணைரபி த்வயா ராஜந்
ரக்ஷித: க்ருபணோ ஜந:" | என்றும்

ஸ்யேந-கபோதோபாக்யாநத்திலே ஸிபியைக் குறித்து இந்த்ரன் சொன்னான். (க்ருதாத்மநா)—இப்படிச் செய்யாதபோது இவன் கற்ற கல்வியெல்லாம் என் செய்ததாகக் கடவது. [2]" விதுஷோதிக்ரமே தண்ட-பூயஸ்த்வம்" என்னும்படியாமித்தனையிறே. தன்னை ரக்ஷித்த வாநரத்தைத் தள்ளின வேடனைப்போலே ரக்ஷிதனான சரணாகதன் பின்பு [3]க்ருத-க்நனாய் ப்ரதிகூலனானபோது தான் அவனுடைய ஸிக்ஷாதிகளில் [4]அதிக்ருதனாகில் அம்முகத்தாலே ரக்ஷிக்கவும், அவற்றில் அதிக்ருதனல்லாதபோது பின்பு அவன் [5]அநுதப்தனாய் ஸரணாகதனானாகில் க்ஷமிக்கவும், அங்ஙனல்லாதபோது உபேக்ஷிக்கலான ப்ராதிகூல்

---

1 प्राणैरपि त्वया राजन् रक्षितः कृपणो जनः ।
(இதி. ஸமு. 4-75)
மிகவும் இரங்கத்தகுந்த இவன் உயிரையும் கொடுத்து உன்னால் ரக்ஷிக்கப்பட்டான்.

2 विदुषोऽतिक्रमे दण्डभूयस्त्वं
அறிந்தவன் குற்றம் செய்தால் அதிக தண்டனை.

3 कृतघ्न—நன்றி யற்றவன்.

4 अधिकृत—(உத்தியோக முறையில்) நியமிக்கப்பட்டிருந்தானாகில்.

5 अनुतप्त—பச்சாத்தாபத்தை யடைந்தவனாய்.

யத்தை உபேக்ஷிக்கவும் தன்னுடைய [1]வதாதி பர்யந்தமாக ப்ரவருத்திக்குமாகில் ஶாஸ்த்ர-விரோதமில்லாத [2]மர்யாதையாலே [3]யதா-ஶக்தி விலக்கிக்கொள்ளவும் ப்ராப்தம்.

மேலிரண்டு ச்லோகத்தாலே ஶரணாகத-பரித்யாகத்தில் வரும் [4]த்ருஷ்டாத்ருஷ்ட-ப்ரத்யவாயங்களை அருளிச் செய்கிறார்.

[5] ஸ சேத் பயாத் வா மோஹாத் வா
காமாத் வாபி ந ரக்ஷித: |
ஸ்வயா ஶக்த்யா யதா-ஸத்யம்
தத்-பாபம் லோக-கர்ஹிதம் ||

(பயாத் வா)-சரணாகதனைக் கைக்கொண்டால் ப்ரபலமான விரோதிகள் நம்மையும்

---

1 वधादिपर्यन्त—கொலைசெய்தல் முதலிய அவ்வளவு வரையில்.

2 मर्यादा— முறை. 3 यथाशक्ति—இயன்றமட்டில்.

4 दृष्टादृष्टप्रत्यवाय— இவ்வுலகிலும் பரலோகத்திலும் வரும் இடையூறுகள்.

5 स चेद्भयाद्वा मोहाद्वा कामाद्वापि न रक्षितः ।
स्वया शक्त्या यथासत्यं तत्पापं लोकगर्हितम् ॥

(யு. 18. 30)

பயத்தினாலாவது, அறியாமையாலாவது, அல்லது வேறு ஆசையாலாவது தன் சக்தியுள்ளளவும் வஞ்சனையில்லாமல் சரணாகதனை ரக்ஷிக்காவிட்டால் அது பாபம் உலகமெல்லாம் அவனை நிந்திக்கும்.

நலியில் செய்வதென் என்னும் அச்சத்தாலே யாதல் என்றபடி. *ஸைந்த்ர-தக்ஷக-ந்யாயம் இங்கே கண்டுகொள்வது. (மோஹாத் வா) "ஈத்ருஶம்வ்யஸநம்ப்ராப்தம்ப்ராதரம் ய: பரித்யஜேத்" என்றாற்போலே சில [1]யுக்த்யாபாஸங்களாலே வந்த கலக்கத்தாலே யாதல் என்றபடி (காமாத் வா)-[2]ஶாஸ்த்ராதி-லங்கந-ஹேதுவான ஸ்வச்சந்த-ஸ்வபாவத்தாலேயாதல் என்றபடி. அங்ஙனன்றிக்கே [3]ஹிம்ஸா-ருசிகளான ராக்ஷஸரைப் போல இவன் படுவது கண்டால் ஆகாதோ வென்கிற [4]விபரீத-ருசியாலே யாதல் என்னுமாம்; அப்படியே சரணாகதனுடைய சத்ருவின் பக்க

---

* सेन्द्रतक्षकन्याय——ஜநமேஜய மஹாராஜன் ஸர்ப்ப யாகம் செய்தபோது, தக்ஷகன் என்னும் ஸர்ப்பராஜன் இந்த்ரனிடம் சென்று சரணம் புகுந்தது. அதைக்கண்டு ரித்விக்குக்கள் 'இந்த்ரனோடுகூட தக்ஷகனும் வந்து அக்னியில் விழக்கடவன்' என்று மந்த்ரத்தை உச்சரிக்கவே இந்த்ரனும் சேர்ந்து வரவேண்டியதாயிற்று. இதனால் துர்பலனாயிருந்தவனை சரணமடைந்தால், அவன் தன்னையும் சரணமடைந்தவனையும் இருவரையுமே ரக்ஷிக்கமுடியாமல் போகும் என்கிற ந்யாயம் ஸூசிதம்.

ईदृशं व्यसनं प्राप्तं भ्रातरं यः परित्यजेत् ।

(யு. 18. 5)

1 युक्त्याभास— (உண்மையாய் ஸரியில்லாமல்) யுக்தி போல் தோன்றுமவை.

2 சாஸ்த்ரத்தை மீறிநடப்பதற்குக் காரணமான தன் மனம் போனபடி செய்யும் தன்மையாலே யாதல்.

3 हिंसारुचि—(பிறரை)ஹிம்ஸிப்பதில் விருப்பமுள்ள

4 विपरीतरुचि— கெடுதலில் ருசி.

லிலே கைக்கூலியை யாசைப்பட்டு என்னவு மாம். (அபி)— பூர்வாபகாரங்களை நினைத்து வரும் [1]ஔதாஸீந்யம் முதலான வேறு ஏதே னுமொரு ஹேதுவாலேயாகவுமாம். (ந ரக்ஷி த:)—கிணற்றின் கரையில் பிள்ளையை வாங்கா தாற்போலே ரக்ஷியாதமட்டும் கிடீர் நாம் சொல்லப்புகுகிற பாபம்; இப்படியானால் தானே நலியுமளவிலே என்ன விளையக்கட வது. (ஸ்வயா ஶக்த்யா)— தன் ஶக்தி-வஞ்ச நம் பண்ணாதே ரக்ஷிக்கவேண்டும். அங்ஙன ன்றிக்கே கைக்கொள்ளவுமாம் கைவிடவுமாம் தான் வல்லதொரு விரகால் என்று தாத்பர்யம். ரகு-ப்ரப்ருதிகள் ப்ராஹ்மணாதிகளைத் தாங்கள் கைக்கொண்டு ரக்ஷித்தார்கள். தேவர்களும் ரிஷிகளும் காகத்தைப் போக்கற்றதென்று பெருமாள் கைக்கொள்ளுகைக்காகத் தாங்கள் கைவிட்டு ரக்ஷித்தார்கள். (யதா-ஸத்யம்)-லோ கத்துக்குக் [2]கண்காணிகளாகப் படைத்த ஆதி த்யாதி [3]பதினாலு ஸாக்ஷிகளும் இவர்களுக்கு

---

[1] औदासीन्यं— நடு நிலைமை. [2] ஸாக்ஷி.

[3] आदित्यचन्द्रावनिलोऽनलश्च
द्यौर्भूमिरापो हृदयं यमश्च ।
अहश्च रात्रिश्च उभे च सन्ध्ये
धर्मश्च जानाति नरस्य वृत्तं ॥

ஸூர்யன், சந்த்ரன், வாயு, அக்னி, ஆகாயம், பூமி

மேல் கண் காணியாய் ஸர்வ-ஸாக்ஷியான ஸர்வேச்வரனும் கண்டுகொண்டிருக்க, தான் சக்தனயிருக்கச்செய்தே சில சலங்களாலே தனக்கு சக்தியில்லாமையைக் காட்டி "ஶோசந்திவ ருதந்திவ" என்கிற கணக்கிலே கண்ணழிக்கப்பெருன். (தத்-பாபம்)- அந்த பாபத்தின் கொடுமையைக்கேளீர்; இது நஹுஷ-ப்ருஹஸ்பதி-ஸம்வாதாதிகளிலே அதி-ப்ரஸித்தமாய்க்காணுமிருப்பது. இதின்கொடுமையை

1 ஶரணாகதாம் ந த்யஜேயம்
இந்த்ராணீம் ச யஶஸ்விநீம் |
தர்மஜ்ஞாம் தர்மஶீலாம் ச
ந த்யஜேயம் அநிந்திதாம் ||
நாகார்யம் கர்த்துமிச்சாமி
ப்ராஹ்மணஸ் ஸந் விஶேஷத: |
ஶ்ருத-தர்மஸ் ஸத்ய-ஶீலோ
ஜாநந் தர்மாநுஶாஸநம் ||

---

ஜலம், மனது, யமன், பகல், இரவு, காலை, மாலை, தர்மம், இந்த பதினைன்கும் ஒவ்வொரு மனிதனுடைய நடத்தையையும் அறிகின்றன. (அதற்கு ஸாக்ஷிகள்).

1 शरणागतां न त्यजेयमिन्द्राणीं च यशस्विनीं ।
धर्मज्ञां धर्मशीलां च न त्यजेयमनिन्दिताम् ॥
नाकार्यं कर्तुमिच्छामि ब्राह्मणस्सन् विशेषतः ।
श्रुतधर्मस्सत्यशीलो जानन् धर्मानुशासनम् ॥

புகழ்பெற்றவளும், தர்மத்தை அறிந்து அதை அநுஷ்டிப்பதையே ஸ்வபாவமாக உடையவளும், ஒருவித தோஷமில்லாதவளும், என்னை சரணமடைந்தவளுமான இந்த்ராணியை ஒருக்காலும் கைவிடேன்.

மேலும் ப்ராஹ்மணனயிருந்துகொண்டு; தர்மங்களை

1 நாஹமேதத் கரிஷ்யாமி
கச்சத்வம் வை ஸுரோத்தமா: |
அஸ்மிம்ஸ்சார்த்தே புராகீதம்
ப்ராஹ்மணா ஸ்ரூயதாமிதம் ||
ந சாஸ்ய பீஜம் ரோஹதி ரோஹகாலே |
ந சாஸ்ய வர்ஷம் வர்ஷதி வர்ஷ-காலே |
பீதம் ப்ரபந்நம் ப்ரததாதி ஶத்ரவே
ந ஸோந்தரம் லபதே த்ராணமிச்சந் ||

---

யெல்லாம் கேட்டும், ஸத்யசீலனும், தர்மங்களின் விதி யையெல்லாம் அறிந்துமிருப்பவனுமான நான் செய்யத் தகாத கார்யத்தைச் செய்யேன்.

1 नाहमेतत्करिष्यामि गच्छध्वं वै सुरोत्तमाः ||
अस्मिंश्चार्थे पुरागीतं ब्रह्मणा श्रूयतामिदम् ||
न चास्य बीजं रोहति रोहकाले
न चास्य वर्षं वर्षति वर्षकाले |
भीतं प्रपन्नं प्रददाति शत्रवे
न सोऽन्तरं लभते त्राणमिच्छन् ||

ஆகையால் நான் இதைச் செய்யமாட்டேன். தேவதைகளே! நீங்கள் செல்லுங்கள்.

இது விஷயத்தில் முன் ப்ராஹ்மாவினால் கூறப்பட்டதைக் கேளுங்கள். பயத்தினால் சரணமடைந்தவனை எவன் சத்ருவிடம் காட்டிக் கொடுக்கிறானோ அவன் விதைத்த விதை முளைக்கவேண்டிய காலத்தில் முளைக்கிறதில்லை; மழை பெய்யவேண்டிய காலத்தில் அவனுக்கு மழை பெய்வதில்லை; தன்னை ரக்ஷிக்க விரும்பினால் ஒரு இடம் கிடைப்பதில்லை.

பயந்து சரணமடைந்தவனை எவன் சத்ருக்களிடம் காட்டிக் கொடுக்கிறானோ அவன் துர்பலமான முனைதை

[1] மோகமந்நம் விந்ததி சாப்ரசேதா:
ஸ்வர்காத் லோகாத் ப்ரப்⁴யதி ப்ரஷ்ட-சேதா: |
பீதம் ப்ரபந்நம் ப்ரததாதி ஶத்ரவே
ஸேந்த்ரா தேவா: ப்ரஹரந்த்யஸ்ய வஜ்ரம் ||

என்று

இந்த்ர-பதம் பெற்ற மதிகெட்ட நஹுஷனு லே ப்ரேரிதரான தேவர்களைக் குறித்து தேவ-புரோஹிதன் சொன்னன். அப்படியே

[2] ப்ராயஶ்சித்தேந ஶுத்⁴யந்தி
மஹாபாதகிநோபி யே |
ஶரணாகத-ஹந்த்ரூணாம்
ஶுத்தி: க்வாபி ந ஸித்⁴யதி ||

---

[1] मोघमन्नं विन्दति चाप्रचेताः
स्वर्गाल्लोकात् भ्रश्यति भ्रष्टचेताः ।
भीतं प्रपन्नं प्रददाति शत्रवे
सेन्द्रा देवाः प्रहरन्त्यस्य वज्रम् ॥ (பார. உத். 12-16)

[2] प्रायश्चित्तेन शुद्ध्यन्ति महापातकिनोऽपि ये ।
शरणागतहन्तॄणां शुद्धिः क्वापि न सिद्ध्यति ॥

யுடையவனுய் வீணுகவே அந்நத்தை யடைகிறுன்; மனம் மூறிந்தவனுய் ஸ்வர்க்கலோகத்திலிருந்தும் நழுவி விழுகிறுன். இந்த்ரனேடு கூட தேவர்கள் அவனை வஜ்ராயுதத்தால் அடிக்கிறுர்கள்.

ராக்ஷஸ! மஹாபாதங்களைச் செய்தவர்களும் தகுந்த ப்ராயச் சித்தத்தினுல் சுத்தியடைகிறுர்கள். ஆனல் சரணுகதனைக் கொன்றவர்களுக்கு எங்கும் சுத்தியே கிடையாது. (பாபத்திலிருந்து விடுதலையே கிடையாது).

பூயந்தே ஹயமேதேந
மஹாபாதகிநோபி ஹி |
ஶரணாகத-ஹந்தாரோ
ந த்வேவ ரஜநீசர || என்று

ரகு-ராக்ஷஸ-ஸம்வாதத்திலும் இவ்வர்த்தம் ப்ரஸித்தம். இத்தை

[2] லோபாத் த்வேஷாத் பயாத் வாபி
யஸ்-த்யஜேத் ஶரணாகதம் |
ப்ரஹ்ம-ஹத்யா-ஸமம் தஸ்ய
பாபமாஹுர்-மநீஷிண: ||

---

1 पूयन्ते हयमेधेन महापातकिनोऽपि हि ।
शरणागतहन्तारो न त्वेव रजनीचर ।।

ஏனெனில் மஹாபாதகம்செய்தவர்கள் அச்வமேத யாகம் செய்து சுத்தியடைகிறார்கள். சரணாகதனைக் கொன்றவர்களுக்கோ அப்படி ஒருவித ப்ராயச்சித்த மும் கிடையாது.

2 लोभाद् द्वेषाद्भयाद्वापि यस्त्यजेत् शरणागतम् ।
ब्रह्महत्यासमं तस्य पापमाहुर्मनीषिणः ।।

(இதி. ஸமு. 4–18)

லோபத்தாலாவது, த்வேஷத்தினாலாவது அல் லது பயத்தாலாவது ஒருவன் சரணாகதனைக் கைவிட் டால், அந்தப் பாபம் ஒரு ப்ரஹ்ம-ஹத்தி செய்ததற்கு ஸமானம் என்று அறிவாளர்கள் சொல்லுகிறார்கள்.

1 ஶாஸ்த்ரேஷு நிஷ்க்ருதிர்
த்ருஷ்டா மஹாபாதகிநாமபி |
ஶரணாகத-ஹந்துஸ்து
ந த்ருஷ்டா நிஷ்க்ருதி: க்வசித் ||
ப்ராணிநம் வத்யமாநம் து
யஶ்-ஶக்தஸ்-ஸமுபேக்ஷதே |
ஸ யாதி நரகம் கோரம்
இதி ப்ராஹுர்-மநீஷிண: || என்று

ஶ்யேந-ரூபனான இந்த்ரனைக் குறித்து ஶிபி சக்ரவர்த்தி சொன்னான்.

2 ப்ராணார்த்திநமிமம் பீதம்
த்விஜம் மாம் ஶரணாகதம் |

---

1 शास्त्रेषु निष्कृतिर्दृष्टा महापातकिनामपि ।
शरणागतहन्तुस्तु न दृष्टा निष्कृतिः क्वचित् ॥
(இதி. ஸமு. 4–19)

प्राणिनं वध्यमानं तु यश्शक्तस्समुपेक्षते ।
स याति नरकं घोरं इति प्राहुर्मनीषिणः ॥ (ஷை 4. 52)

ஶாஸ்த்ரங்களில் மஹாபாதகம் செய்தவர்களுக்கும் ப்ராயச்சித்தம் சொல்லப்பட்டிருக்கிறது. சரணாகதனைக் கொன்றவனுக்கோ ஓரிடத்திலும் ப்ராயச்சித்தம் காணப்படவில்லை

கொல்லப்படுகிற ஒருஜந்துவை தனக்கு சக்தியிருக்கும்போதும் எவன் உபேக்ஷிக்கிறானோ அவன் கோரமான நரகத்தை யடைகிறான் என்று புத்திமான்கள் சொல்லுகிறார்கள்.

2 प्राणार्थिनमिमं भीतं द्विजं मां शरणागतम् ।

[1] த்யஜேயம் யதி கோ மத்த:
ஸ்யாந்-நர: பாப-க்ருத் புவி ||
ஶக்தோ அபி ரக்ஷணே லோபாத்
பயாத் வா ஶரணாகதம் |
யஸ்-த்யஜேத் புருஷோ லோகே
ப்ராஹ்ம-ஹத்யாம் ஸ விந்ததி || என்று

இதிஹாஸோத்தமத்திலும் சொல்லப்பட்டது.

[2] யோ ஹி கஶ்சித் த்விஜம் ஹந்யாத்
காம் ச லோகஸ்ய மாதரம் |
ஶரணாகதம் ச யோ ஹந்யாத்
துல்யமேஷாம் ச பாதகம் || என்று

கபோதி தன்னைக் கட்டியிருக்கிற வேடனை ரக்ஷிக்கைக்காக தன் பர்த்தாவான கபோதத்தைக் குறித்துச் சொல்லிற்று.

---

1 त्यजेयं यदि को मत्तः स्यान्नरः पापकृद्भुवि ||
शक्तोऽपि रक्षणे लोभात् भयाद्वा शरणागतम् ।
यस्त्यजेत् पुरुषो लोके ब्रह्महत्यां स विन्दति ||

பயந்து உயிரை வேண்டி என்னை சரணமடைந்த இந்தப் பறவையைக் கைவிடுவேனேயாகுல், என்னைக் காட்டிலும் பாபி இவ்வுலகில் யாரிருப்பார்?

ரக்ஷிக்க சக்தியிருக்கும்போதே ஆசையாலோ அல்லது பயத்தாலோ சரணாகதனைக் கைவிட்ட மனிதன் இவ்வுலகில் ப்ராஹ்ம-ஹத்யாதோஷத்தை அடைகிறுன்.

2 यो हि कश्चिद् द्विजं हन्यात् गां च लोकस्य मातरम् ।
शरणागतं च यो हन्यात् तुल्यमेषां च पातकम् ||
(பார. சா. 144-25)

ப்ராஹ்மணனைக் கொன்றவனுக்கும், உலகுக்குத் தாய்போன்ற பசுவைக்கொன்றவனுக்கும், சரணாகதனைக் கொன்றவனுக்கும் உண்டாகும் பாபம் ஸமானமே.

(தத்-பாபம்) [1] ஶரணாகதம் பரித்யஜ்ய
வேதம் விப்லாவ்ய ச த்விஜ: |
ஸம்வத்ஸரம் யவாஹார:
தத்-பாபமவஸேததி || என்று

மந்வாதிகள் சொல்லுகிறபடியே ப்ராயஶ்சித்தம் பண்ண வரிதாய்க்காணும் இப்பாபமிருப்பது. (லோக-கர்ஹிதம்):—

[2] ததேவமாகதஸ்யாஸ்ய
கபோதஸ்யாபயார்த்திந: |
கதமஸ்மத்-விதஸ்-த்யாகம்
குர்யாத் ஸத்பிர்-விகர்ஹிதம் || என்று

ஶிபி சொன்ன [3] ஶிஷ்ட கர்ஹையளவேயன்று; இது கேட்கிலும் ப்ராயஶ்சித்தம் பண்ணவேண்டுகையாலே நாட்டாரெல்லாரும் இவனை 'ஶீ' 'ஶீ' என்று ஒருக்காலும் கூட்டி கொள்ளார்கள்.

---

1 शरणागतं परित्यज्य वेदं विप्लाय च द्विजः ।
संवत्सरं यवाहारः तत्पापमवसेधति ॥ (மனு.11-198)

சரணாகதனைக் கைவிட்டவன் வேதத்திற்கு விபரீதமான அர்த்தம் செய்யும் ப்ராஹ்மணன் இருவரும் ஒரு வருஷகாலம் "யவம்" என்னும் தான்யத்தை ஆஹாரமாகக் கொண்டு அந்தப் பாபத்தைப் போக்கடிப்பார்கள்.

2 तदेवमागतस्यास्य कपोतस्याभयार्थिनः ।
कथमस्मद्विधस्त्यागं कुर्यात्सद्भिर्विगर्हितम् ॥
(இதி. ஸமு. 4.17)

ஆகையால் இவ்விதம் உயிரைவேண்டி என்னிடம் வந்த இந்தப் புறாவை என்னைப்போன்றவன் எப்படிக் கைவிட முடியும்? அப்படிக் கைவிடுதல் பெரியோர்களால் நிந்திக்கப்பட்டது.

3 गर्हा—நிந்தை.

ஆகையாலேயிறே

[1] பாலக்நாம்ஶ்ச க்ருதக்நாம்ஶ்ச
விஶுத்தாநபி தர்மத: |
ஶரணாகத-ஹந்த்ரூம்ஶ்ச
ஸ்த்ரீ-ஹந்த்ரூம்ஶ்ச ந ஸம்வஸேத் ||

[2] ஶரணாகத-பால-ஸ்த்ரீ-
ஹிம்ஸகாந் ஸம்வஸேந்-ந து |
சீர்ண-வ்ரதாநபி ஸத:
க்ருதக்ந-ஸஹிதாநிமாந் || என்று

ஶரணாகத-[3]காதகனையும், பால-காதகனையும், ஸ்திரீயைக் கொன்றவனையும், க்ருதக்நனையும், ப்ராயச்சித்தம் பண்ணி தங்களுக்கு ஶுத்தரானாலும், ஒருக்காலும் கூட்டிக்கொள்ளலாகாதென்று மந்வாதி-தர்மசாஸ்த்ரங்க

1 बालघ्नांश्च कृतघ्नांश्च विशुद्धानपि धर्मतः ।
शरणागतहन्तॄंश्च स्त्रीहन्तॄंश्च न संवसेत ॥
(மநு. 11. 190).

ஶரணாகதன், குழந்தை அல்லது ஸ்திரீ இவர்களைக் கொன்றவனோடும், செய்நன்றி மறந்தவனோடும், அவர்கள் ப்ராயஶ்சித்தம் செய்துகொண்டிருந்தாலும், ஸஹவாஸம் செய்யக்கூடாது.

2 शरणागतबालस्त्री हिंसकान् संवसेन्न तु ।
चीर्णव्रतानपि सतः कृतघ्नसहितानिमान् ॥
(யாஜ்ஞ. 3. 5. 298).

குழந்தையைக் கொன்றவன், செய்ந்நன்றி மறந்தவன், ஶரணாகதனைக் கொன்றவன், ஸ்திரீஹத்தி செய்தவன் இவர்கள் (தகுந்த ப்ராயஶ்சித்தத்தினால்) ஶாஸ்திரப்படி பரிஶுத்தியடைந்தாலும் அவர்களோடு சேர்ந்து வஸிக்கக்கூடாது.

3 கொன்றவன்.

ளிலே சொல்லுகிறது. ஆனபின்பு நாம் ஶரணாகதனை விட்டால் நம்மை நாடும் விஶ்வாமித்ராதிகளான குருக்களும் ஒருக்காலும் கூட்டிக்கொள்ளார்கள் காணும்.

இப்படி த்ருஷ்ட-ப்ரத்யவாயம் சொல்லிற்று; [1] அநந்தரம் அத்ருஷ்ட-ப்ரத்யவாயம் சொல்லுகிறது.

[2] விநஷ்ட: பஶ்யதஸ்-தஸ்யா-
ரக்ஷிணஶ்-ஶரணாகத: |
ஆதாய ஸுக்ருதம் தஸ்ய
ஸர்வம் கச்சேதரக்ஷித: ||

ரக்ஷிக்கவல்லவனாயிருக்க ரக்ஷியாமையாலே அவன் காணச்செய்தே நஷ்டனான சரணாகதனுக்கு வேறொரு [3]க்ருஷிபண்ணவேண்டா; அவன் அநாதிகாலம் பண்ணின ஸுக்ருதத்தையெல்லாம் [4]ஸவாஸநமாகவாங்கிக்கொண்டு, அவன் புகக்கடவ புண்யலோகங்களையெல்லாம் தான் கைக்கொள்ளும். ஶரணாகத-[5]பரித்யாகியானவன் பக்கல் ப்ராயஶ்சித்தம் பண்ணுகைக்கும் கைமுதலான ஸுக்ருத-

---

1 பிறகு.

2 विनष्टः पश्यतस्तस्यारक्षिणश्शरणागतः ।
आदाय सुकृतं तस्य सर्वं गच्छेदरक्षितः (யு. 18—30)
சக்தியிருந்தும் சரணமடைந்தவனை ரக்ஷிக்காதவன் பார்த்துக்கொண்டிருக்கும்போதே நாசமடைந்த சரணாகதன், அவனால் ரக்ஷிக்கப்படாதவனாய், அவனுடைய எல்லாப் புண்யங்களையும் தன்னுடன் கொண்டுபோய் விடுகிறான்.

3 कृषि—முயற்சி. 4 முழுவதும். 5 கைவிட்டவன்.

லேஶமும் இல்லாமையாலே பாப-பரத்தாலே முழுக்க நரகங்களிலே விழுமத்தனை.

[1]உத்தரார்த்தத்தாலே த்ருஷ்டாத்ருஷ்ட-ப்ரத்யவாயங்களை ஸமுச்சயித்துச்சொல்லுகிறது.

[2] அஸ்வர்க்யம் சாயஶஸ்யம் ச
பல-வீர்ய-விநாஶநம் ||

ஶரணாகதனுக்கு ஶரீரமொன்றுமழியுமளவே யுள்ளது; அவனை யழியக் கொடுத்தவனுக்கு பரலோகமும், இங்குள்ள புகழும், பல வீர்யங்களும், மற்றும் சொல்லிச் சொல்லாத [3]குண-விபூதிகளுமெல்லாம் அழியும்படியாயிருக்கும். ஶரணாகதனுக்கு ரக்ஷை பிறந்ததாகில், இங்கே நினைத்தது ஆம்; ரக்ஷைபிறந்ததில்லையாகில், விட்டவனுடைய ஸுக்ருதத்தை யெல்லாம் கைக்கொண்டு தன் நினைவின்றிக்கே வந்த பரலோக-ஸுகம் பெறலாம். ஒருபடியாலும் ஶரணாகதனுக்குக் கார்யம் தப்புவதில்லை.

இப்படி ஶரணாகதனை ரக்ஷியாதபோது வரும் த்ருஷ்டாத்ருஷ்ட-தோஷம் சொல்லி

---

[1] उत्तरार्ध — பின்பாதி.

[2] अस्वर्ग्यं चायशस्यं च बलवीर्यविनाशनम् ॥ (லை-31)
பரலோகத்தை யழிக்கும்; அபகீர்த்தியைக் கொடுக்கும்; பலம் வீர்யம் முதலிய குணங்களை நாசம் செய்யும்.

[3] विभूति—செல்வம்; பெருமை.

ற்று; மேலில் ஶ்லோகத்தாலே ஶரணாகதரக்ஷண த்தில் வரும் த்ருஷ்டாத்ருஷ்ட-புருஷார்த்த-ஸித்தியை யருளிச் செய்துகொண்டு, கண்டு மஹர்ஷி சொன்னவர்த்தத்திலே தமக்கு அநு ஷ்டித்தல்லது நிற்க வொண்ணாதபடி பிறந்த ருசியை யருளிச் செய்கிறார்:—

1 கரிஷ்யாமி யதார்த்தம் து
கண்டோர்-வசநமுத்தமம் |
தர்மிஷ்டம் ச யஶஸ்யம் ச
ஸ்வர்க்யம் ஸ்யாத்து பலோதயே ||

(கரிஷ்யாமி)—நாம் ஶரணாகதரக்ஷணம் பண்ணக் கடவோம்; 2 தர்ம: ஶ்ருதோ வா த்ருஷ்டோ வா" இத்யாதிகளை யறிந்து தர்மிஷ்டரான நீங்கள் இதற்கு விலக்காமை யென்றொரு பந்து-க்ருத்யம் செய்து தரவேண்டும். (கரிஷ்யாமி)— அநுஷ்டிக்கைக்காகவன்றோ

---

1 करिष्यामि यथार्थं तु कण्डोर्वचनमुत्तमम् ।
धर्मिष्ठं च यशस्यं च स्वर्ग्यं स्यात्तु फलोदये ॥
(யு. 18-32)

மிகவும் சிறந்ததும் உண்மையானதுமான கண்டுவின் வசனத்தை அநுஸரித்து நடக்கப் போகிறேன்; ஏனெனில் அது தர்மத்தோடு கூடியது; கீர்த்தியைத் தருவது; பலனைக் கொடுக்கும் காலத்தில் ஸ்வர்க்கத்தைத் தரும்.

2 धर्मः श्रुतो वा दृष्टो वा (பார. ஆச்வ. 96-31)
தர்மம் கேட்கப்பட்டாலும் சரி, பார்க்கப்பட்டாலும் சரி.

நாம் இக்காதை கற்றது; [1]“ந காதா காதிநம் ஶாஸ்தி” என்கிறபடியே குளிங்க-ஶகுனியை ப்போலே வேறொன்றைச் சொல்லி, வேறொன்றைச் செய்கைக்கன்றோ? (யதார்த்தம்) பாதகமில்லாமையாலும் ப்ரத்யக்ஷ-ச்ருதி-ஸம்வாதத்தாலும் பழுதற்ற பாசுரம். த்ருஷ்டாத்ருஷ்ட-விருத்தமான உங்கள் வார்த்தையைக் காட்டில் அவன் வார்த்தைக்குள்ள விசேஷமிருந்தபடி கண்டீரே. (கண்டோர்-வசநம்) [2]“தர்மஸ்ய தத்வம் நிஹிதம் குஹாயாம்” என்னும்படி யிருந்தால் “மஹாஜநோ யேந கதஸ்-ஸ பந்தா:” என்கிறபடியே பெரியனை கண்டுவின் வழியைப்பின்செல்லுகை காணும் நமக்குக் கார்யம். (உத்தமம்)-உத்தம-தர்ம-விஷயம்.

---

1 न गाथा गाथिनं शास्ति (பார. ஸபா. 64–20).

*ச்லோகம் தன்னை உச்சரிப்பதால் மாத்திரம் ஒருவனை ரக்ஷிப்பதில்லை.*

2 धर्मस्य तत्वं निहितं गुहायाम् महाजनो येन गतः स पन्थाः (பார. ஆர.314—119)

*தர்மத்தின் உண்மை குஹைக்குள் வைக்கப்பட்டிருக்கிறது அறியவரிது; ஆகையால் பெரியோர்கள் அநுஷ்டிப்பதே (ஸரியான) வழி.*

அங்ஙனன்றிக்கே, இப்பாசுரத்திற்குமேல் உம்மாலேயாதல், முதலிகளாலேயாதல், நம் மாலேயாதல் ஒரு கண்ணழிவு சொல்லவொண்ணாதபடி எல்லாத்திற்கும் மேலான பாசுரங் காணுமிது. இதற்கு

1 பீதாபய-ப்ரதாநேந
ஸர்வாந் காமாநவாப்நுயாத் |
தீர்க்கமாயுஶ்ச லபதே
ஸுகீ சைவ ஸதா பவேத் ||

2 ஏகத: க்ரதவஸ்-ஸர்வே
ஸமக்ர-வர-தக்ஷிணா: |
ஏகதோ பய-பீதஸ்ய
ப்ராணிந: ப்ராண-ரக்ஷணம் || என்று

---

1 भीताभयप्रदानेन सर्वान्कामानवाप्नुयात् ।
दीर्घमायुश्च लभते सुखी चैव सदा भवेत् ॥
(ஸம்வர்த்தஸ்ம்ருதி. 53)

2 एकत: क्रतवस्सर्वे समग्रवरदक्षिणा: ।
एकतो भयभीतस्य प्राणिन: प्राणरक्षणम् ॥
(இதி. ஸமு. 4–3)

பயந்து சரணமடைந்தவனுக்கு அபயமளிப்பதினால் ஒருவன் தான் விரும்பிய வெல்லாவற்றையும் அடைவதுடன், நீண்ட ஆயுளையும் பெற்று, எப்போதும் ஸுகமாகவே ஜீவிப்பவனாக ஆகிறான்.

பூர்ணமானதும் மேன்மையுமான தக்ஷிணைகளோடு கூடின யாகம் ஒரு தட்டு; பயத்தினால் நடுங்கும் ப்ராணியினுடைய உயிரை ரக்ஷிப்பது மற்றொரு தட்டு (இரண்டும் ஸமானம்.)

ஸம்வர்த்தாதிகள் சொன்ன [1]தாத்காலிக-பல மும் [2]விபாக-காலத்தில் பலமும் கேளீர். 'தர்மிஷ்டம் ச யசஸ்யம் ச' என்று தத்காலத்திலே ஸித்தித்து நிற்கும் பலம்; 'ஸ்வர்க்யம் ஸ்யாத் து பலோதயே' என்று ப்ரதிபந்தகம் கழிந்தால் விபாக-காலத்தில் வரும் பலம்.

[3] நாதோ பூயஸ்-ததோ தர்ம:
  கஸ்சிதந்யோஸ்தி கேசர |
ப்ராணிநாம் பய-பீதாநாம்
  அபயம் யத் ப்ரதீயதே ||
மஹாந் தர்மோக்ஷய பலஸ்-
  ஸரணாகத-பாலநே |
தர்ம-நிஸ்சய-தத்வஜ்ஞா
  ஏவமாஹுர் மநீஷிண: ||

என்று ஸமிபி-ப்ரப்ருதிகள் அறுதியிட்டபடியே ஸரணாகத-ரக்ஷணமே தர்மங்களெல்லாத்துக்கும் முடிசூடின தர்மம். இதறிந்து காருணி

---

1 तात्कालिक—அந்தக் காலத்திலேயே ஏற்படுகிற.

2 विपाककाल—பலிக்கும் காலம்.

3 नातो भूयस्ततो धर्मः कश्चिदन्योस्ति खेचर |
प्राणिनां भयभीतानां अभयं यत्प्रदीयते ||
महान्धर्मोऽक्षयफलः शरणागतपालने |
धर्मनिश्चयतत्वज्ञा एवमाहुर्मनीषिणः ||

பக்ஷியே! பயத்தினால் நடுங்கும் பிராணிகளுக்கு அபயம் கொடுப்பதைக் காட்டிலும் வேறொரு தர்மம் ஒன்றும் கிடையாது.

தர்மத்தின் உண்மையை அறிந்த அறிவாளிகள், 'சரணாகதனை ரக்ஷிப்பதில் அழிவற்ற பலத்தையுடைய தர்மம் இருக்கிறது' என்று சொல்லுகிறார்கள்.

கருமாய் ரக்ஷண-ஸமர்த்தருமாயிருக்குமவர்கள் பக்கல் ஶரணாகதிக்கு பல-ஸித்தியில் ஸம்ஶயம் இல்லை யென்று திருவுள்ளம்.

1 தீநோ த்ருப்யது வாऽபராத்யது பரம் வ்யாவர்த்ததாம் வா ததஸ்-
த்ராதவ்யஶ்-ஶரணாகதஶ்-ஶகநதஸ்-ஸத்பிஸ்-ததா ஸ்தாப்யதே |
விஶ்வாமித்ர-கபோத-வாநர-ரகு-வ்யோமாத்வக-ப்ரேயஸீ-
நாடீஜங்க-ப்ருஹஸ்பதி-ப்ரப்ருதிபி: நந்வேஷ கண்டாபத: ||

இதி

பரம-தர்ம-நிர்ணய: ஸப்தமோதிகார:

1 दीनो दृप्यतु वाऽपराध्यतु परं व्यावर्ततां वा तत-
स्त्रातव्यश्शरणागतश्शकुनतस्सद्भिस्तथा स्थाप्यते ।
विश्वामित्रकपोतवानररघुव्योमाध्वगप्रेयसी-
नाडीजङ्घबृहस्पतिप्रभृतिभिर्नन्वेष घण्टापथः ॥

சரணாகதனானவன் ஆர்த்தனாய் (நொந்தவனாய்) இருக்கட்டும்; த்ருப்தனாய் (விளம்பத்தைப் பொறுக்குமவனாய்) இருக்கட்டும்; கொடிய அபராதங்களை செய்கிறவனாயிருந்தாலும் இருக்கட்டும்; அல்லது அபராதம் செய்வதிலிருந்தும் ஒழிந்தவனாயிருந்தாலும் இருக்கட்டும்; அவன் தன் சக்தியுள்ளமட்டும் ஒருவனால் ரக்ஷிக்கப்படவேண்டியவன் என்கிற இந்த ராஜமார்க்கமானது விச்வாமித்ரர், புறா, வாநரம், ரகுமஹாராஜன், கந்தர்வ ஸ்த்ரீ, நாடீஜங்கன், (என்கிற கொக்கு), ப்ருஹஸ்பதி முதலான ஸத்துக்களால் ஸுப்ரஸித்தமாக நிலை நிறுத்தப்பட்டிருக்கிறது.

## 8. சரண்ய-ஸ்வரூப-விசேஷ-ப்ரகாச:

[1] ஶ்ருதிஸ்-ஸ்ம்ருதிஸ்-ஸதாசார:
ஸ்வஸ்ய ச ப்ரியமாத்மந: |
ஸம்யக்ஸங்கல்பஜ: காமோ
தர்ம மூலமிதம் ஸ்ம்ருதம் || என்று

மஹர்ஷிகள் சொன்ன தர்ம-ப்ரமாணங்கள் அஞ்சிலே நாலை யருளிச்செய்து காட்டி, [2]பஞ்சம-தர்ம-ப்ரமாணத்தை யருளிச் செய்கிறார்:—

[3] ஸக்ருதேவ ப்ரபந்நாய
தவாஸ்மீதி ச யாசதே |
அபயம் ஸர்வ-பூதேப்யோ
ததாம்யேதத் வ்ரதம் மம ||

---

1 श्रुतिः स्मृतिः सदाचारः स्वस्य च प्रियमात्मनः ।
सम्यक्सङ्कल्पजः कामो धर्ममूलमिदं स्मृतम् ॥
(யாஜ்ஞ. ஸ்மி. 1–7)

வேதம், ஸ்ம்ருதி, பெரியோர்களுடைய அநுஷ்டானம், தன்ப்ரியம், தான் தீர்க்கமாய் ஆலோசித்த பிறகு உண்டாகும் இச்சை இவை ஐந்துமே தர்மத்திற்கு மூலம்.

2 पञ्चम——ஐந்தாவது.

3 सकृदेव प्रपन्नाय तवास्मीति च याचते ।
अभयं सर्वभूतेभ्यो ददाम्येतद् व्रतं मम ॥ (யு. 18-33)

ஒருக்கால் சரணம் என்று என்னை அடைந்து, நான் உன்னுடையவன் என்று சொல்லி வேண்டுவானுகில், அவனுக்கும் ஸர்வபூதங்களுக்கும் ஸர்வ பிராணிகளிடமிருந்தும் பயமில்லாமல் செய்வேன். இது என் வ்ரதம்.

(ஸக்ருத்)—மற்ற உபாயத்திலே [1] ஆவ்ருத்தி சாஸ்த்ரார்த்தமானாற்போலே காணும் ப்ரபத்தியில் [2] அநாவ்ருத்தி சாஸ்த்ரார்த்தமாயிருக்கும்படி. ஏவ-காரத்தாலே [3] நைரபேக்ஷ்யம் சொன்னபடி. 'ப்ரபந்நாய' 'தவாஸ்மீதி ச யாசதே' என்கிற விரண்டாலுமாக [4] கோப்த்ருத்வ-வரணமும் [5] ஆத்ம-நிக்ஷேபமும் சொன்னபடி. 'ப்ரபந்நாய' என்று [6] மாநஸமாய், 'யாசதே' என்று [7] வாசிகமாகவுமாம். த்வயத்தில் போலே அடைவே உபாயத்தையும் பலத்தையும் சொல்லுகிறதாகவுமாம். 'ப்ரபந்நாய' என்று [8] கோ-பலீவர்த்த-ந்யாயத்தாலே ப்ரயோஜநாந்தர-பரனைச் சொல்லி, 'தவாஸ்மீதி ச யாசதே' என்று அநந்ய-ப்ரயோஜநனைச் சொல்லுகிறதாகவுமாம்.

---

[1] திரும்பச் செய்தல். [2] திரும்பச் செய்யாமை.

[3] नैरपेक्ष्यं—(தன் கார்யத்தைச் செய்ய மற்றொன்றை) விரும்பாமை.

[4] गोप्तृत्ववरणं—ரக்ஷகனாக இரு என்று பிரார்த்திப்பது

[5] आत्मनिक्षेप— ஆத்மாவை ஸமர்ப்பிப்பது.

[6] மனதால் நினைப்பது;

[7] वाचिक—வாயால் சொல்லுவது.

[8] गोबलीवर्दन्याय— அதாவது:—மாடுகளை யெல்லாம் கட்டு, காளைமாட்டையும் கட்டு என்று சொன்னால், மாடுகள் என்பதால் காளைமாடும் சொல்லப்பட்டாலும் தனித்து காளை என்று சொல்வதால் முதலில் 'மாடு' என்பதில் காளையைத் தவிர மற்ற மாடுகளே சொல்லப்பட்டன என்பதே.

[1] ஶரணம் ச ப்ரபந்நாநாம்
தவாஸ்மீதி ச யாசதாம் |
ப்ரஸாதம் பித்ரு-ஹந்த்ரூணம்
அபி குர்வந்தி ஸாதவ: || என்கிற

ச்லோகத்திலும் இப்படியே [2]யதோசித விவக்ஷையைக்கண்டு கொள்வது. [3]"சதுர்-விதா பஜந்தே மாம்" என்கிற உபாஸநம் போலே [4]"தாவதார்த்திஸ்-ததா வாஞ்சா" இத்யாதி-ப்ரமாணங்களாலே ப்ரபத்தியும் ஸகல-பல-ஸாதநமாயிருக்கும். 'அபயம்' என்று [5]ஸங்கோசாபாவத்தாலே ஸர்வ-பயாபாவத்தையும் சொல்லுகிறது. 'ஸர்வ-பூதேப்ய:' என்கிறவித்தை

---

[1] शरणं च प्रपन्नानां तवास्मीति च याचतां ।
प्रसादं पितृहन्तृणामपि कुर्वन्ति साधवः ॥ [5] (வி. த. 106-53)
ஶரணம் என்று வந்தடைந்தவர்களுக்கும், நான் உன்னைச் சேர்ந்தவன் என்று ப்ரார்த்திக்கிறவர்களுக்கும், அவர்கள் பித்ருஹத்தி செய்தவர்களாயிருந்தாலும் ஸாதுக்கள் க்ருபை செய்கிறார்கள்.

[2] தகுந்தபடி அர்த்தத்தை.

[3] चतुर्विधा भजन्ते मां (கீதை: 7–16). நான்குவிதமான அதிகாரிகளும் என்னை உபாஸிக்கிறார்கள்.

[4] तावदार्तिस्तथा वाञ्छा (வி. பு. 1-9-73) அதுவரையில் தான் இழந்த செல்வம் வேண்டுமென்கிற ஆசையும், அப்படியே புதிதான ஐச்வர்யத்திலாசையும்.

[5] அளவு இல்லாதபடியாலே.

[1]பஞ்சமீ என்று சிலர் வ்யாக்யாநம் பண்ணினார்கள்; சோமாசியாண்டானுள்ளிட்டார்கள் [2]சதுர்த்தீ யென்று நிர்வஹித்தார்கள். இரண்டு பக்ஷத்திலுமுள்ள குண-தோஷ-தத்வ மாதாநங்களை தத்தத்-க்ரந்தங்களிலே கண்டு கொள்வது. அதில் பஞ்சமீ-பக்ஷத்தில் 'ப்ரபந்நாய' என்கிற விதுக்கு ஸங்கோசமில்லாமையாலே ப்ரபத்தியினுடைய ஸர்வாதிகாரத்வம் ஸித்திக்கும். சதுர்த்தீ-பக்ஷத்தில் ஸர்வாதிகாரத்வம் கண்டோக்தமாம். பஞ்சமியானால், கேவல ராவணாதிமாத்ரத்தைப் பற்றவன்று; ப்ரஹ்ம-ருத்ராதிகளையும் நம்மையும் பற்ற பயமில்லாதபடி பண்ணுவதோம் என்றருளிச்செய்தபடியாம். சதுர்த்தியானால், விபீஷணனென்று நினைக்கவேண்டா; ராவணன் தானாகிலும் நாம் அவனுக்கு அபய-ப்ரதாநம் பண்ணுவோமென்றதாம். இப்பொருள் கீழில் ப்ரகரணத்திற்கும் மேலில் ப்ரகரணங்களில் ம்லோகங்களுக்கும் சேரும். இந்த யோஜனையில் ஸர்வரையும் பற்ற [3]பயாபாவம் [4]அர்த்த-ஸித்தம்.

---

[1] ஐந்தாம் வேற்றுமை. [2] நான்காம் வேற்றுமை

[3] भयाभावः— பயமின்மை.

[4] अर्थसिद्ध— தன்னடைவே ஏற்படுவது.

[1] நிதாநம் ஸர்வபூதாநாம்
ஏக: கர்ம-பல-ப்ரத: |
இதி பச்யந் கசா-துல்யாத்
குதச்சிந்-ந பிபேதி ஹி ||

[2] ஸர்வாபராத-நிஷ்க்ருத்யா
ப்ரபத்யா கருணாநிதிம் |
ப்ரஸாதயந்-ந ஹி புநஸ்-
ததோபி பயம்ருச்சதி ||

---

1 निदानं सर्वभूतानामेकः कर्मफलप्रदः ।
इति पश्यन् कशातुल्यात्कुतश्चिन्न बिभेति हि ॥

ஸர்வ பூதங்களுக்கும் காரணமான ஒருவனே எல்லோருக்கும் அவரவர்களுடைய கர்மத்திற்கு ஏற்றவாறு பலத்தைக் கொடுக்கிறான் என்பதை அறிந்து, சாட்டை போன்ற (துன்பத்தைக் கொடுக்கக்கூடிய) எந்த வஸ்து விடத்திலிருந்தும் பயப்படுகிறதில்லை.

2 सर्वापराधनिष्कृत्या प्रपत्त्या करुणानिधिम् ।
प्रसादयन्न हि पुनस्ततोऽपि भयमृच्छति ॥

எல்லா அபராதங்களுக்கும் ப்ராயச்சித்தமாயிருக்கிற ப்ரபத்தியினால் கருணைக்கடலான ஸர்வேச்வரனை ஸந்தோஷப் படுத்தினால், மறுபடியும் அவனிடமிருந்து கூட இவனுக்கு பயம் கிடையாது. (செய்த பாபத்திற்காக வரும் தண்டனையைப் பற்றி பயமேயில்லை).

[1] அபாய-ஸம்ப்லவே பூயோ
யதார்ஹமநுஶிஷ்யதே |
ப்ராயஶ்சித்திரியம் ஸாத்ர
யத் புநஶ்-ஶரணம் வ்ரஜேத் ||

(ஏதத் வ்ரதம்)இது [2]ப்ரமாணாநுமதமாய், தவரில் ப்ரத்யவாயம் வரும்படியான [3]தார்ம்யமான ஸங்கல்பம்காணும். (மம)-நமக்கு ஸங்கல்பம் நடத்துகைக்கு விலக்கான அஜ்ஞாநாஶக்திகள் ஒருக்காலும்வாராதுகாணும். ஆகையால் விலக்கவொண்ணாதை இவ்வ்ரதத்தை பரிவரான நீங்களுமிசைந்து ரக்ஷியுங்கோள் என்று திருவுள்ளம்.

---

[1] अपायसंप्लवे भूयो यथार्हमनुशिष्यते ।
प्रायश्चित्तिरियं साऽत्र यत्पुनश्शरणं व्रजेत् ॥
ல. த. 17. 91.

சாஸ்த்ர நிஷித்தமான செய்கை ஏதாவது நேரிடில், அந்தந்த புருஷனுக்குத் தக்கவாறு ப்ராயச்சித்தங்களும் விதிக்கப்பட்டிருக்கின்றன. (ஞான சக்தியற்றவனுக்கு பாபம் நேரிடில்) மறுபடியும் சரணமடைவதே ப்ராயச்சித்தம்.

[2] प्रमाणानुमत— ப்ரமாணங்களால் ஒத்துக்கொள்ளப் பட்டது.

[2] धर्म्य— தர்மம்தவறாத.

இஸ்ஸ்லோகத்திலருளிச்செய்த ப்ரபத்தியினுடைய ஸர்வாதிகாரத்வத்தை ப்ரக்ருதமான ராவண-விபீஷணோதாஹரணத்திலே காட்டி இவன் விபீஷணனேயாகிலும் ராவணனாகிலும் நாமிவனுக்கு அபயப்ரதாநம் பண்ணினோம். உம்மையும் முதலிகளையும் [1]புருஷகாரமாகக் கொண்டு நம்மை ஶரணாகதனானவனை [2]அமாநவ-ந்யாய-ஸ்தரான நீரே நம்மோடே சேர்த்து நமக்கு இப்புருஷார்த்தத்தைத் தாரீரென்று [3]ஸுஹ்ருத்-பாரதந்த்ர்யம் தோற்ற வருளிச்செய்கிறார்:—

[4] விபீஷணோ வா ஸுக்ரீவ
யதி வா ராவணஸ்-ஸ்வயம் |
ஆநயைநம் ஹரிஶ்ரேஷ்ட
தத்தமஸ்யாபயம் மயா ||

---

1 पुरुषकार— சிபார்சு.

2 अमानवन्यायस्थ— ஜீவாத்மாக்கள் ஸம்ஸாரம் நீங்கி மோக்ஷத்திற்குச் செல்லுங்கால், அவர்களை அழைத்துச்செல்லும் நித்யனை ஒரு அதிகாரிபுருஷன் அமாநவன்; அவனுடைய ஸ்தாநத்தில் இருப்பவர்.

3 सुहृत्पारतन्त्र्यं— சிநேகிதர்களுக்குப் பாரதந்த்ரமாயிருக்கும் தன்மை.

4 विभीषणो वा सुग्रीव यदि वा रावणः स्वयम् ।
आनयैनं हरिश्रेष्ठ दत्तमस्याभयं मया ॥ (யு. 18. 34).
வாநரஶ்ரேஷ்ட! இவன் விபீஷணனயிருக்கட்டும், அல்லது ராவணனாகவே யிருக்கட்டும்; அவனை அழைத்து வா. (ஶரணம் என்று சொன்ன க்ஷணத்திலேயே) நான் இவனுக்கு அபயமளித்துவிட்டேன்.

நீங்கள் சொல்லுகிறுப்போலே விபீஷணுகவுமாம்; கபோதத்தின் [1]பேறு நாமும் பெறவேண்டுமென்றிருக்கிற நம்முடைய [2]மநோரதத்தின்படியே [3]ஸாக்ஷாத் ராவணுகவுமாம். * (அஸ்ய)-'ராகவம் ஶரணம் கத:' என்கிற [4]அருந்துதோக்தியை நேர்ந்த விவனுக்கு என்றபடி. 'அஸ்ய' என்கிற விதிலே இவனுடைய வநுபந்திகளும் [5]அநுப்ரவிஷ்டர். [6]அநுபந்திகளுடைய பயமும் ஶமித்தாலாயிற்று இவனுக்கு அப்யப்ரதாநம் பண்ணிற்றுவது. விபீஷணுங்கீகாரத்தை இசைந்து முதலிகள்பக்கல் தாக்ஷிண்யம் குலையாமைக்காக இவனைச் சிறிது பரீக்ஷித்ததாகப் பண்ணிக்கைக்கொண்டாலோ வென்று மஹாராஜருக்குக் கருத்தாகத் திருவுள்ளம் பற்றி உத்தரமருளிச் செய்கிறுர் (தத்தமஸ்யாபயம் மயா).

---

1 லாபம்.

2 मनोरथ—விருப்பம்.

3 நேரில்.

4 अरुन्तुदोक्ति—உயிர்நிலையை வருத்தும்சொல் சொல்

5 अनुप्रविष्ट—சேர்ந்தவர்கள்.

6 अनुबान्धि—தொடர்ந்துவந்தவர்.

[1]ஸத்ய-ஸங்கல்பரான நாம் பண்டே ஶரணாகத-பரித்ராணத்தை நமக்கு வ்ரதமாக ஸங்கல்பித்து வைத்தோம்; விபீஷணனும் உபாயம் அநுஷ்டித்தான்; ஆனபின்பு நாமிவனுக்கு அபயப்ரதாநம் பண்ணினோமாயிற்று. இனி இவனுக்கு நம்மைப்பற்ற பரீக்ஷை என்று ஒரு [2]பயஸ்தாநத்தை உண்டாக்கி நமக்கு [3]வ்ரத-பங்கம் பிறப்பிக்க வழகிதோ? தாங்களே தெளியப்புகுகிற முதலிகள் பக்கல் தாக்ஷிண்ய-பங்கமழகிதோ வென்று ஹரி-ச்ரேஷ்டனை வாநர-ராஜ்யத்திற்கு முடிசூடி [4]மஹாமநாவாயிருக்கிற நீர் இத்தை நெஞ்சிலே யுரைத்துப் பாரீர். 'ஆநயைநம்' என்கிறது கார்யத்தில் தீர்விருந்தபடி.

---

இதி

ஶரண்ய-வ்ரத-விசேஷ-ப்ரகாஶ:

அஷ்டமோதிகார:

---

1 सत्यसङ्कल्प — (ஒருபோதும்) வீண்போகாத ஸங்கல்பத்தை யுடையவர்.

2 भयस्थानं — பயத்திற்கு இடம்.

3 व्रतभङ्ग — வ்ரதத்திற்கு இடையூறு.

4 महामनाः — பெருந்தன்மையுள்ளவர் (உதாரமான ஸ்வபாவத்தையுடையவர்).

## 9. சரண்ய-சரணாகத-ஸங்கம-லாப:

இப்படி அருளிச்செய்தவாறே, முன்பு [1]"கூழாட்பட்டு நின்றீர்களை யெங்கள் குழுவினில் புகுதலொட்டோம்" என்று நின்ற மஹாராஜர் தெளிந்து, த ண்ணின வ்யாபாரத்திற்குப் பெருமாளை க்ஷ )கொண்டு, தாமே புருஷகாரமாய் [2]"வந்து மண்ணும் மணமும் கொண்மின்" [3]"எமதிடம் புகுது (மின்)" இத்யாதிகளில் [4]ப்ரக்ரியையாலே 'நாங்களும் ஸ்ரீவிபீஷணாழ்வானும் ஒரு வாசியற அடிமைசெய்யப் பெற வேண்டும், நாங்களும் இவனுக்கு *அடியோமாக வேண்டும்' என்று விண்ணப்பம் செய்ய; இப்படி [5]ப்ரதிபந்தகம் கழிந்து அநந்த

* सखा दासोऽस्मि என்னும்படி [6]

[1] திருப்பல்லாண்டு. 3—கூழுக்கு அடிமை பூண்டு நிற்கிற உங்களை எங்களுடைய கூட்டத்தில் புகவிடோம்.

[2] ஷை. 3—வந்து சேர்ந்து(பகவதுத்ஸவத்தில் அங்குரார்ப்பணத்திற்காக) மண் எடுப்பதையும் அதற்கு நிர்வாஹகராயிருப்பதையும் ஏற்றுக்கொள்ளுங்கள் (கைங்கரியத்தில் ஈடுபடுங்கள் என்றபடி).

[3] திருவாய்மொழி. 10—9—9

[4] प्रक्रिया—முறை. [5] प्रतिबन्धक—இடையூறு.

[6] ஸகா தாஸோஸ்மி (யு. 40. 10) தோழனும் அடிமையுமாயிருக்கிறேன்.

ரம் பெருமாளுக்கு ஶரணாகத-லாபமாகிற புருஷார்த்தம் பிறந்தபடியையும், "தத்தமஸ்யாபயம் மயா" என்கையாலே அபயம் பெற்ற ஶரணாகதனுக்கும், இப்படி விஶேஷித்துப் பெருமாள் பாசுரமன்றிக்கே தங்களுக்கு வேறொரு உபாயமின்றிக்கே ஶரணாகதனுடைய அபிமாநத்திலே யடங்கிக் கூடவந்த நாலு ராக்ஷஸர்களுக்கும் பெருமாள் திருவடிகளைப் பெறுகையாகிற பரமபுருஷார்த்தம் பிறந்தபடியையும் [1]பர்யங்க-வித்யாதிகளில்படியே [2]பரஸ்பர-ஸம்ஶ்லேஷத்தாலேபிறந்த[3]ப்ரீதி-பரிவாஹமான [4]ஸம்வாத-விஶேஷங்களையும் எல்லாம் இந்த ஸர்க்கத்தின் [5]ஶேஷத்தாலும் மேலில் ஸர்க்கத்தில் [6]முகப்பாலுமாகச் சொல்லி, ஶரணாகதி-வேதமான ப்ரபந்தத்திலே உபநிஷத்-பாகமான அபய-ப்ரதாந-ப்ரகரணத்தைத் [7]தலைக்கட்டுகிறான் ஸ்ரீவால்மீகிபகவான்.

---

1 पर्यङ्कविद्या—கௌஷீதகீ என்கிற உபநிஷத்தில் முக்தனான ஜீவாத்மா பரமபதத்தில் ஸ்ரீமந் நாராயணனோடு சேரும் ஸமயத்தில் நடப்பவைகளைப்பற்றி சொல்லும் பாகம்.

2 ஒருவருக்கொருவர் உண்டான சேர்க்கை.

3 प्रीतिपरिवाह—அன்பின் பெருக்கு.

4 संवाद—ஸம்பாஷணை. 5 மிகுதி.

6 ஆரம்பம். 7 முடிக்கிறான்.

அவ்விடத்தில் தாம் முற்பட நினைத்த தொன்றை விலக்கவல்லாரில்லாதபடியான [1]நிரங்குஶ-ஸ்வாதந்த்ர்யத்தை யுடைய பெருமாள் ஆச்ரித-பரதந்த்ரராய் மஹாராஜரையும் முதலிகளையும் தெளிவித்து "ஆநயைநம் ஹரி-ஶ்ரேஷ்ட" என்று அருளிச்செய்த உறவுடைமையிலும் நீர்மையிலும் ஈடுபட்ட மஹாராஜர் விண்ணப்பம் செய்தபடி சொல்லுகிறான்:—

[2] ராமஸ்ய து வச: ஶ்ருத்வா
ஸுக்ரீவ: ப்லவகேஶ்வர: |
ப்ரத்யபாஷத காகுத்ஸ்தம்
ஸௌஹார்த்தேநாபிசோதித: ||

ஶரணாகதனாய் இவர் கைவிடில் எங்கேனும் புகுரிலும் அழியும்படி நிற்கிற விபீஷணாழ்வானையும் இவனையழிக்க நினைத்த பரிவரையும் [3]ரமிப்பித்தபடியைப் பற்ற இங்கு (ராமஸ்ய) என்கிறது. (து) என்கிற வித்தாலே மஹாராஜருக்குக் கலக்கமும் சீற்றமுமான முன்னில் [4]அவஸ்தையைக் காட்டில் தெளிவும் ப்ரீதியுமான இதொரு அவஸ்தா-பேதம்

---

[1] निरङ्कुशस्वातन्त्र्यं—தடையில்லாத ஸ்வாதந்த்ர்யம்.

[2] रामस्य तु वचः श्रुत्वा सुग्रीवः प्लवगेश्वरः ।
प्रत्यभाषत काकुत्स्थं सौहार्देनाभिचोदितः ॥ (யு. 18. 35)
ராமனுடைய வார்த்தையைக் கேட்டு வாநராதிபதியான ஸுக்ரீவன் ஸ்நேஹத்தால் தூண்டப்பட்டவராய் காகுத்தனைப் பார்த்துச் சொன்னார்.

[3] திருப்தி செய்த [4] अवस्था — நிலைமை.

இருந்தபடியைச் சொல்லுகிறது. (ஸுக்ரீவ: ப்லவகேச்வர:) சரணாகதன் பக்கல் அபசார-ருசி தவிர்ந்த பின்பன்றோ இவருக்குப் பேரும் பெருமையும் நின்றது. (காகுத்ஸ்தம்) பராவஸ்தையில் [1]தேட்டமாய்ப் பிறந்து படைத்த நீர்மையிருந்தபடி. (ஸௌஹார்தேந அபிசோதித:)—இப்படி [2]நிருத்தரரான மஹாராஜர் பெருமானுடையவாதல் தம்முடையவாதல் ஸௌஹார்த்தம் பேசிவைக்கப் பேசுகிறார்.—

[3] *கிமத்ர சித்ரம் தர்மஜ்ஞ*
*லோகநாத ஸுகாவஹ |*
*யத் த்வமார்யம் ப்ரபாஷேதா:*
*ஸத்வவாந் ஸத்-பதே ஸ்தித: ||*

(கிமத்ர சித்ரம்)- எங்களைப் போலிகள் இப்பாசுரத்தைச் சொல்லிலன்றோ ஆச்சர்யமாவது; தேவரீரிப்படி அருளிச்செய்த விடத்

---

1 *தேட்டம்—விருப்பம்.*

2 निरुत्तर—*தனக்கு மேற்பட்ட ஒருவரில்லாதவர்; அல்லது பதிலற்றவர்.*

3 किमत्र चित्रं धर्मज्ञ लोकनाथ सुखावह |
यत् त्वमार्यं प्रभाषेथाः सत्ववान् सत्पथे स्थितः ||
(யு. 18. 36)

*ராம! நீர் தர்மத்தை அறிந்தவர்; உலகங்களை ரக்ஷிப்பவர்; ஸுகத்தைக் கொடுப்பவர்; பராக்ரமசாலியும் ஸன்மார்க்கத்தில் நடப்பவருமான நீர் இப்படி பெருந்தன்மையாகப் பேசினால், இதில் என்ன ஆச்சர்யமிருக்கிறது?*

தில் ஆச்சர்யமுண்டோ; ஸ்வபாவம் என்றிருக்குமித்தனையன்றோ? (தர்மஜ்ஞ)- [1]பணையோடு பணை தத்தித்திரிந்த எங்களாலே தேவரீர் திருவுள்ளம் பற்றியிருக்கும் தர்மங்களெல்லாம் அறியப்போமோ?

[2] ஸூக்ஷ்ம: பரமதுர்ஜ்ஞேய:
ஸதாம் தர்ம: ப்லவங்கம என்று

அருளிச் செய்த தேவரீருக்கேயன்றோ தர்மத்தினுண்மை தெரிவது. (லோகநாத)—உடைமை யழியாதபடி ரக்ஷிக்கை உடையானுக்கு ஏற்றமல்லாமையாலே சரணாகதனை அபசாரம் தவிர்த்து ரக்ஷித்தீர்; எங்களை அபசாரம் தவிர்த்து ரக்ஷித்தீர். (ஸுகாவஹ)—ஸ்ரீவிபீஷணாழ்வான் தேவரீருக்கு அடிமை செய்யப் பெற, நாங்கள் அவனுக்கு அடிமை செய்யப் பெற, இரண்டு வர்க்கத்தையும் [3]க்ருதார்த்தராக்கினீர். (ஸத்வவாந்)—இதற்கு முன் கண்டறியாதபடி ஸரணாகதன் பக்கல் ஒரு தலையாகப் பரிவர் சொன்ன [4]உபபத்திகளுக்கும் [5]நிர்ப்பந்தங்களுக்கும் இளையாத [6]வ்யவஸாயத்தில் [7]திண்மை யிருந்தபடி யென்! (ஸத்-பதே ஸ்தித:)- ப்ருஹஸ்பதி-ஶிபி-ரகு-வாநர-கபோத-வஸிஷ்ட-விச்வா

---

1 கிளை. 2 48-ம் பக்கம் பார்க்க.

3 कृतार्थ—ப்ரயோஜனத்தை யடைந்தவர்கள்.

4 उपपत्ति—யுக்தி. 5 निर्बन्ध—வற்புறுத்தல்.

6 தீர்மானம். 7 உறுதி.

மித்ராதிகளான ஸத்துக்கள் நடந்த நல்வழி யான ஶரணாகத-பரித்ராண-தர்மத்திலே தேவ ரீர் நின்ற நிலை ஒருகோடி ஶரணாகதராலும் கலக்கவொண்ணாதபடியாயிருந்தது. (யத் த்வம் ஆர்யம் ப்ரபாஷேதா:)- தேவரீர் அருளிச் செய்த பாசுரத்தின் நிழலிலே யொதுங்கி புலி யும் [1]புல்வாயும் ஒரு துறையிலே நீர் உண் ணும்படி யிருந்தது.

எனக்கு மறுக்கமாட்டாமையாலே கொண் டாடுகிறீரோ; நீர் மாநஸாபசாரம் தவிரும்படி தெளிந்தீரோ வென்ன.

[2] மம சாப்யந்தராத்மா அயம்
ஶுத்தம் வேத்தி விபீஷணம் |
அநுமாநாச்ச பாவாச்ச
ஸர்வதஸ் ஸுபரீக்ஷித: ||

---

[1] கலைமான்.

[2] मम चाप्यन्तरात्माऽयं शुद्धं वेत्ति विभीषणं ।
अनुमानाच्च भावाच्च सर्वतस्सुपरीक्षितः ॥
(யு. 18. 37)

என்னுடைய இந்த மனதும் விபீஷணனை சுத்த மாகவே நினைக்கிறது: (நீர் சொன்ன) யுக்திகளாலும் (அவன் முகத்தில் காணப்படும்) அடையாளங்களாலும் அவன் உள்ளும் புறமும் பரீக்ஷிக்கப்பட்டிருக்கிறான்.

ஒருத்தராலும் தெளிவிக்க வொண்ணாத படி கலங்கின என் நெஞ்சும் தேவரீர் பாசுரங் களாலே தெளிந்து ஶரணாகதனான விபீஷ ணன் சுத்தன் என்று அறியப் பெற்றது. (அநுமாநாச்ச)- "ப்ரணதஶ்ச மஹாந் ஏஷ:" இத்யாதிகளிற்படியே [1]ஸ்வர-ப்ரஸாதாதிக ளாலும். (பாவாச்ச)-அபிப்ராய-வ்யஞ்ஜகங்க ளான மற்றுமுள்ள ஆகாரங்களாலும் என்ற படி. *நம்முடைய அந்த:கரணம் இசைந்தப டியாலும் என்னவுமாம். (ஸர்வத:)-உள்ளும் புறமும் ஒக்க வென்றபடி. அங்ஙனன்றிக்கே ராவணனுமல்லன், ராவண- [2]ப்ரேஷிதனுமல் லன், [3]ராவணாநுரக்தனுமல்லன் என்று ஸர்வ

---

* सतां हि सन्देहपदेषु वस्तुषु
प्रमाणमन्तःकरणप्रवृत्तयः என்கிறபடியே [4]

---

1 स्वरप्रसाद—குரலின் தெளிவு.

2 प्रेषित—அனுப்பப்பட்டவன்.

3 रावणानुरक्त—ராவணனிடம் ப்ரீதியுள்ளவன்.

4 ஸதாம் ஹி ஸந்தேஹ-பதேஷு வஸ்துஷு
ப்ரமாணமந்த:கரண-ப்ரவ்ருத்தய:
(ஶாகுந்தலம் 1-20)

ஒரு கார்யத்தைப்பற்ற (இதை செய்யலாமா கூடா தா என்று) ஸாதுக்களுக்கு ஸந்தேஹமுண்டானால், அவ ர்கள் மனதினுடைய போக்கே அதை நிச்சயிக்கப் போது மான ப்ரமாணம்.

ப்ரகாரத்தாலும் தெளிய வறிந்தோம் என்று மாம். (ஸுபரீக்ஷித:)-இனி ஸர்வ-ஶக்திக ரான உம்மாலும் எங்களைக் கலக்க வொண் ணாது-என்று தாத்பர்யம்.

நாம் இனி விபீஷணனுக்குச் செய்ய வேண்டுவதென்? உங்களுக்குச் செய்ய வேண் டுவதென்? இரண்டும் நீர் [1] நியமித்தல்லது நாம் செய்ய வொண்ணாது என்று பெருமாளு க்குத் திருவுள்ளத்தில் கருத்தாகக் கொண்டு விண்ணப்பம் செய்கிறார்.

[2] *தஸ்மாத் க்ஷிப்ரம் ஸஹாஸ்மாபி:*
*துல்யோ பவது ராகவ |*
*விபீஷணோ மஹாப்ராஜ்ஞ:*
*ஸகித்வம் சாப்யுபைது ந: ||*

(தஸ்மாத்)-நிர்தோஷனை வளவன்றிக் கே எங்களிலும் பரிவன் என்னுமிடம் தெளி

---

1 *ஆஜ்ஞாபித்தல்லது.*

2 तस्मात्क्षिप्रं सहास्माभिस्तुल्यो भवतु राघव ।
विभीषणो महाप्राज्ञः सखित्वं चाभ्युपैतु नः ॥
(யு. 18. 38)

*ஆகையால் மஹா புத்திமானான விபீஷணன் எங்க ளோடு கூடி ஸமானனாயிருக்கட்டும்; எங்களுக்குத் தோழ னாகவுமிருக்கட்டும்.*

கையாலும்* எங்களுக்கும் இவனுக்கும் மனோரதாதிகள் ஒத்தபடியாலும். (க்ஷிப்ரம்)- இனி இவனையொழிய ஒரு க்ஷணமும் எங்களுக்குக் கைங்கர்யம் பண்ண முயலாது; இவன்தானும் இனி ஒரு க்ஷணம் [2]விஶ்லேஷம் பொறுக்கமாட்டான். (ஸஹாஸ்மாபிஸ் துல்யோ பவது) இவன் எங்களோடு பிரிக்கப்படாதே நாங்கள் பெற்ற பேறும் பெற்று [3]"ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா வடிமைசெய்ய" த்திருவுள்ளமாயருள வேண்டும். இவனி

* ययोश्चित्तेन वा चित्तं नैभृतं नैभृतेन वा ।
समेति प्रज्ञया प्रज्ञा तयोर्मैत्री न जीर्यते ॥ என்னும்படி

[1] யயோஶ் சித்தேந வா சித்தம்
நைப்ருதம் நைப்ருதேந வா |
ஸமேதி ப்ரஜ்ஞயா ப்ரஜ்ஞா
தயோர் மைத்ரீ ந ஜீர்யதே ||
(பா. ஶ. 39–48)

ஒரு கார்யத்தைச் செய்யவேண்டுமென்கிற சிந்தை (சித்தம்), ஒன்றைச் செய்யாமல் நிஶ்சேஷ்டனாயிருப்பது (நைப்ருதம்), இவற்றிற்குக் காரணமான குணதோஷங்களை ஆராயும் புத்தி (ப்ராஜ்ஞை), இவை எந்த இருவர்களுக்கு ஒத்திருக்கின்றனவோ அவர்களுடைய ஸ்நேஹம் அழியாததாயிருக்கும்.

[2] विश्लेषः — பிரிவு.

[3] திருவாய்மொழி 3. 3. 1 இடைவிடாமல் எல்லாக் காலமும் கூடவே ஸ்திரமாயிருந்து தவறாமல் எல்லாக் கைங்கர்யங்களும் செய்ய.

ழந்த காலத்திற்கும் படியெடுத்துமாய் இப்போது கலத்திலே சோற்றையிட்டுக் கையைப் பிடித்நாப்போலே தகையுண்டு நிற்கிற க்லேஶமும் தீர, இவனொருவனுமே ஒரு தலையும் நாங்களெல்லாரும் ஒரு தலையாக விஷயீகரித்தருள வேண்டுமென்று [1]ஏகவசநத்திற்கும் [2]பஹுவசநத்திற்கும் தாத்பர்யம். (விபீஷண:)- தேவரீர் அவனுக்கு அபய-ப்ரதாநம் பண்ணினபடியாலே ராவணாதிகளெல்லாம் இவனுக்கு அஞ்சும்படி [3]யதார்த்த-நாமாவானான்.

[4] விபீஷணஸ்து தர்மாத்மா
ந து ராக்ஷஸ-சேஷ்டித: | என்கிற

தார்மிகத்வ - ப்ரஸித்தியும் தோற்றுகிறது. (மஹாப்ராஜ்ஞ:)-தர்மத்தில் நிலைகுலையாதபடி வரம் வேண்டிக்கொண்ட தெளிவுடையவன்.

[5] ஸீதாம் ச ராமாய நிவேத்ய தேவீம்
வஸேம ராஜந்-நிஹ வீத-ஶோகா: | என்று

---

[1] ஒருமை. [2] பன்மை.

[3] यथार्थनामा——அர்த்தத்திற்கேற்ற பெயரையுடையவன். (विभीषण) பயமுறுத்துவோன்.

[4] विभीषणस्तु धर्मात्मा न तु राक्षसचेष्टितः । (ஆ. 17. 24)
விபீஷணனோவெனில் தர்மமான ஸ்வபாவத்தையுடையவன்; ராக்ஷஸர்களுடைய வ்யாபாரம் அவனிடமில்லை.

[5] सीतां च रामाय निवेद्य देवीं
वसेम राजन्निह वीतशोकाः । (யு. 15. 14).
ஸீதாதேவியையும் ராமனிடத்தில் ஸமர்ப்பித்து விட்டு, நாம் இங்கு துக்கமற்றவர்களாய் வஸிப்போம்,

ராவணனுக்கும் கூட பரம்ஹிதம் சொல்லும்படிக்கீடான [1] ப்ரக்ருஷ்ட-ஜ்ஞானமுடையவன். கைங்கர்யமாகிற பரம புருஷார்த்தம் பெறுகைக்கு [2]ஸக்ருத்-கர்த்தவ்யமான [3]ஸாத்யோபாயத்தாலே வசீக்ருதராய், [4]"ராமோ விக்ரஹவாந் தர்ம:" என்னும்படியிருக்கும் பெருமாள் [5]ஸித்தோபாயமென்றும், இவர்தாமே விலக்குவாரைத் தெளிவித்து [6]ஏகரஸராக்கி இருவகைப்படாதபடி பொருந்தவிடுவாரென்றும் துணியவல்ல மஹாவிச்வாஸ ரூபமான ஞானத்தையுடையவன். (மஹாப்ராஜ்ஞ):

[7] ஸுக்ரீவஶ்-ஶங்கிதஶ்-சாஸீத்
நித்யம் வீர்யேண ராகவே | என்று

---

[1] प्रकृष्ट——சிறந்த.

[2] सकृत्कर्तव्य——ஒரே தடவை செய்யவேண்டியது.

[3] साध्योपाय—— (ஒரு பலத்திற்காக ஒருவன்) அநுஷ்டிக்கவேண்டிய உபாயம்; அதாவது இங்கு சரணாகதி.

[4] 106ம் பக்கம் பார்க்க.

[5] सिद्धोपाय——முன்னதாகவே இருக்கும் உபாயம்.

[6] ஒரே விதமான நோக்கமுள்ளவராக்கி.

[7] सुग्रीवः शङ्कितश्चासीन्नित्यं वीर्येण राघवे ।
(ரா. பா. 1. 63).

ராமனுடைய வீர்யத்தைப்பற்றி ஸுக்ரீவன் எப்போதும் ஸந்தேஹப்பட்டுக் கொண்டிருந்தார்.

எனக்குப் பிறந்த பழியில்லாதவன். இன்னும் கலங்குகிற வெங்களைப்போல இவனும் [1] அதிஶங்கை பண்ணினுனாகில், ராவணனெடுத்த கைலாஸத்தை வாலி யெறிந்த [2] துந்துபி-கங்காள-கூடம் பட்டது படுத்திக்காட்டவேண்டுமிறே தேவரீருக்கு. (ஸகித்வம் ச அப்யுபைது ந:)-காசிராஜா முதலான நாமுடைய ராஜகுமாரர்கள் பெறக்கடவ * ஸக்யத்தை காட்டுக்கெழுந்தருளப் பண்ணின பரமகாருணிகருடைய ப்ரஸாதத்தாலே ஸ்ரீகுஹப் பெருமாளும் நாமும் பெற்றாற்போலே இவனும் தேவரீருக்குத் தோழன் என்கிற தரம்பெற்று ராக்ஷஸ ஜாதியில் கூடல் துவக்காலுள்ள [3] வழுவறும்படி பண்ணியருளவேண்டும். நாங்கள் 'அடியோம்' என்றால் உண்மையாகிலும் தன் நீர்மையாலே இவன் இசையான்; எங்களுக்குத் தோழன் என்றாகிலும் தேவரீரைப்போலே இவனும் இசையும்படி பண்ணியருளவேண்டும்-என்றதாகவுமாம். [4] "ஸகா தாஸோஸ்மி" என்னுமவராகையாலே நாங்

---

[1] अतिशङ्का — ஸந்தேஹம்.

[2] दुन्दुभिकङ्कालकूट — துந்துபி என்னும் அஸுரனின் எலும்புக்கூடு. [3] வழு—தோஷம்.

[4] 145ம் பக்கம் பார்க்க.

* பேற்றை என்றும் பாடமுண்டு.

கள் அடியோமாக வேண்டும் என்று இவருக் குத் தாத்பர்யம். (அப்யுபைது)-[1]வைச்ரவ ணன்-தம்பியான மேன்மையை யிட்டு அநாத ரியாதே வாநரங்களை யடிமைகொள்ள விவ ரை நினைப்பிடும்படி பண்ணியருளவேண்டும் என்று கருத்து. இத்தால் [2]தேஹாத்ம-ப்ரமம் முதலான [3]அல்வழக்குகளெல்லாம் கழித்து [4]பாகவத-ஶேஷத்வ-பர்யந்தமான பகவச்-சே ஷத்வத்திலே நிலை நின்றவராகையாலே [5]மஹாராஜர் பெருமாள் திருவடிகளிலே விபீ ஷணாழ்வானைச் சேர்த்து, தாம் அவனுக்கு அடிமை செய்ய மநோரதிக்கிறார்.

இப்படி ஶரணாகதனை விபீஷணாழ்வா னுக்கு அபேக்ஷிதத்தையும், [6]"நிவேதயத மாம் க்ஷிப்ரம்" என்று அவன் இரந்தபடியே

---

1 वैश्रवण — குபேரன்.

2 देहात्मभ्रम — சரீரமே ஆத்மா என்று நினைக்கும் தவ றான எண்ணம்.

3 விபரீதவாதங்கள்.

4 भागवतशेषत्वपर्यन्त — பகவானிடத்தில் அன்பு பூண் ட பாகவதர்களுக்கு தாஸனாயிருக்குமளவான.

5 भगवच्छेषत्वं — பகவானுக்கு தாஸனாயிருக்குந்தன் மை.

6 56ம் பக்கம் பார்க்க.

[1]கடகரான தங்களுக்கு அபேக்ஷிதத்தையும் மஹாராஜர் விண்ணப்பம் செய்ய, அதடியாகப் பிறந்த [2]ஶரண்ய-மநோரதஸித்தி சொல்லப் படுகிறது.

[3] ததஸ்து ஸுக்ரீவ-வசோ நிஶம்ய தத்
ஹரீஶ்வரேண அபிஹிதம் நரேஶ்வர: |
விபீஷணேநாஶு ஜகாம ஸங்கமம்
பதத்ரி-ராஜேந யதா புரந்தர: ||

(ததஸ்-து ஸுக்ரீவ-வசோ நிஶம்ய தத்) கடகருடையவும் ஶரணாகதனுடையவும் ஸித்தியிற்காட்டில் மஹாராஜர் தெளிந்து விண்ணப்பம் செய்த பெரிய வார்த்தையைக் கேட்

---

1 घटक—சேர்த்துவைப்பவர்.

2 शरण्यमनोरथसिद्धि—ரக்ஷகனுடைய எண்ணம் நிறைவேறினது.

3 ततस्तु सुग्रीववचो निशम्य तत्
हरीश्वरेणाभिहितं नरेश्वरः ।
विभीषणेनाशु जगाम सङ्गमम्
पतत्रिराजेन यथा पुरन्दरः ॥ (யு. 18-39).

பிறகு நராதிபனான ராமன் ஸுக்ரீவனுடைய வார்த்தையைக் கேட்டு, வாநரராஜனான அவன் சொன்னபடி, பக்ஷிராஜனான கருடனோடு இந்த்ரன் சேர்வதுபோல, விபீஷணனோடு சீக்கிரமாகக் கூடினார்.

டருளின பின்பு, இவர்கள் காட்டித்தர நாம் இப்பேறு பெற்றோம் என்று பெருமாளுக்குப் பிறந்த ஸித்திவிசேஷத்தினுடைய ஏற்றம் இருந்தபடி. (தத:)- ஶாஸ்த்ரமும் தம்முடைய வ்ரதவிசேஷமும் நிற்க, இப்போது தோழன்மார் வாக்யமே ஶரணாகத-பரிக்ரஹத்திற்குக் காரணம் என்று கைக்கொண்டருளினார் என்று தாத்பர்யம். (நரேஶ்வர:)-ஶரணாகத-ரக்ஷணைத்திற்கு முடிசூடின ரகுவம்ஶத்திலே பிறந்த பிறவி இப்போது நிலை நின்றது என்றிருந்தார். 'ஹரீஶ்வரேண அபிஹிதம் விபீஷணேந ஸங்கமம் ஜகாம' என்று அந்வயம். "தஸ்மாத் க்ஷிப்ரம்" என்கிற ஶ்லோகத்திலே மஹாராஜர் விண்ணப்பம் செய்த விபீஷணாதிகளுடைய மநோரத-ஸித்தி [1] ஆநுஷங்கிக-பலமாக, ஸ்ரீ விபீஷணாழ்வானோடே தமக்குண்டான சேர்த்தியைத் தம் பேறாகப் பெற்றார். (ஆஶு)- ப்ரதிபந்தகங்களெல்லாம் கழிந்தால் [2]ஸ்வரூப-ப்ராப்தத்திற்கு [3]விளம்பமில்

---

[1] आनुषङ्गिकफल— (ப்ரதாநமாயில்லாமல்)இரண்டாம் பக்ஷமான பலமாக.

[2] स्वरूपप्राप्त— (ஒரு ஹேதுவில்லாமல்) தன்னடைவிலே கிடைக்கவேண்டியது.

[3] विलम्ब:—காலதாமதம்,

லையிறே. இது பெருமாளுடைய [1] த்வராதிஶயம் சொன்னபடியாகவுமாம். (பதத்ரி-ராஜேந யதா புரந்தர:)-தன்னில் ஸர்வ-ப்ரகாரத்தாலும் பெரியனை [2] பெரியதிருவடியோடே இந்த்ரன் உறவுபண்ணினபோது இந்த்ரனுக்குப் பேறானாற் போலே, பெருமாள் ஶரணாகத-லாபத்தைத் தமக்கு [3] நிர்யத்ந-ஸித்தமான [4] அலப்ய-லாபமாகத் திருவுள்ளம் பற்றினார் என்று தாத்பர்யம்.

---

இதி

ஶரண்ய-ஶரணாகத-ஸங்கம-லாப:

|| நவமோதிகார: ||

---

1 त्वरातिशय—அதிகமான விரைவு.

2 பெரிய திருவடி என்று வாஹனமான கருடனுக்கு ஸம்ப்ரதாயப் பெயர்.

3 निर्यत्नसिद्ध—முயற்சியில்லாமல் கிடைத்த.

4 अलभ्यलाभ— கிடையாதது கிடைத்தல்.

# 10. ப்ராப்தி-ப்ரகார-ப்ரபஞ்ச:

இப்படி ஒன்றாலும் [1]ப்ரதிபந்திக்க வொண்ணாத ஒரு உக்தி-விஶேஷத்தாலே யதா-ப்ரமாணம் ஶரணாகதன் கோலின பலம் ஸித்தித்தபடியைப் பொதுவிலே சொல்லி, மேல் [2]ப்ராப்தி-ப்ரகாரத்தை விவரிக்கிறான்.

[3] ராகவேணாபயே தத்தே
ஸந்நதோ ராவணாநுஜ: |
விபீஷணோ மஹாப்ராஜ்ஞ:
பூமிம் ஸமவலோகயந் ||

(ராகவேண)-மேன்மைகொண்டு அபய-ப்ரதாநம் பண்ணவேண்டியிருக்க, அணுக வொண்ணாதென்கிற பயம் தீரும்படி பரிக்ரஹித்த அவதார-தஶையில் நீர்மை விஞ்சி யிருந்தது. [4]'தத்தம் அஸ்ய அபயம் மயா' என்று தாம் அருளிச்செய்தது போராமே, [4]'ஆநயைநம் ஹரிஶ்ரேஷ்ட' என்று மஹாராஜரை

---

[1] தடுக்க.

[2] प्राप्तिप्रकारः—அடைந்த விதம்.

[3] राघवेणाभये दत्ते सन्नतो रावणानुजः।
विभीषणो महाप्राज्ञः भूमिं समवलोकयन्॥ (யு. 19. 1.)

ராகவனால் அபயம் கொடுக்கப்பட்டவுடன், ராவணனுக்குப் பின்தோன்றினவனும் அதிக புத்திமானானவனுமான விபீஷணன் பூமியை நாற்புறமும் சுற்றிப்பார்த்து வணங்கினான்.

[4] 142ம் பக்கம் பார்க்க.

யும் முன்னிலையாக்க அவரும் [1]'அஸ்மாபிஸ்-துல்யோ பவது' என்று விண்ணப்பம் செய்ய; இப்படி முதலிகளும் இசைய, பெரிய திரு வோலக்கத்திலே எழுந்திருந்து 'ஸ்ரீவிபீஷணாழ்வானுக்கு அருளப்பாடு' என்ற பின்பு பெருமாள் பண்ணின அபய-ப்ரதானம் நிலை நின்றதாயிற்று என்று தோன்றுகைக்காக இங்கே (அபயே தத்தே) என்று அநுவதிக்கிறது. (ஸந்நத:)- [2]'ஸம்யங் நத:'—ஶரண்யனுடைய நிலையுடைமையிலும் நீர்மையிலும் மிகவும் ஈடுபட்டு [3]"தாழ்ச்சி மற்றெங்கும் தவிர்ந்து அவன் தாளிணைக்கீழ் வாழ்ச்சி" பெற்றான். அருளப்பாட்டுக்குந் தூரத்திலே உசிதோபசாரம் பண்ணினான் என்னவுமாம். (ராவணாநுஜ:) [4]"ந நமேயம்" என்று இருக்கக் கடவ [5]"வணங்கலிலரக்கன்" கிடந்த வயிற்றில் கிடந்தவனுக்கு வரப்ரபாவத்தாலே வந்த வகுத்த விஷயத்தில் வணக்கமிது. (விபீஷண:)—ஒரு வயிற்றிலே கிடக்கச்செய்தே *கும்பகர்ண

* விபீஷணஸ்து தர்மாத்மா
ந து ராக்ஷஸ சேஷ்டித: [6] என்று

---

[1] 152ம் பக்கம் பார்க்க.

[2] सम्यङ् नतः—மிகவும் வணங்கினான்.

[3] திருவாய்மொழி (3-2-4).

[4] न नमेयं (யு. 36. 11) நான் (பிறருக்கு ஒருக்காலும்) வணங்கேன்.

[5] தி. மொ. 9. 8. 5. [6] 154ம் பக்கம் பார்க்க.

திகளிற் காட்டில் வேறொரு ஜாதியாகப் பேர் பெற்றவன். (மஹாப்ராஜ்ஞ:) — தான் க்ஷணம் விளம்பிக்கில் பெருமாள் தரிக்க மாட்டார் என்று தூரத்திலே [1] இங்கிதம் கொண்டு அறியவல்ல பேரறிவாளன். (பூமிம் ஸம வலோகயந்)- பெருமாளுடைய ஶரணாகத-வாத்ஸல்யத்தையும் முற்பட்ட வாநர முதலிகள் பெற்ற பேற்றையும் கண்டு தான் துஷ்ப்ரக்ருதிகளான ராவணாதிகளையும் திருத்தலாமோவென்று ஹிதோபதேஶார்த்தம் [2] ஆந்ருஶம்ஸ்யத்தாலேயும் வாத்ஸல்யத்தாலேயும் இத்தனை காலம் கால் தாழ்ந்ததற்கு லஜ்ஜித்துக் கவிழ்தலையிட்டான். முன்பு கல்லும் தடியுமாய் நின்ற வோலக்கத்தைப் பார்க்க வஞ்சி நின்றான்; இப்போது முதலிகளெல்லாம் முக்த விஷயத்தில் [3] ஆதிவாஹிகரைப்போலே [4]"போற்றி" [5]"பல்லாண்டு" என்று நின்ற நிலையைக் கண்டு ஶரண்யன் இருந்த திவ்ய-தேசத்தினுடைய ப்ரபாவம் இருந்தபடியென் என்று

---

[1] इङ्गित—குறிப்பு. [2] आनृशंस्य—கருணை.

[3] आतिवाहिक—பரலோகத்திற்கு அழைத்துச் செல்வோர்.

[4] வாழ்க. (திருப்பாவை. 24)

[5] நீடு வாழ்க.

பார்த்தான் என்னவுமாம்; கல்லும் தடியும் புகட்டு, கையும் அஞ்ஜலியுமாய் எதிர்கொள்ள நிற்கிற ஓலக்கத்திலே தண்டனிட இடம்பார்த்தான் என்னவுமாம். இச்சுலோகத்திற்கு 'ஸந்நத:' என்று வாக்யார்த்தம் தலைக்கட்டுகிறது. 'காத் பபாத' என்று மேலே அந்வயிக்கவுமாம்.

[1] காத் பபாத அவநிம் ஹ்ருஷ்ட:
பக்தைரநுசரைஸ்-ஸஹ ||

தனக்கு [2]சேஷபூதருமாய் பரதந்த்ரருமாயிருக்கையாலே தன் கைகளும் கால்களும் போலே தன்னிலே செருகி தனித்தோர் உபாய-பலங்களில்லாத நாலு ராக்ஷஸரோடே கூட உத்தேஶ்யமான திருவடிகளளவும் செல்லவொண்ணாதபடி ஹர்ஷ-பாரவஶ்யம் தள்ள திருவடிகளோடே பிறவித்துவக்குடைத்தான பூமியிலே விழுந்தான். பண்டு ராவண-ஸ்தாநத்திலே விழுந்து ஏறிட்டுக்கொண்ட [3]ரஜஸ்ஸெல்லாம் போம்படி [4]அமாநவ-கர-ஸ்பர்ஶம்போலே அத்யந்த-[5]ஶோதகமான திரு

---

[1] खात्पपातावनिं हृष्टः भक्तैरनुचरैस्सह (யு. 19-1½)
(தன்னிடம்) பக்தியுள்ள தன் ஆட்களோடு கூட ஸந்தோஷத்தோடு பூமியில் இறங்கினான்.

[2] उद्देश्य—விரும்பப்பட்ட. [3] புழுதி; ரஜோகுணம்.

[4] 142ம் பக்கம் பார்க்க; விரஜை என்னும் நதியின் கரையிலுள்ள கடவுளான அமாநவனுடைய (பாபத்தை யெல்லாம் போக்கும்) கையின் ஸ்பர்ஶம்.

[5] शोधक—பரிசுத்தம் செய்கிற.

முன்பில் பூமியிலே விழுந்து, திருவடிகளை ஸ்பர்ஶிக்கைக்கு யோக்யனாய், பின் எழுந்திருந்து வந்து, திருவடிகளிலே தலை சாய்க்க விழுந்தபடி சொல்லுகிறான்.

[1] ஸ து ராமஸ்ய தர்மாத்மா
நிபபாத விபீஷண: |
பாதயோ ஶ்-ஶரணாந்வேஷீ
சதுர்பிஸ்-ஸஹ ராக்ஷஸை: ||

(ஸ து)-[2] லீலாவிபூதியிலேயுள்ள சிலர் [3] யூயம் யூயம் வயம் வயம்'' என்கிறபடியே வந்தேறிகளான பந்துக்களோடு துவக்கற்று, ஸம்ஸார-ஸமுத்திரத்தைக் கடந்து, [4] விஷ்ணு-பதத்தைக் கிட்டினால் பிறக்கும் வேறுபாடுபோலே யிருந்தது. (ராமஸ்ய)-விபீஷணாழ்வானுக்கு பஹுமுக-பரிபவத்தாலே பிறந்த பரிதாபமெல்லாம் கழியும்படி ரமணீயமாயிருந்தது. [5] ''தயரதன் பெற்ற மரகதமணித் தட'' மிறே. (தர்மாத்மா)-பழயபோலிகளான தர்ம

---

1 स तु रामस्य धर्मात्मा निपपात विभीषणः ।

पादयोश्शरणान्वेषी चतुर्भिस्सह राक्षसैः ॥ (யு 19. 2)

தர்மாத்மாவான விபீஷணன் ரக்ஷையை விரும்பினவனாய் (தன்னுடன் வந்த) நான்கு ராக்ஷஸர்களோடும் ராமனுடைய திருவடிகளில் விழுந்தான்.

2 लीलाविभूति——ஸர்வேச்வரனுக்கு விளையாட்டினால் லீலாரஸத்தை யளிக்கும் ப்ராக்ருத உலகங்கள்.

3 यूयं यूय वयं वयम्. (வி. த ?)

நீங்கள் நீங்களே (வேறு); நாங்கள் நாங்களே (வேறு).

4 विष्णुपद——ஸ்ரீவைகுண்டம். 5 திருவா மொ. 10-1-8

ங்கள் போலன்றிக்கே யிருக்கிற ஶரணாகதி-தர்மம் ஒரு வடிவு கொண்டாற்போலே யிருந்தான். (பாதயோஃ-ஶரணாந்வேஷீ)-[5]"தன்மை பெறுத்தித் தன் தாளிணைக் கீழ்க் கொள்ளுமப்பன்" திருவடிகளிலே தனக்கு நிலைநின்ற புகலிடத்தை யாசைப்பட்டான். 'பாதயோர் நிபாத' என்று அந்வயிக்கவுமாம். இது ஸ்ரீவைகுண்டநாதன் திருவடிகளை முக்தன் பெறும்படிக்கு[1]மூதலிப்பு. இப்படி ஒருவன் ஶரணாகதனாய் திருவடிகளைப் பெறும்போது, அவனைப் பற்றினார்க்கும் அவனுடைய [1]ஆத்மாத்மீய-பர-ஸமர்ப்பணத்திலே துவக்குண்டானபடியினாலே, தனித்து ஶரணாகதி பண்ண வேண்டாதே தனித்து பரீக்ஷிப்பாருமின்றிக்கே ராஜஸேவகருடைய [3]ஸ்தநந்தயருக்குப் போலே புருஷார்த்தலாபம் துல்யமாம் என்று

[4]பஶுர்-மநுஷ்ய:பக்ஷீவாயே ச வைஷ்ணவ-ஸம்ஶ்ரயா: |
தேநைவ தே ப்ரயாஸ்யந்தி தத் விஷ்ணோ: பரமம் பதம் ||

இத்யாதிகளில் சொல்லுகிற ஶாஸ்த்ரார்த்தத்தை வெளியிடுகிறான் (சதுர்ப்பிஸ்ஸஹராக்ஷஸை:).

---

1 மூதலிப்பு—ஸாக்ஷயம்—[5](திருவா. மொ. 3-7-7).

2 आत्मीय—தன்னைச் சேர்ந்தவர்.

3 स्तनन्धय—பால் மணம் மாறாத குழந்தை

4 पशुर्मनुष्यः पक्षी वा ये च वैष्णवसंश्रयाः ।
तेनैव ते प्रयास्यन्ति तद्विष्णोः परमं पदम् ॥

பசுவோ, மனிதனோ, பக்ஷியோ எவர்கள் வைஷ்ணவனை ஆச்ரயிக்கிறார்களோ, அவர்கள் அந்த வைஷ்ணவனை அடைந்ததனாலேயே விஷ்ணுவினுடைய பரமபதத்தை அடைகிறார்கள். (ஶாண். ஸ். 1. 15).

இப்படி [1]ஸபரிகரனை ஸ்ரீவிபீஷணாழ்வான் பெருமாள் திருவடிகளைப் பெற்றபடி சொல்லி, முக்தனுக்கும் ஸ்ரீவைகுண்டநாதனுக்கும்போலே ஸ்ரீவிபீஷணாழ்வானுக்கும்பெருமாளுக்கும் பிறந்த ஸம்வாத-முகத்தாலே [2]ப்ராப்தி-ரஸ-பரீவாஹத்தை உதாஹரிக்கிறான்:—

அப்ரவீச்ச ததா வாக்யம்
 ராமம் தத்ர விபீஷண: |
தர்மயுக்தம் ச யுக்தம் ச
 ஸாம்ப்ரதம் ஸம்ப்ரஹர்ஷணம் ||
அநுஜோ ராவணஸ்யாஹம்
 தேந சாஸ்ம்யவமாநித: |
பவந்தம் ஸர்வ-பூதாநாம்
 ஶரண்யம் ஶரணம் கத: ||

---

1 सपरिकर——பரிவாரத்தோடு கூடினவனை

2 प्राप्तिरसपरीवाह——கூடினதுமுண்டான ப்ரீதியின் பெருக்கு.

3 अब्रवीच्च तदा वाक्यं रामं तत्र विभीषण: ।
धर्मयुक्तं च युक्तं च सांप्रतं संप्रहर्षणम् ॥
अनुजो रावणस्याहं तेन चास्म्यवमानित: ।
भवन्तं सर्वभूतानां शरण्यं शरणं गत: ॥

அப்பொழுது ராமனைப் பார்த்து தர்மத்தோடு கூடியதும் தகுதியானதும் அப்போதே திருப்தியைக் கொடுப்பதுமானவார்த்தையை விபீஷணன் சொன்னான்.

நான் ராவணனின் தம்பி. அவனால் அவமானம் செய்யப்பட்டவனாயிருக்கிறேன். ஸகல பூதங்களுக்கும் ரக்ஷகனான உம்மை சரணமடைந்தேன்.

[1] பரித்யக்தா மயா லங்கா
மித்ராணி ச தநாநி ச |
பவத்-கதம் மே ராஜ்யம் ச
ஜீவிதம் ச ஸுகாநி ச ||
தஸ்ய தத் வசநம் ஶ்ருத்வா
ராமோ வசநம் அப்ரவீத் |
வசஸா ஸாந்த்வயித்வைநம்
லோசநாப்யாம் பிபந்நிவ ||
ஆக்யாஹி மம தத்வேந
ராக்ஷஸாநாம் பலாபலம் ||

(அப்ரவீச்ச)-திருவடிகளிலே ஆத்மாத்மீய-பர-ஸமர்ப்பணம் பண்ணுகையாலே *மநஸ்ஸு படைத்த ப்ரயோஜனம் பெற்முன்.

---

* तच्चित्तं यत्तदर्पणं என்கிறபடியே [2]

---

[1] परित्यक्ता मया लङ्का मित्राणि च धनानि च ।
भवद्गतं मे राज्यं च जीवितं च सुखानि च ॥
तस्य तद्वचनं श्रुत्वा रामो वचनमब्रवीत् ।
वचसा सान्त्वयित्वैनं लोचनाभ्यां पिबन्निव ॥
आख्याहि मम तत्त्वेन राक्षसानां बलाबलम् ॥

(யு. 19: 3-7)

லங்கையும் சிநேகிதர்களும் தநங்களும் என்னால் விடப்பட்டன; ராஜ்யமும் உயிரும் மற்ற ஸுகங்களும் உம்மதீனம்.

அவனுடைய அவ்வார்த்தையைக் கேட்டு மிருதுவான வார்த்தையால் அவனை ஸமாதாநம் செய்து, கண்களால் பருகுவதுபோல நோக்கினவாறே ராமன் அவனைக் குறித்துச் சொன்னார்.

ராக்ஷஸர்களுடைய உண்மையான பலம், பலமின்மை இரண்டையும் கூறுவாய்.

[2] தத் சித்தம் யத் ததர்ப்பணம். (வி. த 1-13)
ஸர்வேச்வானிடத்தில் வைக்கப்பட்டது தான் மனது.

திருவடிகளிலே விழுகையாலே ஶரீரம் படைத்த பலம் பெற்றான். இப்போது வாக்-இந்த்ரியமும் க்ருதார்த்தமாம்படி பெருமாளுக்கு ஒரு வார்த்தை விண்ணப்பம் செய்யப் பெற்றான். (தத்ர)-ஸந்துஷ்டனை ஸ்வாமிக்கு அடையாளமாக [1]"திஶத்யாஸநமப்யாஶே" என்று நீதிஶாஸ்த்ரத்தில் சொல்லுகிறபடியே பெருமாள் காட்ட இளைய பெருமாளுக்கும் மஹாராஜருக்கும் அணுகத் துணுக்கிடும்படியான திருவடிபக்கத்திலே.(ததா)-பெருமாளுக்கு [2]குஶல-ப்ரஶ்நம் பண்ண இடம் கொடுத்திலன். (ராமம்)-முன்பு 'நிவேதயத' என்று முதலிகளை முன்னிலையாக்கி விண்ணப்பம் செய்தான்; இப்போது[3]'அஸ்மாபிஸ்-துல்யோபவது' என்று மஹாராஜர் கொடுத்த தரம் பெற்றவனாகையாலே பெருமாள் தம்முடனே வார்த்தை சொல்லப் பெற்றான். (விபீஷண:)-பெருமாளுடனே இவன் [4]ஏகாந்தத்திலே வார்த்தை சொல்லுகிறபோது ராவணன் வழியிலொதுங்கின

---

1 दिशत्यासनमभ्याशे—(நீதிஶா) ஸமீபத்தில் இடம் கொடுக்கிறான்.

2 कुशलप्रश्नं—க்ஷேமம் வினவுதல்.

3 152ம் பக்கம் பார்க்க.

4 एकान्त—தனிமையிலே.

ராக்ஷஸர்க்கெல்லாம் குடல் கரிக்கும் படியாயி ற்று; பெருமாள் இவனுக்கு அபயப்ரதாநம் பண்ணின பின்பு இவன் பயமெல்லாம் இவன் விரோதிகள் நெஞ்சிலே குடிப்புக்கது. (தர்ம-யுக்தம் ச)-இவனுடைய தர்ம-விஶேஷம் இரு ந்தபடி: பலத்தைக் கொடுத்து நஶியாதே இவர் பேர் சொன்னாரையெல்லாம் ரக்ஷிக்கும் படி [1]"ந ஜாது ஹீயதே" என்கிற நிலையிலே நின்றது. க்ருதஜ்ஞதையாகிற நிலை நின்ற தர்ம த்தோடே கூடி யிருந்ததென்னவுமாம். (யுக் தம் ச)-தன் க்ருதஜ்ஞதைக்கும் [2]பரிஷத்தி னுடைய மதிப்புக்குமீடாக பெருமாள் திரு முன்பே விண்ணப்பம் செய்தால் கேட்டாருகந்த படி [3]"செவிக்கினிய செஞ்சொல்லான" (வாக் யம்)-வார்த்தையை. (ஸாம்ப்ரதம் ஸம்ப்ரஹர் ஷணம்)-இதற்கு மேலொரு பலம் கணிசிக்க வேண்டாதே * இப்போதே [4]அநுபவ-ஸாரஸ்ய மே [5]அதிவேலமாயிருக்கை.

---

मन:प्रीतिरनायासात् என்கிறபடியே [6]

---

1 न जातु हीयते—(ஸ்தோ. ர. 28) ஒருக்காலும் அழிகிறதில்லை.

2 परिषत्—ஸபை. [3] திருவா. மொ. 10—6—11

4 அநுபவத்தின் இன்பம்.

5 अतिवेल—கரைபுரண்டிருக்கை.

6 மந:-ப்ரீதிரநாயாஸாத் | (வி. த. 68. 3) ஒரு முயற்சியின்றியிலேயே மனதிற்கு ப்ரீதியைத் தருகிறது.

மேலிரண்டு ச்லோகங்களும் த்வயத்தில் [1] பூர்வோத்தர-கண்டங்களை விவரிக்கின்றன: (அநுஜோ ராவணஸ்ய அஹம்)-த்ரைலோக்யமும் கூடிக்கேட்க வொண்ணாதபடி [2] அந்யாய-காரியாய்க் கதறுவித்த ராவணனுக்குப் பின் பிறந்தவனாகையாலே அவன் வாஸத்தாலே [3] தூஷிதமான குடலிலே பிறந்தேன். (தேந சாஸ்மி அவமாநித:)-என் தோஷங்களை நேராகக் கண்டு ஸாத்விகர் அவமாநம் பண்ணப் பெற்றேனாகில் அதுவுமொரு தரமாகலாயிற்று; அங்ஙனன்றிக்கே நான் [4] பாத்ரா-பாத்ர-விவேகம் பண்ணாதே ஹிதம் சொல்லப்போனதற்கு பாபகர்மங்களுக்கு முடிசூடின ராவணன் ஆளிட்டுப் [5] பரிபவிக்க அவன் கோஷ்டிக்குமாகாதே போந்தேன். (பவந்தம் ஸர்வ-பூதாநாம் சரண்யம் சரணம் கத:) தேவரீர் [6] அநாலோசித-விசேஷாசேஷ-லோக-சரண்யரான படியினாலே ராவணனி

1 पूर्वोत्तरखण्ड—முற்பகுதி, பிற்பகுதி.

2 अन्यायकारी—அந்யாயத்தைச் செய்வோன்.

3 दूषित—தோஷமுள்ளதாகச் செய்யப்பட்ட.

4 पात्रापात्रविवेक—நல்லவன், கெட்டவன் என்கிற பகுத்தறிவு.

5 परिभव—அவமாநம் (செய்ய.)

6 अनालोचितविशेषाशेषलोकशरण्य— தாரதம்யமின்றி எல்லா ஜந்துக்களுக்கும் ரக்ஷகனாயிருப்பவன்.

லும் [1]தண்ணியனை எனக்கும் புகலிடம் ஆவீர் என்று, [2]பிதாமஹ-வர-ப்ரஸாதத்தி னாலே ஒரு-[3]வெளிச்சிறப்பு முன் காட்ட ஶர ண்ய-குண-பூர்த்தியுடைய தேவரீரை ஶரண மாக அடைந்தேன். *முன்பே ஶரணாகதி பண்ணி, †பலமும் பெற்றவன் இப்போது திரு ம்பியும் ப்ரபத்தி பண்ணுகிறானல்லன்; இது தந்நிஷ்டையை அநுஸந்தித்து, தனக்கும் கூடப் பெருமாள் புகலிடமானபடிக்குக் க்ருத ஜ்ஞையைக் கொண்டாடினபடி.

முன்பே '[4]ராஜ்ய-காங்க்ஷீ ச ராக்ஷஸ:' என்று தனக்குப் பிறந்த பழிதீரும்படி உத்தர-கண்டத்தில் படியே தன்னுடைய அநந்ய-ப்ர யோஜநத்வத்தை வெளியிடுகிறான். (பரித்ய க்தா மயா லங்கா)-எங்களுக்குக் குலக்ரமாகத மான [5]படைவீடாயிருக்க இத்தை[6]ஹரி-பாஹ் யராயிருக்கும் பால்ஹிகாதிகளுடைய தேசங்

---

* सकृदेव प्रपन्नाय இத்யாதிகளிற்படியே [7]

† दत्तमस्याभयं मया என்கிறபடியே [8]

---

1 கீழ்ப்பட்டவனை. 2 ப்ராஹ்மாவின் வரத்தால்.

3 ஞானம். 4 60ம் பக்கம் பார்க்க.

5 பாசறை; (ராஜதானி)

6 हरिबाह्य—ஸர்வேச்வரனை ஆச்ரயிக்காதவர்கள்.

7 136ம் பக்கம் பார்க்க. 8 142ம் பக்கம் பார்க்க.

ங்களை ஸத்வஸ்தரானவர்கள் விடுமாப்போலே ஸவாஸநமாக விட்டேன். (பரித்யக்தா)-[1]பரிதஸ்-த்யக்தா. அவ்வூரில் தீங்குடையவை யெல்லாவற்றையும் அருவருத்தேன். (மயா பரித்யக்தா)-நான் துவக்கற விட்டேன். தேவரீர் லங்கை யென்று பேரிட்டு ஒரு விலங்கைப் பூட்டுகிறீரோ வென்று நடுங்கா நின்றேன். (மித்ராணி ச) [2]"மித்ர-த்ரோஹே ச பாதகம்" என்னும்படி யிருக்கச்செய்தே தேவரீரோடே விரோதித்த மித்ரர்களை ஶத்ருக்கள் என்று கைவிட்டேன். (தநாநி ச)-*தநங்களையும் அவற்றோடே துவக்குத்தானே ஆபத்துக்களுக்குக் காரணமாகக் கண்டபடியினாலே விட்டேன். 'ச'காரத்தாலே †தேவரீர் திருவடிகளிலே ஸேவைக்கு விருத்தங்களெல்லாவற்றையும் விட்டேன் என்கிறான்.

---

* आपदर्थं धनं रक्षेत् என்னும்படியிருக்கிற[3]

† पितरं मातरं இத்யாதிகளிற்படியே[4]

---

1 परितस्त्यक्ता—எல்லாப் புறத்திலும் விட்டேன்.

2 मित्रद्रोहे च पातकम् கீதை. 1-38.

சிநேகிதர்களுக்கு துரோஹம் செய்வதிலிருக்கும் பாப(த்தையு)ம்.

3 ஆபதர்த்தம் தநம் ரக்ஷேத் (பார. உத். 37. 18). ஆபத்துக்களுக்காக தநத்தை ரக்ஷிக்கவேண்டும்.

4 பிதரம் மாதரம்

தந்தை, தாய், ......................(எல்லாவற்றையும் கைவிட்டு, உன் திருவடிகளை சரணமடைந்தேன்.)

நாட்டார் புருஷார்த்தமென்றிருக்கு மவற்றை யெல்லாம் விட்டேராகிலும், அவற்றினுடைய [1]இழவு நெஞ்சிலே கிடவாதோ வென்னில்; திருப்பாற்கடலிலே வாய் வைத்தவனுக்கு நாய்ப்பால் குடியாத விழவுண்டோ வென்கிறான்: (பவத்-கதம் மே ராஜ்யம் ச ஜீவிதம் ச ஸுகாநி ச). போகோபகரணங்களும், போக்தாவான வென்னுடைய ஸத்தையும், போகங்களுமெல்லாம் தேவரீரை யநுபவிக்கையாகிற மஹாஸமுத்திரத்தில் திவலைகளிலே யொதுங்கிக் கிடக்கும். இது ஸமுத்திரத்திலே [2]குளப்படியும் உண்டு என்னுமாப்போலே இருப்பதொரு பாசுரம்.

இப்படி அநந்ய-ப்ரயோஜநனை விபீஷணாழ்வானுக்கு மேல் லங்கா-ராஜ்யம் வந்தபடி யென்னென்னில், அது [3]ராமநியோகாநுபாலந-ரஸிகனை இவனுக்கு

[4] 'நின்னையேதான் வேண்டி நீள்செல்வம் வேண்டா [தான்
தன்னையேதான் வேண்டும் செல்வம்' என்கிறபடியே

வந்ததத்தனை.

---

[1] இழவு—நஷ்டம்.

[2] குளம்புச்சுவட்டில் தேங்கிய நீர்.

[3] रामनियोगानुपालनरसिक —ராமனுடைய ஆக்ஞையை நிறைவேற்றுவதில் ருசியுள்ளவனை.

[4] பெரு. தி. 5-9. உம்மையே விரும்பி, பெரிய ஐச்வர்யத்தை விரும்பாதவனை செல்வம் தானாகவே அடைய விரும்பும்.

இப்படி ஶரணாகதன் பாசுரத்திலே ஈடுபட்ட பெருமாளுக்குப் பிறந்த இரக்கத்தையும் அதடியாக அருளிச்செய்த ப்ரகாரத்தையும் சொல்லுகிறார் (தஸ்ய) இத்யாதியால். (தஸ்ய)-அநந்ய-ஶரணனாய், அநந்ய-ப்ரயோஜநனானவனுடைய. (தத்வசநம்)-[1] ஆகிஞ்சந்ய-அநந்யகதித்வ-புரஸ்காரமாக [2] த்வயார்த்த-பரமான வசநத்தை. (ராமோ வசநம் அப்ரவீத்):-

[3] த்விஶ்-ஶரம் நாபிஸந்தத்தே
த்விஸ்-ஸ்தாபயதி நாஶ்ரிதாந் |
த்விர்-ததாதி ந சார்த்திப்யோ
ராமோ த்விர்-நாபிபாஷதே || என்று

கவி பாடினால் இது பரமார்த்தமாய் இருக்கும் படி குணநிஶயமுடைய பெருமாள்-ஸ்ரீவிபீஷ

---

1 आकिञ्चन्यानन्यगातित्वपुरस्कार——எளிமை, வேறு புகலற்றமை இவற்றை முன்னிட்டுக்கொண்டு.

2 द्वयार्थपर——'த்வயம்' என்னும் மந்திரத்தின் அர்த்த பரமான.

3 द्विश्शरं नाभिसन्धत्ते द्विः स्थापयति नाश्रितान् ।
द्विर्ददाति न चार्थिभ्यो रामो द्विर्नाभिभाषते ॥

4 वक्तव्यं——சொல்லவேண்டியது.

ராமன் (ஒருதடவை குறி தவறிற்றென்று) இரண்டாம் முறை அம்பைப் பூட்டுவதில்லை; தன்னை அண்டினவர்களை இரண்டு தடவை ரக்ஷிப்பதுமில்லை; யாசகர்களுக்கு (ஒரு தடவை கொடுத்தது போதாதென்று) இரண்டு தடவை கொடுப்பதுமில்லை; ராமன் இரண்டு வார்த்தை பேசுவதுமில்லை.

ஷூழ்வான் கார்யத்தைப் பற்ற இனி ஒரு வக்தவ்யும் இல்லாமையாலே தம்முடைய அவதார-ப்ரயோஜநமான துஷ்க்ருத்-விநாஶத்திற்கு உபயுக்தமாக

[1] ஆக்யாஹி மம தத்வேந
ராக்ஷஸாநாம் பலாபலம் என்று

ராக்ஷஸ-வ்ருத்தாந்தத்தைக் கேட்டருளினர். (வசஸா ஸாந்த்வயித்வைநம்)-'நீர் இதற்கு முன்பு பட்ட சிறுமையெல்லாம் நமக்காக வன்றே? இதெல்லாம் ஏற்கனவே கோலப் பெருதே ஸாபராதரான நாமன்றே பட்டோம்' என்னுமாப்போலே இன்சொல்லாலே இவனை உருகப் பண்ணி அருளிச் செய்தார். அருளிச் செய்கிறபோது (லோசநாப்யாம் பிபந்நிவ)-[2]பெருவிடாய்ப்பட்டவன் தண்ணீரைக்கண்டால் ஒருக்காலும் விடமாட்டாதாற்போலே *அநுபவியா நின்றுகொண்டு [3]அநவதிக-தயா-ஸௌஹார்த்த-அநுராக-கர்ப்பங்களான திருக்கண்களாலே ஸ்ரீவைகுண்டநா

* 'பாரித்துத்தானென்னை முற்றப் பருகினன்' இத்யாதிகளிற்படியே. [4]

---

[1] आख्याहि मम तत्वेन राक्षसानांबलाबलम् । (யு. 19.7)

[2] மிகுந்த தாகம் கொண்டவன்.

[3] अनवधिकदयासौहार्दानुरागगर्भ —அளவற்ற இரக்கம், ஸ்நேஹம், அன்பு இவை நிறைந்த.

[4] திருவா. மொ. 9-6-10

தன் முக்தனைப் பார்த்தருளுமாப்போலே குளி ரப் பார்த்தருளி, ஆலாங்கட்டியை விட்டெறி ந்தாற் போலே அவனை "ஶீதீபூதோ நிரா மய:" என்னும்படி பண்ணிக்கொண்டு வார் த்தையருளிச் செய்தார். இதற்கு மேலுள்ள தெல்லாம் ஸ்ரீவிபீஷணாழ்வான் மனோரதித்த கைங்கர்யத்திற்கு உறுப்பான பரிப்பாகக் கண்டுகொள்வது.

² राकान्ते रुद्धलङ्कश्च्युतफणिकदनो धूम्रदृग्वज्रदंष्ट्रौ
भङ्क्त्वाऽकंपं प्रहस्तं दशमुखमकुटं कुम्भकर्णातिकायौ
ब्रह्मास्त्रच्छिन्नकुम्भादिकमथ मकराक्षं च हत्येन्द्रशत्रुं
जित्वा घस्रैस्त्रिभिस्तं सहबलमवधीद् रावणं रामभद्रः ॥

---

¹ शीतीभूतो निरामयः (பார. ஶா. 194–28) குளிர்ந்து ஸந்தகமுள்ளவனாக (ஆகிறான்).

² ராகாந்தே ருத்த-லங்கஶ்-ச்யுத-பணி-கதநோ
தூம்ர த்ருக்-வஜ்ர தம்ஷ்ட்ரௌ
பங்க்த்வா அகம்பம் ப்ரஹஸ்தம் தஶமுக-மகுடம்
கும்பகர்ணாதிகாயௌ |
ப்ரஹ்மாஸ்த்ர-ச்சின்ன-கும்பாதிகம் அத
மகராக்ஷம் ச ஹத்வேந்த்ரஶத்ரும்
ஜித்வா கஸ்ரைஸ்-த்ரிபிஸ்-தம் ஸஹபலமவதீத்
ராவணம் ராமபத்ர: ||

பூர்ணிமையின் முடிவில் லங்கையைத் தகைந்து, நாகபாசத்திலிருந்து விடுபட்டு, தூம்ராக்ஷன், வஜ்ரதம்ஷ்ட்ரன், அகம்பன், ப்ரஹஸ்தன் முதலியோர்களை முடித்து, ராவணனுடைய கிரீடங்களைத் தள்ளி, கும்பகர்ணன், அதிகாயன், முதலியோர்களை ப்ரஹ்மாஸ்த்ரம் முதலிய பாணங்களால் நாசம் செய்து, பிறகு மகராக்ஷன், இந்த்ரஜித்து முதலியோர்களைக் கொன்று மூன்று நாட்களில் ராவணனையும் அவனுடைய ஸைந்யங்களோடு ராமன் கொன்றார்.

[1] अपदिश्य वेङ्कटेशं स्वहस्तसंसक्ततूलिकातुल्यं ।
अभयप्रदानसारं गुरुप्रसादः स्वयं व्यलिखत् ॥

[2] பொன்னை யிகழ்ந்து மிருகங்கள் புல்லியபுல்லுகந்தால்
மன்னரெடுப்பதப் பொன்னலதே, மன்னுலகனைத்தும்
தன்னை யடைந்திடத்தானருள்செய்யும்தனிச்சிலையோன்
பொன்னடி நாமடைந்தோம் புறமாற்றென் கொல்செய்
(திடிலே

[1] அபதிஶ்ய வேங்கடேஶம்
ஸ்வஹஸ்த-ஸம்ஸக்த-தூலிகா-துல்யம் |
அபய-ப்ரதாந-ஸாரம்
குரு-ப்ரஸாத: ஸ்வயம் வ்யலிகத் ||

தங்கள் கையில் அகப்பட்ட எழுதுகோல் போன்றவரான வேங்கடேஶன் என்கிற ஸ்ரீதேசிகனை ஒரு வ்யாஜமாக வைத்துக்கொண்டு, ஆசார்யர்களின் அநுக்ரஹமானது தானே இந்த அபய-ப்ரதாந-ஸாரம் என்னும் க்ரந்தத்தை எழுதிற்று. (ஆசார்யர்களின் அநுக்ரஹம் எழுதிவைக்க இது எழுதப்பட்டது).

[2](ஸகல லோகாதரணீயமான)ஸ்வர்ணத்தை இகழ்ந்து, மிருகங்கள் அல்பமான த்ருணம் முதலியவற்றை விரும்பினாலும், ரத்நவாசியறியும்) அரசர்கள் எடுத்துக் கொள்வது அப்பொன் தவிர வேறில்லையல்லவா! அது போல (விவேகிகளான) நாமும் இவ்வுலகில் உயர்ந்தோர் தாழ்ந்தோர் எல்லோரும் தன்னை ஆச்ரயிக்க, அவர்களுக்கு அருள் செய்கிற ஒப்பற்ற வில்லாளியான ஸ்ரீராமனுடைய அழகிய திருவடிகளை யடைந்தோம். வேறு வழிகளைச் செய்வதால் என்ன ப்ரயோஜனம் உண்டு. (அல்ப பலங்களை ஆசைப்பட்டு ஓடினால் நாமும் மிருகங்கள் போலாவோமேயொழிய, நிலை நின்ற ஒரு ப்ரயோஜநமும் இல்லை யென்றபடி).

1 வேதத்திரளில் விதியுணர்ந்தோர்கள் விரித்துரைத்த
காதற்கதியையும் ஞானத்தையுங் கருமங்களையும்
சாதிக்கவல்ல சரணாகதி தனிநின்ற நிலை
ஓதத்தொடங்குமெழுத்தின்றிறத்திலுணர்மின்களே ||

2 மூவுலகுந் தன் பிழையைத்தானே சாற்ற
முனிவர்களுந் தேவர்களும் முனிந்த வந்நாள்
தாவரிதா யெங்கும் போய்த் தளர்ந்து வீழ்ந்த
தனிக்காகந் தானிரந்த வுயிர் வழங்கிக்
காவலினி யெமக்கெங்கும் கடனென்றெண்ணி
காணநிலையிலச்சினை யன்றிட்டவள்ளல்
ஏவல் பயனிரக்கமிதுக் காறென்றோது
மெழிலுடையாரிணையடிக் கீழிருப்போமே ||

இதி
ப்ராப்தி-ப்ரகார-ப்ரபஞ்ச:
த்ரிமேஷ்டா அதிகார:

---

1 வேத ஸமூஹங்களில் (சேதனர்களின் உஜ்ஜீவனத்திற்காகச்) சொல்லியிருக்கும் விதிகளை உள்ளபடி யுணர்ந்த பூர்வர்கள் (பகவத்கீதை அதன் பாஷ்யம் முதலியவற்றில்) விரிவாக உரைத்த பக்தியோகம், ஞானயோகம், கர்மயோகம் இவற்றை நிறைவேற்றி வைப்பதற்கு ஸாதனமாக அவர்களாலே அங்கீகரிக்கப்பட்ட சரணாகதி என்னும் உபாயம், அவைகளுடன் மோக்ஷத்திற்கு தனி (ஸ்வதந்த்ர) ஸாதனமாகவுமிருக்கும் ப்ரகாரத்தை ப்ரணவத்தில் தெரிந்து கொள்ளலாம். (வேதம் ஓதுவதற்காக முதலில் சொல்லப்படுகிற எழுத்தான ப்ரணவத்தில் சொல்லியிருக்கும் முறையில் தெரிந்துகொள்க).

2 மூவுலகும் (தேவதைகள், ரிஷிகள், மனுஷ்யர்கள் எல்லோரும்) தங்களுடைய பிழையை (காகத்தை ரக்ஷிப்பதற்கு சக்தியற்றமையை) தாங்களே சொல்லி, ("நீ துஷ்டன், உன்னை ரக்ஷிக்கவும் கூடாது" என்று, கோபித்துக்கொண்டு தள்ளின அந்தக் காலத்தில், தங்குவதற்கு ஒரு இடம் அகப்படாமல் எங்கும் சுற்றி, தன் திருவடி

इति
कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य
श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु
अभयप्रदानसारः
॥ संपूर्णः ॥

---

களில் விழுந்த ஒப்பில்லாப் பாபியான அந்த காகாஸுரன் (வேறொரு புருஷகாரமில்லாமல்) தானே இந்த ப்ராணனைக் கொடுத்து, (அவ்வளவில் தன் காருண்யம் அடங்காமல்) நம் திருவடிகளில் விழுந்தவிவனை எப்போதும் காப்பாற்றவேண்டுவது நம் கடமை என்று எண்ணி, (ஒரு தவறு செய்து ஒரு கண்ணை யிழந்தோம், இனி வேறொரிடத்தில் தவறு செய்தால் மற்றொன்றும் போம் என்று அஞ்சி இந்தக் காகம் தவறு செய்யாமல் க்ஷேமமாயிருக்க வேண்டுமென்று கருதி), ஒரு கண் குருடனாகை யிருக்கை என்கிற அடையாளத்தை அவன் சரணமடைந்தகாலத்தில் அநுக்ரஹித்த பரமோதாரனான பெருமானுடைய கைங்கர்யமே பரமப்ரயோஜனம்; அவ்வள்ளலுடைய க்ருபையே (இந்த மஹாபலத்திற்கு) உபாயம்; இப்படி உபதேசிக்கும் ஆசார்யர்களுடைய திருவடிகளின் கீழே இருப்போம். (அவர்களை அநுவர்த்தித்துக் கொண்டு சுகமே யிருப்போம் என்றபடி).

कवितार्किकसिंहाय
कल्याणगुणशालिने ।
श्रीमते वेङ्कटेशाय
वेदान्तगुरवे नमः ॥

அபயப்ரதாநஸாரம்
ஸம்பூர்ணம்



Swamy receiving the award from President of India on 25.3.1992

# INDEXES

## ஸ்ரீதேசிகன் அருளிச்செய்த ச்லோகங்கள்



## பாசுரங்கள்



## மூலோபாத்த ந்யாயங்கள்

## க்ரந்தங்களின் பெயர்



## ப்ரமாணஶ்லோகங்கள்



---

[1] अञ्जलिः परमा मुद्रा क्षिप्रं देवप्रसादिनी ।
सा हि सर्वत्र सर्वेषां सर्वकामफलप्रदा ॥

1. வா. யு. 73-26

2. जनस्थानस्थिता राजन् राक्षसा बहवो हताः ।
खरश्च निहतः संख्ये कथंचिदहमागतः ॥

3. इत्येवमनया स्तुत्या स्तुत्वा देवं दिने दिने ।
किंकरोस्मीति चात्मानं देवायैवं निवेदयेत् ॥

4. शरणागतिगद्यं

---

1. चतुर्विधा भजन्ते मां जनास्सुकृतिनोऽर्जुन ।
आर्तो जिज्ञासुरर्थार्थी ज्ञानी च भरतर्षभ ॥

2. सा जिह्वा या हरिं स्तौति तच्चित्तं यत्तदर्पणम् ।
तावेव केवलौ श्लाघ्यौ यौ तत्पूजकरौ करौ ॥

3. तावदार्तिस्तथा वाञ्छा तावन्मोहस्तथाऽसुखं ।
यावन्न याति शरणं त्वामशेषाघनाशनम् ॥

4 धर्मः श्रुतो वा दृष्टो वा कथितो वा कृतोपि वा ।
अनुमोदितो वा राजेन्द्र नयतीन्द्रपदं नरम् ॥

1 तर्कोऽप्रतिष्ठः श्रुतयो विभिन्ना
नैको मुनिर्यस्य मतं प्रमाणम् ।
धर्मस्य तत्वं................स पन्थाः ॥

2 न गाथा गाथिनं शास्ति बहु चेदपि गायति ।
प्रकृतिं यान्ति भूतानि कुलिङ्गशकुनिर्यथा ॥

3 त्वदङ्घ्रिमुद्दिश्य कदापि केनचिद्
यथा तथा वापि सकृत्कृतोऽञ्जलिः ।
तदैव मुष्णात्यशुभान्यशेषतः
शुभानि पुष्णाति न जातु हीयते ॥

4 द्विधा भज्येयमप्येवं न नमेयं तु कस्यचित् ।
एष मे सहजो दोषः स्वभावो दुरतिक्रमः ॥

---

1 तत: पश्यति धर्मात्मा तत्सर्वं योगमास्थित: ।
पुरा यत्तत्र निर्वृत्तं पाणावामलकं यथा ॥

2 पितरं मातरं दारान् पुत्रान् बन्धून् सखीन् गुरून् ।
रत्नानि धनधान्यानि क्षेत्राणि च गृहाणि च ॥
सर्वधर्मांश्च सन्त्यज्य सर्वकामांश्च साक्षरान् ।
लोकविक्रान्तचरणौ शरणं तेऽव्रजं विभो ॥

3 इदं पवित्रं पापघ्नं पुण्यं वेदैश्च संमितम् ।
य: पठेद्रामचरितं सर्वपापै: प्रमुच्यते ॥

1 श्लोक एवास्त्वयं बद्धो मात्र कार्या विचारणा ।
मच्छन्दादेव ते ब्रह्मन् प्रवृत्तेयं सरस्वती ॥

2 मनः प्रीतिरनायासादपुण्यस्य च संक्षयः ।
प्राप्यते पुरुषैर्ब्रह्मन् शृण्वद्भिर्भगवत्कथाः ॥

3 रामो भामिनि लोकस्य चातुर्वर्ण्यस्य रक्षिता ।
मर्यादानां च लोकस्य कर्ता कारयिता च सः ॥

4 यद्यप्येते न पश्यन्ति लोभोपहतचेतसः ।
कुलक्षयकृतं दोषं मित्रद्रोहे च पातकम् ॥

5 अश्रोत्रियः पिता यस्य पुत्रः स्याद्वेदपारगः ।
अश्रोत्रियो वा पुत्रः स्यात् पिता स्याद्वेदपारगः ॥
ज्यायांसमनयोर्विद्यात् यस्य स्यात् श्रोत्रियः पिता ॥

1 अद्य प्रभृति हे लोका यूयं यूयं वयं वयं ।
अर्थकामपरा यूयं नारायणपरा वयम् ॥

2 रामो विग्रहवान् धर्मः साधुः सत्यपराक्रमः ।
राजा सर्वस्य लोकस्य देवानामिव वासवः ॥

3 सखे राघव धर्मज्ञ रिपूणामपि वत्सल ।
अभ्यनुज्ञातुमिच्छामि गमिष्यामि यथासुखम् ॥(प. 50-56)

4 परिजनपरिबर्हाभूषणान्यायुधानि
प्रवरगुणगणाश्च ज्ञानशान्त्यादयस्ते ।
परमपदमथाण्डान्यात्मदेहस्तथात्मा
वरद सकलमेतत्संश्रितार्थं चकर्थ ॥

1 शत्रोः प्रख्यातवीर्यस्य रञ्जनीयस्य विक्रमैः ।
पश्यतो युद्धलुब्धोऽहं कृतः कापुरुषस्त्वया ॥

2 आत्मबुद्धिं समास्थाय शीतीभूतो निरामयः ।
अमृतं विरजाः शुद्धमात्मानं प्रतिपद्यते ॥

3 வி. கு. 2-25.

4 लोकनाथस्य रामस्य सखा दासोऽस्मि राक्षस ।
न मया मोक्ष्यसेऽद्य त्वं पार्थिवेन्द्रस्य तेजसा ॥

5 श्रवणं कीर्तनं विष्णोः स्मरणं पादसेवनम् ।
अर्चनं वन्दनं दास्यं सख्यमात्मनिवेदनम् ॥

6 स चापि भगवान्कण्डुः क्षीणे तपसि सत्तमः ।
पुरुषोत्तमाख्यमद्रीशं विष्णोरायतनं ययौ ॥
(வி. பு. 1-15- 52)

1

2 सर्वज्ञोपि हि विश्वेशः सदा कारुणिकोऽपि सन् ।
संसारतन्त्रवाहित्वाद्रक्षापेक्षां प्रतीक्षते ॥

3 ப. 17–15

4 धनानि रत्नानि सुभूषणानि
वासांसि दिव्यानि मणींश्च चित्रान् ।
सीतांच..............................वीतशोकाः ॥

5 सूक्ष्मः परमदुर्ज्ञेयः सतां धर्मः प्लवङ्गम ।
हृदिस्थः सर्वभूतानामात्मा वेद शुभाशुभम् ॥

## தமிழ் ப்ரமாணங்கள்



1 திருவாய்மொழி 5-1-9

# ப்ரமாண ஸங்க்ரஹம்.

## 1. ஸம்ஸ்க்ருதம்.

## 2. தமிழ் (திவ்யப்ரபந்தம்).

## ஆகாரம் தெரியவேண்டியவை

# Index of Names and Subjects.

# ஶுத்தாஶுத்தம்

| பக்கம் | வரி | அசுத்தம் | சுத்தம். |
|---|---|---|---|
| i | 19 | tertion | teration |
| 20 | 12 | समर्थ | समर्थ |
| 31 | 14 | காணுதே | காணுது |
| 40 | 12 | 75 | 73–26 |
| | 24 | 20,20 | 21:20 |
| 44 | 23 | –45 | –44 |
| 48 | 17 | ஸுக்ஷ்ம: | ஸௌக்ஷ்ம: |
| 52 | 21 | | வி.த. 2–25 |
| 56 | 13 | | யு. 17–15 |
| 57 | 9 | न्यवेद | निवेद |
| | 23 | ந்யவேத | நிவேத |
| 68 | 14 | 17–11 | 17–9 |
| 99 | 7 | டது | பட்டது |
| 102 | 14 | 18 | 17 |
| 109 | 25 | 1–5 | 1–15 |
| 115 | 21 | –27 | –28 |
| 118 | 2 | ப்ரவரு | ப்ரவ்ரு |
| | 21 | –30 | –29 |
| 138 | 22 | वाञ्छा | वाञ्छा |
| 139 | 6 | பஞச | பஞ்ச |
| 143 | 19 | சொல் சொல் | சொல் |
| 144 | 21 | ब्रत | व्रत |
| 165 | 18 | பழய | பழைய |

# ஸங்கேத விவரணம்.

| ஸங்கேதாக்ஷரம் | க்ரந்தத்தின் பெயர். |
|---|---|
| அ. | அயோத்தியாகாண்டம். |
| அதிமா. | அதிமாநுஷஸ்தவம். |
| ஆதி. | ஆதிபர்வம். |
| ஆர. | ஆரண்யகாண்டம். |
| இதி. ஸமு. | இதிஹாஸஸமுச்சயம். |
| உ | உத்தரகாண்டம். |
| உத். | உத்யோகபர்வம். |
| கிஷ். | கிஷ்கிந்தாகாண்டம். |
| ஜித. | ஜிதந்தேஸ்தோத்ரம். |
| திருப்பல். | திருப்பல்லாண்டு. |
| திருமா. | திருமாலை. |
| தி. மொ. | (பெரிய) திருமொழி. |
| திருவா. மொ. | திருவாய்மொழி. |
| பா. | பால்காண்டம். |
| பாகவ. | ஸ்ரீ பாகவதம். |
| பார. | மஹாபாரதம். |
| பாரத். ஸம். | பாரத்வாஜஸம்ஹிதை. |
| பெரியா. தி. | பெரியாழ்வார் திருமொழி. |
| பெரு. தி. | பெருமாள் திருமொழி. |
| பௌஷ். | பௌஷ்கரஸம்ஹிதா. |
| மனு. | மனுஸ்ம்ருதி. |
| யாக்ஞ. ஸம். | யாக்ஞவல்க்யஸ்ம்ருதி. |
| யு. | யுத்தகாண்டம். |
| ரா. | ராமாயணம். |
| ல. த. | லக்ஷ்மீ தந்த்ரம். |
| வரத. ஸ்த. | வரதராஜஸ்தவம். |
| வி. த. | விஷ்ணு தர்மம். |
| வி. பு. | விஷ்ணு புராணம். |
| ஶாண்டி. ஸ். | ஶாண்டில்யஸ்ம்ருதி. |
| ஸ்ரீகுண. | ஸ்ரீகுணரத்நகோசம். |
| ஸம்வர். ஸ்ம். | ஸம்வர்த்தஸ்ம்ருதி. |
| ஸு. | ஸுந்தரகாண்டம். |

